போராது. யானைக்கழுத்திலே ஏறி நெடுந்தெருவே நடக்கவேணும். அதுவே வேண்டும்போதடைய விங்கேதிரண்டிகோளாகில், முடிசூட்டி யானைக்கழுத்திலே ஏற்றினவளவேயமையாதோவென்ன; புதிய துண்பார் தனியுண்பார்களோவென்கிறார்கள். (யாஜூ) "நநூ ஷவூஜாவூஜாஃ'' என்று-இந்த ஶ்லோகவத்தை எங்கள் வாதூமிதாதிகளோடேகூட அங்கேயெழுந்தருளக்காணவேணும். (யாஜூ) (ஆயாஜூ) முகமும் முறுவலும் கஷூசிதிருநாமமும் கூராணாக டிாகூத்தோடே எழுந்தருள ஸேவிக்கவேணும்.

இப்படி ஸேவிக்கிறதுதான் யாரையென்னில்; (ராஜூ) ரஜய தீதிராஃ-என்கிறவநூத்தியாலே ஸஜ்ஜநங்களையும் கஞாண மாணங்களாலே ரஜிப்பிக்கிறவரை. (ராஜூ) "ரஜாகீ யாயாஜூ" என்கிற யாகவத்தின்படியே,எல்லாரோடுங்கூட விஹரிக்குமவராகையாலே யென்றுமாம்.

வெறும்யானைக்கழுத்திலே யெழுந்தருளுகிற ஶாத்ருமமையுமோவென்ன; (ஹதாவூதா நஜூ) வெண்கொற்றக் குடைநிழலிலே எழுந்தருள ஸேவிக்கவேணும்.(ஹதாவூதா நஜூ) "வாணாரவஷூாத வதூஸூஹாயாயாஂ ஜலிதஂயோ'' என்று-உஶரயவகூவதிமுதலான ராஜாக்களாலே ஐஹிக்கப் படுமதாயிருக்கிற வாணாரத வதூாவூதமாயிருக்கிற திருமுக மண்டலத்தை ஸேவிக்க வேணுமென்றுமாம். ... ... ... ... ... ... ... ... ... ரு.

தாத்பர்யம்.

மகாபுருஷலக்ஷணமான நீண்டகைகளையுடைய ஸ்ரீராமன், பரமதார்மிகர். அப்ரதிஹதஸங்கல்பத்தையுடையவர். ஆகையாலே, ப்ராஜாபாலனத்தில்மிகவும்ஸமர்த்தர். இவருக்கு இப்போதேபட்டாபிஷேகம் பண்ணிபட்ட யானையின் மேலேயேற்றி ராஜமார்கத்தில் எழுந்தருளப் பண்ணும் போது ஆயிராஜ்யஸூசகமான ஏகஹத்ரத்தால் கொஞ்சம் மறைந்ததிருமுகமண்டலத்தை நாங்கள், புத்ரமித்ராதிகளோடு கண்ணாறஸேவிக்க குதூஹலிகளாயிருக்கிறோமென்று ஜனங்கள் தசரத சக்ரவர்த்தியோடு சொல்லிக் கொள்ளுகிறார்கள்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அயோத்யா காண்டம் - உ - ம்-ஸர்க்கம், ௩௩ - ம் - ஸ்லோகம்.

௩௩—ப்ரிய வா தீ ச ஸதாநாம் ஸத்யவா தீ ச ராகவ: |
வ்ருத்தாநாம்ப்ராஹ்மணாநாமுபாஸிதா||௬||

அர்த்தம்.—ராகவ: - ரகுகுலதிலகரான ஸ்ரீராமன், ஸதா நாம் - ஸத்தையுடைய ஸகல பதார்த்தங்களுக்கு, ப்ரியவாதீச - இஷ்டத்தையே சொல்லுமவர், ஸத்யவாதீச - யதார்த்தத்தையே சொல்லுமவர், ப்ருதாநாம் - விசேஷார்த்தங்களை க்ரகித்த, வ்ருத்தாநாம் - பெரியோர்களான, ப்ராஹ்மணாநாம் - ப்ராம்மணர்களுக்கு, உபாஸிதா - ஸேவை (ஶுஶ்ரூஷை காலநிரீக்ஷணம் - ப்ரணிபாதம் - முதலானவை) செய்கிறவராயிருக்கிறார்.

வ்யா.—அவதாரிகை. ஒருவனொருவனுக்குக் கூறுசெய்யப்புக்கால், ப்ராஹ்மணர்கள் பக்கலிலும் குளிரவிழியாநின்றானாயிற்று. அவ்வாஸனையும், புறம்புகுடி மகனோ; நீபண்ணவேண்டி யிருக்கிறதோ வென்றும் பயத்தாலே. அவ்வளவேயன்றிக்கே, இப்பரப்புக்காகக்கடவனான பெருமாள், ப்ராஹ்மணர்கள் விஷயத்திலே ஸமிக்கும்படி. சொல்லுகிறது.

(ப்ரியவாதீச) வர்ஷகாலத்திலே ஒடுக்கமாகப்பிளந்த நிலத்திலே ஒருபாட்டம் மழைவிழுந்தாப்போலேயாயிற்று ஒருவனைக்குறித்து வார்த்தை யருளிச்செய்வதாயிருக்கும்படி.

இப்படி செய்வதுதான் ஶிஷ்யாதி பரதத்துக்காதல், திருத்தாய்மார்க்காதல், வஸிஷ்டாதிகளுக்காதலோ வென்னில்; (ஸதாநாம்) ஸத்தாயோகி ஸகலபதார்த்தங்களுக்கு மிப்படியே யிருப்பர்.

இருந்ததே குடியாகவெல்லார்க்கு மொக்க வொருவார்த்தை சொல்லி விடுமத்தனையோ வென்றால்; (ஸத்யவாதீச) அதுதான் ஸதஹிதமுமாய் அநுஷ்டாநஸாதகமுமாயிருக்கும். கீழ்ச்சொன்ன விரண்டாலும் ப்ரியஹிதங்களைச் சொன்னபடியிறே.

இவைதான் புறம்பேயொரு வ்யக்தியிலும் சேராது. அவையிரண்டும்தன்பக்கத்திலே சேர்ந்து கொண்டிருக்கிறது, அவதிதவடநா ஸார்த்த்யத்தை யுடையனான வீஶ்வரனோவென்னில்; (ராகவ:) குடிப்பிறப்பாலேயாயிற்று.

இப்படியிருக்கும்போது,இப்படிப்பட்ட ஸ்தானங்களையும்குடிப் பிறப்பையும் அநுஸந்தித்து, இவை நமக்குண்டாவதே! என்று-மதித்திருப்பரோவென்னில் ; நம்மைக்கண்டது ப்ராஹ்மணருடையாக்ஷணார்த்தமாக. ஆனபின்பு,இன்னமும் நமக்கிதுக் கேடானவளவுபோராதென்று உள்ளவளவும்பார்த்து த்ருப்தராகாதே, இன்னமுமிதுக்கேடான நன்மைகளுண்டாக வேணுமென்றறிவுடையார் வாசலிலேபோய் கால்கட்டியிருப்பர். (ஸஹஸ்ரஶாகா நாம்) நாலிரண்டுங்கற்றவளவிலே வ்யாப்தவஸிக்கையன்றிக்கே, ஒரொன்று தன்னைப்பலகாலங் கேட்டிருப்பாராயிற்று. ஸஹஸ்ரம்: ஶாகா - ஸஹஸ்ரயாஶாகா. "ஜ்ஞானவ்ருத்தாஸ்ஸமாஜநு ஸஹவ: வயவ்ருத்தாவாஸிதா:" என்றாப்போலே, "ஸவ்ருத்தஸ்ஸாத்விகாஷ்டாகு" என்று-பலர் பக்கலிலும் ஸாரக்ரஹணம் பண்ணினதாயிற்று.

(வ்ருத்தா நாம்) த்ரிவிதவ்ருத்தா நாம் - ஶீலவ்ருத்தை:-வயோவ்ருத்தை: - ஜ்ஞானவ்ருத்தை:-என்று-ஶீலத்தாலும் வயஸ்ஸாலும் ஜ்ஞானத்தாலும், அதிகராயிருப்பார்கள்.

அதுதான்அத்யயனமாத்ரம் கற்றாப்போலேயோ வென்னில்;(ப்ராஹ்மணா நாம்) க்ஷத்ரியர் ப்ராஹ்மணரைப்பற்றி, அவ்வழியாலே தத்த்வங்களையே யதாவத்தமாகப் பெறக்கடவதாயிறே இருப்பது.

ப்ராஹ்மணா நாம்-என்று-அவர்கள் பலருமாய்த்தாமிருந்தவிடத்தேவந்து கேழ்க்கும்படியானயோக்யதையுண்டானல், அவர்களைத் தாமழைத்துவிட்டோ யதேஷ்டமாய மறுத்துக்கொள்வதென்றால்; (உபாஸிதா) அவர்களிருந்த விடத்தே தாமே சென்று, அவர்கள் சொல்லும்படிக்கு அவர்கள் காலும் தம்முடைய தலையுமாயிற்றுத் தான் அநுவர்த்திப்பது.

தா

தாத்பர்யம்— ரகுவம்சதிலகரான ஸ்ரீராமன், ஸத்தையுடைய ஸகல பதார்த்தங்களுக்கும் ஐஹிகா முஷ்மிக ஸாதகமாய் ப்ரிய மாயும் ஹிதமாயு மிருப்பதையே உபதேசிப்பர். அன்றியிலே - தன் னுடைய குணங்களைப்பார்த்து மதித்திராதே, பலபேர்களால் அனே கம் தடவை பலவாறாக விசேஷார்த்தங்களை லபித்தும், வயஸ்ஸா லும் ஞானத்தாலும் அனுஷ்டானத்தாலும் பெரியோர்களுமானப்ரா ம்மணர்களிருக்குமிடம்சென்று அவர்களுக்குப் பணிசெய்தும், அவர் களுடையகாலத்தைத்பார்த்து அவர்களிடத்தில் நின்றும் தானறி யாதவிசேஷார்த்தங்களைத்தெரிந்து கொள்ளுமவர். ஆகையால்,ராஜ்ய பரணத்துக்குசக்தர்காணும் என்று ஜனங்கள் தசரதரைக் குறித்து சொல்லுகிறார்கள்.

பெரிய வாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அயோத்யா காண்டம் - ௩௦ - ம்-ஸர்க்கம், ௩ - ம்-ஶ்லோகம்.

---

ஓம் — கிம்த்வாமந்யத வைதேஹ: பிதா மே மிதிலாதிப: |
ராம ஜாமாதரம் ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம் || எ.

அர்த்தம்—ராம !- ஸ்ரீராமனே ! (ரூபத்தால் பிறரை மோஹிப்பிக்கிறவனே) மிதிலாதிப: -மிதிலைக்கு அரசனான, வைதேஹ:- விதேஹகுலத்தில் பிறந்த, மே - என்னுடைய, பிதா - தகப்பனு ரான ஜனகமஹாராஜா, புருஷவிக்ரஹம் - ஆண்சரீரத்தையு டைய, ஸ்த்ரியம் - பெண்ணான, (பெண்போலதைர்ய ஸ்வபாவத்தை யுடைய) த்வா - உம்மை, ஜாமாதரம் - மணவாளனாக, ப்ராப்ய - அடைந்து, கிமமந்யத - என்ன நினைத்திருப்பர்.

வ்யா.—அவதாரிகை: பித்ருவசநபரிபாலநார்த்தமாக, "வநவாஸோ மஹோதய:" என்று - ஸஸந்தோஷத்தோடே, வந வாஸஸந்நத்தரென்று, நாட்டார் அவதாரிக்கும் திருநாமம் சாற்றும்படி வநவாஸஸந்நத்தராய், அப்போது உலகுடைய நாச்சியாரான ஸ்ரீஜநகராஜந் திருமகளுடைய ஸௌகுமார்யமான திருமேனியில்

மேன்மையைத்திருவுள்ளம்பற்றி, பிராட்டியைத் திருவயோத்யை யிலே நாம் மீண்டுவருமளவும், ஶுஶ்ரூஷாதிகளாலே நம் பண்ணிக்கொண்டு இருமென்று பெருமாள் வேண்டிக்கொள்ள, அவ் வார்த்தை வ்ரணக்ஷாரம்போலே பிராட்டிக்கு ஸஹ்யமாய், வ்ரண யாஹிதங்கள் வ்யக்தமாகையாலே, பெருமாளைக் குறித்து க்ஷேபோக்தி பண்ணுகிறாளி ஶ்லோகத்தாலே.

(கிம்) என்கிறவிது, க்ஷேபமான ஸப்தம். அப்போது, கிம்வக்ஷ்யதி-என்று-க்ஷேபமாகச்சொல்லுவரென்னபடி. அன்றிக் கே, (கிம்) என்று — ப்ரஶ்நமானபோது, என்சொல்லுவரென்று பொருள். (ஸ்வசந்த்ர) என்று - வாமமானபோது, க்ஷேபவிஷய மாக நினைத்திருப்பரென்றும், என் நினைத்திருப்பரென்றும், இரண்டு ஸ்துதி.

*௧. (ஸ்வா) உளுந்த வில்லைமுறித்து, லோகத்தை ஊமத்தங் காய்தீத்தின வும்மை. *௨. (ஸ்வா) வஸிஷ்டாநுவர்த்தநம் பண்ணிப் பொருகையாலேஎன்னோபாதி ஸக்ஷயஜ்ஜரில்லையென்றுபொய்யே யிருமாந்திருக்கிறவும்மை.*௩.(ஸ்வா)எழிலிமேலகோழையானவும்மை.

(கிம்ஸ்வாசந்த்ர) (கிம்வக்ஷ்யதி) ராஜாவன்றென்னவொண் ணாதே? ராஜபுத்ரமறியீரென்னவொண்ணாதே? ஶாஸ்த்ராப்யாஸ ம்பண்ணி அறியீரென்னவொண்ணாதே? ஶாஸ்த்ரார்த்தமான வா வார மறியீரென்ன வொண்ணாதே? ஸ்த்ரீகளுக்கு ஸத்ருத்வ ஹவாஸ ரவஶ்யக மென்று மிடமறியீரென்ன வொண்ணாதே? ஸ்த்ரீயை உபேக்ஷியாமைக்கு வ்யஸவசிகரமான ஸக்ஷா ரவ்ருத்தஸ்வம் உமக்கில்லையென்ன வொண்ணாதே? கிம்பஹுநா - ஜேவர் ஸந்தானங்கண்டால், உம்மை கனக்கதப்பிதமென்றிருக்கு மித்தனையிறே.

(கிம்ஸ்வாசந்த்ரதவைதேஹ:) உம்மை ஐயரென்ன நினைத்தி ருப்பர்? திருமாமணர் உபாயவக்த்ருத்வம் கையிலாதல், திருமாமியார் ஸ்ரீகௌஸல்யையார் கையிலாதலன்றே என்னைக்காட்டிக் கொடு த்தது. ஐயம்ஸீதா - என்று - உம்முடையகையிலன்றோ என்னைக்கா ட்டிக்கொடுத்தது. ஸ்த்ரீத்வத்தில்கொற்றையற்றபெண்களுக்குஸத்ரு

விரஹத்தில்ஸீதா நாஶம்பிறக்குமென்றும்சொல்லிக்கொடுத்தாரே. ஐயடி—இவள் ஈத்ருஶாஹி ஶாநிநி என்று சொல்லிக்கொடுத்தாரோ. 'ஸூதர்ராதேதர்ஶிதேஹ்ருஷ்டா வ்யாஷிதேஶேநாகுலா। ஷ்ருதே த்ரியேதஷ்பாவதூள ஸாத்வீஜேயாவதிவ்ரதா” இத்யாதிஶ்லோகங் களாலே ஶாஸ்த்ரஜ்ஞர்கள் பாதிவ்ரத்யத்துக்கு வாயோலையி ட்ட பெண்டாட்டியன்று கிடீரிவளென்று சொன்னாரே. அந்தலக்ஷ ணங்கள் சொல்லலாவது, பர்த்தாவுக்கும் தங்களுக்கும் பிறிந்து உடலு முயிருமுள்ளார்க்கன்றோ? இவளுக்குடலு முயிரும் தேவரீ ரென்று அறுதியிட்டுக்கொடுத்தாரே. ஐயடி—நிழலோடே மறு பொருவாரில்லை கிடீரென்றாரே. ஐயடி—இவள் தலையாலே ஏதே னும் குறைவிளைந்த துண்டாகிலும் தேவரீரிதுகிடீ ரென்றாரே. ஸீதா—பெண்களுக்குத்தாய்கூறு மிக்கிருக்கு மாகையாலே, வேறு மணங்கிடீர், எடுத்து விநியோகங்கொள்ளுமத்தனை கிடீரென்றுசொ ன்னாரே. ஸீதா - பிறக்கிறபோது கீத்துதப்பாமல் பிறந்தாளென் றாரே. ஜநகஸுதா — இவளைப்பாராதே என்னைப்பார்க்கவேணுமெ ன்றாரே. ஸஹதர்மசரீ - தேவரீர்தர்மத்துக்குக்கூட எழுந்த ருளியிருக்குமிவளென்றாரே. தவ - ஸஹதர்மசரியாமிடத்திலும் ஶேஷத்வ கைவிடாளென்றாரே. ப்ரதீச்ச - அத்தலைக்கு ஈஹர்மா ம்படி திருவுள்ளம் பற்றவேணுமென்றாரே. வ - ஈஹர்தாஜ்ஞா ந ஶாத்ரமன்றிக்கே, விஷய வைலக்ஷண்யாநுஸந்தமாக ஹோமம் கொடுத்தருளவேணுமென்றாரே. பத்ரம்தே - இப்படி கோற்றுப்பிறந் தவளை. ஹந்தே.-கோற்றுப்பிறந்தாளென்கிறே னத்தனைபோக்கி, பேறு தேவரீர்துகாணு மென்றாரே. ஹோமமும் மிக்கதனையும் ஹோ த்தாவுக்குப் பேறுமித்தனையிறே. பாணிம்க்ருஹ்ணீஷ்வ - கைநீட்டவறி யாள்காணும்; நீரேபிடியீரென்றாரே. கைப்பிடிப்பதுகையாலே யாயிருக்க, லோகமெல்லா மொதுங்கினாலும்நிழல்விஞ்சி போஷஞ் சிறுக்கும்படியான வீரப்பாட்டையுடைத்தான தேவரீர் திருத்தோ ளிலே கண்வைத்துத் தகுதியாகத்தொழில் செய்யவல்லகையாலே பிடியீரென்று விசேஷித்தாரே. பாணிநா- என்று - கையை விசே ஷித்துக்கவிபாடுகிறது. இங்கு ஜாத்தஶ்ஶையிலே யெடுத்துக்கொ

ண்டுபோமென்றாரே. இவ்வாகாரங்களொன்றும் தேவரீர்திருவுள்ளம் பற்றிலீரே. உம்முடைய ப்ரதிபத்தி ஈஶ்வரனாயன்றோ இருந்தது. ஐயழ-என்று-என்னுடைய ஸௌந்தர்யத்தைச் சொல்லுகிறாரென்றிருந்தீர். ஸீதா-என்று- என்னுடைய ஆபிஜாத்யத்தைச் சொல்லுகிறாரென்றிருந்தீர். ஜநகாத்மஜா -என்று - என்னுடைய வித்யாஸம்பத்தைச் சொல்லுகிறாரென்றிருந்தீர். ஸஹதர்மசாரிணீ- என்று - என்னுடைய ஸௌஶீல்யத்தைச் சொல்லுகிறாரென்றிருந்தீர். தவ - என்று உம்மைக்கொண்டாடுகிறாரென்றிருந்தீர். ப்ரதீச்ச-என்று-வரில்பொகடேன்,கெடில்தேடேனென்றிராதே கொள்ளீரென்கிறாரென்றிருந்தீர். பத்ரந்தாலே, கண்ணுக்குத்தைத்ததோவென்றுகேட்டாரென்றிருந்தீர். பஸ்ய-என்று -என்தகப்பனுகையாலே ஸௌந்தர்யாதிகள் கண்ணிலேபட்டு வாத்ஸல்யத்தாலே சொல்லுகிறாரென்றிருந்தீர். ஹஸ்தம்தே- என்பக்கல் வைராக்யத்தில் பாதகமான வைராக்யம் உம்முடைய பக்கலிலேவிளைந்து த்ருஷ்டிதோஷம் வருகிறதென்றஞ்சி, உமக்குக்காப்பிட்டாரென்றிருந்தீர். பாணிம் க்ருஹ்ணீஷ்வபாணிநா - என்று - க்ரியாகலாபத்துக்குச்சடங்கம் சொல்லுகிறாரென்றிருந்தீர். அப்படி ஸர்வஜ்ஞரான ஐயர் சொன்னவார்த்தையை நேராகத்திருவுள்ளம் பற்றாதே, இன்றென்னை வைத்துப்போனீரென்றால், (கிஂகராஜநந்த) உம்மை ஐயரென்ன நினைத்திருப்பர்.

*௧. (வெடுநேஹஃ)-"க்ஷத்ரியவைவஹிஸம்ஹிதாஜநகாஜயஃ" என்று - க்ரியாகலாபாதிகளைக் கைவிடாதே மோக்ஷஸித்திக்கு யத்னிக்குமவராகையாலே, ஒரு ஸ்ரீஹஸ்தத்திலும் வர்த்தியாதேராயிருந்து பழக்கமில்லாதவர். * ௨. (வெடுநேஹஃ) என்றுமவர் பழுதற வென்றுமவர். *௩.(வெடுநேஹஃ) ஜநகப்ரஹ்ருதிஶோகங்கண்டறியாதவர். என்னைப்பெறுகையாலேயெல்லாங்காணவேண்டாநின்றதே.

(விதாமே) பிள்ளைகள் ஸத்ருக்களானால் கல்நெஞ்சராய் காட்டுக்குவிடவல்லாருமுண்டு; நானேதேனும் க்ஷுத்ரப்ரஜையாகிலும், அவருக்குவயிறு பிடியேயிறே உள்ளது. தனியிருக்கவும் பொறுக்கவும் வல்லபிள்ளையைப்பெறாதே, வருத்தவன் நிழல்பெறில் பிழைத்தும், இழக்கில் ஸத்தாநாஶம் பிறக்கும்படியான வென்னைப்பெற்றுக்கெட்டாரே.

(ஶிவாயிவ:) - ஐயர் திருவுள்ளத்திலே நோவ, அத்தேச மெல்லாம் நோமே. (ஶிவாயிவ:) ஒருதேசத்தைத்தோள் நிழல் கீழிட்டுக்கொண்டிருக்கிறவர்க்கு,ஒருவனொருத்தியைத் தோள்நிழல் கீழொதுக்கமாட்டிற்றிலனென்றால், புண்ணாயிருக்குமே.

*க.(ராம) அய்யோ!வடிவில்பசைபோலேயிருந்ததாகிலுன்னகவாயும்-*உ.(ராம)அகவாய்கண்டு ஶத்ருக்னனென்று பேரிட்டதன்றே. அதுகடைக்குட்டியானதம்பியார்க்காயிற்றே."ராமஜந்மவிராமேண வஸிஷ்டதஸ்யவோக்தம் | நாமதேயம்ஸுஸ்ஸுத்ரோ ஜநநத்யமஹா ஜடம்" என்று-உம்முடையவழகுகோத்துக்கன்றோவஸிஷ்டனுபேரிட்டது. அஜ்ஜகத்தோடு மெனக்குறவற்றதிறே. * ௩. (ராம) "ஸஹஸ்ர நாமதஸ்யாஸ்யம்" என்று - ஆயிரம் பேருடைய ஶக்திக்குஸமாநமாய், தனித்தனியே யெழுந்திராநின்றதாயிற்று.

௫| நாம் இங்ஙனேயாகவேணுமோ; (ஜாமாதா) உங்களையருக்கு மூத்த பிள்ளையானப்போலே, எங்களையருக்கும் மணவாளபிள்ளையானீரே. (ஜாமாதா) "ஜாமாதாதஶமோக்ரஹ:" என்று- பெண்பிள்ளை பெற்றுக்கொடுத்தார்க்கு க்ரஹம்பத்தாயிறே யிருப்பது.

(வ்ராவந்) தாமே யுகந்துசெய்ததாகையாலேஒருவர் முகம்பார்த்து வெறுக்கவிரகில்லையே.

*க.(ஸ்தியம்வாராஷிவிக்ரஹம்) உம்முடைய முடியுமுடையும் ஹேஷித்தபெண்டாட்டியானீரே.*உ. (வாராஷிவிக்ரஹம்)அதுதனக்குகிலையுண்டாமாகில் காட்டிலும் துணையாமிறே.*௩.(வாராஷிவிக்ரஹம்) புறம்பூச்சான ஆண்தோலிறேபடைவடித்தது.*௪.(வாராஷிவிக்ரஹம்) உடம்பேறிக்குத்தாதே நாட்புவயலுக்கு மறல்கட்டினப்போலே,பேர்சுமந்தீரித்தனையிறே.*௫.(வாராஷிவிக்ரஹம்)அகவாய் ஸ்த்ரீயும்புறவாய் வாராஷனுமான ஸ்த்ரீ வாராஷிக்கலப்பை த்ருதீயப்ரக்ருதியென்பார்கள் நாட்டார்.-த்ருதீய ப்ரக்ருதியைநாடு சொல்லும்பேரை நான்சொல்லவஞ்சினேன். நாடுதானும் சொல்லாநிறே! ஆண்பிள்ளைச் சொற்றுழ்வி என்று பித்தனையிறே. எ

தாத்பர்யம் —என்னுடைய தகப்பனார் மிதிலையென்னு மொரு தேசமெல்லாமடக்கி ஆளவல்லவர். நீர் உமது பெண்டாட்டியான என்னை ஒருத்தியையுங்கூட ரக்ஷிக்கமாட்டாதே இங்கே விட்டுப்போனீரென்று கேட்டால் உம்மை மிகவும் அஸமர்த்தரென்று நினைப்பர். விவாஹகாலத்தில் ஸுந்தரமான உம்முடைய ஆணுருவத்தைப் பார்த்துப்ரமித்து, உம்முடைய பயப்படுகிற ஸ்வபாவத்தையறியாமலே உம்மைமணவாளனாக வரித்தார். அவர்தானே செய்தகார்ய மாகையாலே இப்போது ஒருவன்மேல்பழிசொல்ல ந்யாயமில்லை. என்று ஸீதாபிராட்டி ஸ்ரீராமனோடு வாதம் செய்கிறாள்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அயோத்யா காண்டம் - ௩௧ - ம் ஸர்க்கம், ௨ - ம் ஶ்லோகம்.

௨௰—ஸ ப்ராதுஶ்சரணௌ காடம் நிபீட்ய ரகுநந்தந꞉ |
ஸீதாமுவாசாதியஶா ராகவஞ்ச மஹாவ்ரதம் || அ.

அர்த்தம்—ரகுநந்தந꞉ - ரகுகுலத்தார்க்கு ஸந்தோஷ ஜநகரான, அதியஶா꞉ - விசேஷ கீர்த்தியையுடையரான, ஸ꞉ - அந்த இளையபெருமாள் (லக்ஷ்மணன்), ப்ராது꞉ - தமயனாருடைய, சரணௌ - திருவடிகளை, காடம் - நன்றாக, நிபீட்ய - பிடித்துக்கொண்டு, ஸீதாம் - ஸீதாபிராட்டியையும், மஹாவ்ரதம் - அப்ரதிஹத ஸங்கல்பத்தையுடைய, ராகவஞ்ச - ரகுகுலத்திலவதரித்த ஸ்ரீராமனையும் (பார்த்து), உவாச - சொன்னார்.

ஸங வ்யா - அவதாரிகை. சக்ரவர்த்தித்திருமகன் வநவாஸோத்யுக்தனான அவஸ்தையிலே, திருவயோத்யையிலுள்ளார்க்கு ரக்ஷகராகவும், ஸ்ரீபரதாழ்வானுக்குத்துணையாகவும்நில்லென்றுஇளைய பெருமாளை யருளிச்செய்ய, காட்டிலுங்கூடப்போய் அடிமைசெய்கையிலுண்டான ருசியாலே, அருளிச்செய்தவார்த்தை அஸஹ்யமாய், கூடப்போக வேணுமென்று பிராட்டிமுன்னிலாகப்பெருமாள் திருவடிகளிலே ஶரணம்புகுருகிறார்,

(ஸ:) அவதரித்தவிடத்திலும் அடிமைசெய்யவேணுமென்று பரமபதத்தில் நின்று தொடர்ந்துபோந்து கூடத்திருவவதரித்தபின்பு, "பா³ல்யாத்ப்ரப்⁴ருதி ஸுஸ்நிக்³த⁴:" என்கிறபடியே, எல்லாவவஸ்தைகளிலும்பிரியாதேபோந்து, "ஜலாந்மத்ஸ்யாவிவோத்³த்⁴ருதௌ" என்று-அந்வயத்தில்த⁴ரித்து, வ்யதிரேகத்தில்முடியும்படியான விளைய பெருமாள்.

(ப்⁴ராது:) இவருடைய அநுவ்ருத்தியைக்கொண்டு அவ்வழியிலேயவரை ஹரித்துக்கொண்டு போந்தவர். (ப்⁴ராது:) ப்⁴ராதாவினுடைய. நாராயணனுடைய வென்றபடி. "மாதா பிதா ப்⁴ராதா நிவாஸ: ஶரணம் ஸுஹ்ருத்³க³திர் நாராயண:" என்னக்கடவதிறே. ஸுபா³லவாக்யத்தில் ப்⁴ராதேதி ஷஷ்ட்²யந்தமென்று மிடந்தோற்ற நாராயணஸ்ய -என்றிறே யிருப்பது.

(சரணௌ) நாராயணஸ்ய சரணௌ-என்றபடி. சரணௌ-என்ற த்³விவசநத்துக்கு ப்ரயோஜநம், "சர க³திப⁴க்ஷணயோ:" என்கிற தா⁴துவிலே ப்ராப்யமுமாய் ப்ராபகமுமாயிருக்கு மென்கைக்காக. (சரணௌ) கையைப்பிடித்தபேக்ஷித்தால் மறுக்கலாம்; மறுக்கவொண்ணாதபடி திருவடிகளைப்பிடித்தடிமைசெய்ய இழியுந்துறையிறே ஆஶ்ரயிக்குந்துறை.

(கா³ட⁴ம் நிபீட்³ய) வ்யதிரேகத்தில்த⁴ரிக்கமாட்டாததம்முடைய அபி⁴நிவேஶமெல்லாம் தோற்றும்படி பிடித்து. (கா³ட⁴ம்) கா³ட⁴மென்கிறவிவை யதா²யத²மென்றது. ஸ்வீகாரத்தைச் சொன்னபடி.

(ரகு⁴நந்த³ன:) ஜ்யேஷ்டா²நுவ்ருத்தியையுகந்து போரும் ரகு⁴குலத்தாரெல்லாரையும் தம்முடையவநுவ்ருத்தியாலே உகப்பித்தவர்.

(ஸீதாமுவாச) பிராட்டியையும் பார்த்து வார்த்தைசொன்னார். திருவடிகளை பிடித்துச்செவியிலே வார்த்தை சொல்லுவானைப் போலே; திருமுகத்தாலேயிறேயாஶ்ரயணோந்முக²ரானசேதநருடைய வார்த்தைக்கேட்டருளுவது.

(ஶ்ரீமாந்) மிக்க ஸம்பத்தையுடையவர். தானும் ராஜகுமாரனாயிருக்க, இழிதொழிலென்று பாராதே, "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்று - ஒருவன் ஜ்யேஷ்டாநுவர்த்தநம் பண்ணபடியே! என்று - லோகமடங்க வாழ்த்தப்படும்படியான வார்த்தைப்பாடுடையவர்.

(ராகவம் ஸஹோதரம்) ஸஹோதரரான பெருமாளையும் பார்த்து வார்த்தைசொன்னார். (ராகவம்) - ஶரணாகதவிஷயத்தில் வ்யாஸங்காரம் வேண்டாதபடியானபிறப்புடையவரை. (ஸஹோதரம்) குடிப்பிறப்புதான் மிகுதி யென்னும்படி, "அஹம் ஸர்வ ஸமேதஸ்ய ஜ்யேஷ்ட்யாத் ஸ்நேஹாத் ஶ்ருதம் ஹி" என்று - ஸர்வலோகவ்யஜ்யமான ஸௌஹ்ருத்தை யுடையவரன்றோ தேவர். ஸர்வஹிதங்களுமென்றால், உம்மால்வரும் ஹிதம் வரிஹரிக்கவேண்டாவோ வென்று கருத்து. ஶ்ரீமாந் - ராகவ: ஸஹோதரம் - ஸஹார்த்தம்ஶரணௌ பாதௌ நிபீட்ய ஸீதாம்வாச. ... ... ... ... ... ... அ.

தாத்பர்யம் — ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்த்தைகளிலும் பகவத்கைங்கர்யத்தையே பரமோத்தேச்யமாக உடையராய், ராமவியோகத்தை க்ஷணம் கூட ஸஹியாதவரான இளையபெருமாள், தன்னுடைய குணங்களால் ரகுக்களை ஸந்தோஷிப்பிக்குமவர். தான் ராஜகுமாரனென்கிற அபிமானத்தை விட்டு தமயனுருக்கு அடிமைசெய்வதால் வந்த பெருத்த கீர்த்தியையுடையவர். இவர் ஸ்ரீராமன்காட்டுக்குப்போகும்போது தன்னையுமழைத்துக்கொண்டு போம்படி திருவுளம் பற்றவேணுமென்று தன்னினைவெல்லாம் தோற்றும்படி தமயனான ஸ்ரீராமனுடைய ப்ராப்யமுமாய் ப்ராபகமுமான இரண்டு திருவடிகளையும் கெட்டியாய் பிடித்துகொண்டு, புருஷகார பூதையான சீதாபிராட்டியையும், சரணாகதரக்ஷணத்தில் அப்ரதிஹதமான ஸங்கல்பத்தையுடைய ஸ்ரீராமனையும் பார்த்து, மேல்சொல்லுகிறபடிவிக்யாபனம் செய்துகொண்டார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

அயோத்யா காண்டம் - ௩௧ - ம்-ஸர்க்கம், ௨௫ - ம் ஶ்லோகம்.

௩௦—பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே |
அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரத ஸ்ஸ்வபதஶ்ச தே || ௧.

அர்த்தம்.—(ஸ்ரீராமனே!) பவாம்ஸ்து - நீரோ, வைதேஹ்யா ஸஹ - ஸீதாபிராட்டியோடுகூட, கிரிஸாநுஷு - மலைத்தாழ்வரைகளில், ரம்ஸ்யதே - க்ரீடிப்பீர், அஹம் - நான், ஜாக்ரத: - விழித்துக்கொண்டிருக்கிற, ஸ்வபத: - நித்திரைசெய்துகொண்டிருக்கிற, தே - உமக்கு, ஸர்வம் - எல்லாவடிமையும், கரிஷ்யாமி-செய்வேன்.

ஸ்ரீ - அவதாரிகை. ஸஹ ப்ராதா: -என்கிற ஶ்லோகத்தாலே ஶரணம் புக்கால், அந்த ஶரணாகதிக்கு பலம் கைங்கர்யமென்று ஸவ்யாகாரமாக பலத்தைச் சொல்லுகிறதிஶ்லோகத்தாலே. திருவயோத்யையில் வஸிக்கிறகாலத்தில் அடிமைபூண்டுண்டாமோபாதி, அங்குள்ளாரு மடிமை செய்ய, நானும்விழுக்காட்டிலே யடிமைசெய்யப் போந்தவென்னை, வநவாஸத்துக்குக் கூடப் போவேனாக விசைந்த உபகாரஸ்ம்ருதியாலே, காட்டிலும் ஸர்வாவஸ்தையிலும் ஸர்வஶேஷவ்ருத்திகளும் பண்ணக்கடவன்; என்னைக்கொண் டெழுந்தருளீரென்கிறாரென்னுமாம்.

(பவாம்ஸ்து) அடிமைசெய்யப் பெறாதொழிந்தவென்னைப்போலன்றியிலே, பரிணமேகையாலே உமக்கடிமைகொள்ளாவிடிலுஞ் செல்லும். ஆகிலும், விஶேஷ முண்டிறே. ஆனாலு மென்னுடைய ஸ்வரூப ஸித்த்யர்த்தமாக அடிமைகொண்டருளவேணும்.

(ஸஹவைதேஹ்யா) அடிமைசெய்யுமிடத்தில் ப்ரமயமாய் மாகப்போகுமிடத்திலே ஸஹகரிக்கும தொழிய,பிராட்டியும் தேவருங்கூடவெழுந்தருளியிருக்குமிருப்பிலேஅடிமைசெய்யக்கடவேன்.

(கிரிஸாநுஷு ரம்ஸ்யதே) அவளோடேகூட அடிமை செய்யுமிடத்திலும் பர்ணஶாலையிலே எழுந்தருளியிருக்க வடிமைசெய்யுமளவன்றிக்கே, ஜலக்ரீடை பண்ணிபலைத்தாழ்வரைகளிளே, ஒரு

வருக்கொருவர் வெற்றிகொண்டாடி ரஸிக்குமளவிலும் அடிமை செய்யக்கடவேன்.

(ஸஹம்) ஸாவஸ்ரஸங்களில் யாதொருவனுயடிமைசெய்யவே ணும். அவ்வவவெஷயங்களில் அதுவே ஸ்வரூபமாக உடையனான நான்.

(ஸவஹஂகரிஷ்யாமி) ஸ்ரமயாத்ரமாகப் போமிடத்தில் கையும் வில்லுமாயடிமைசெய்தும், காயுங்கிழங்கும்கல்லுமிடத்தில் வநித்ர விடுகயானு யடிமைசெய்தும், "ஐஷ்ஂஶேய்ரிஷஂ ஸாஷு" என்று மிடத்தில், ஶாஂஸவவநம் பண்ணியும், வணஹஶாலா நிமாணத் தில்,"க்ரியதாமிதிஶாஂவஷ"என்று-எல்லாவடிமைசெய்தும்,மலைத்தாழ் வரைகளிலே ஜலக்ரீடை பண்ணுமிடத்தில்வஸ்திரப்பிழிந்து உலர்த் தியும், ராக்ஷஸர் வேட்டையாடுமிடத்தில் காவலாயிருந்தும், ஸவஶேஷ வ்ருத்திகளும் பண்ணக்கடவேன்.

(ஜாக்ரதஸ்ஸ்வபதஸ்சதே) தேவரும் பிராட்டியுங் கண்வளர்ந் தருளும்போது, காட்டில் ஷுஷ்டஸத்வங்களும் ஷுஷ்டப்ரக்ருதியான ரா க்ஷஸஜாதியுங் கிட்டாதபடி கையும் வில்லுமாய் நோக்கியும், உணர் ந்தருளினபோதெல்லா மடிமைசெய்தும் போரக்கடவே னென்றபடி.

தாத்பர்யம்.— ஸ்ரீராமனே! தேவர் ஸகல குண பூர்ணர். நானடிமை செய்யாவிடிலுமக்கொன்றும் குறைவில்லை. ஆகிலும் என்னுடைய ஸ்வரூபஸித்யர்த்தமாக என்னை அடியனாக அங்கீகரிக்க வேணும். தேவரீர் ஸீதையுடன் மலைத்தாழ்வரைகளில் ஜலக்ரீடை செய்யும் காலத்திலும், பர்ணசாலையில் கண்வளர்ந்தருளும் போதும்,வேட்டையாடும்போதும், இப்படி ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் கைங்கர்ய ரஸமறிந்த நான் தாஸ்யம் செய்யக்கடவேன். அடியேனைத்திருவுள்ளம் பற்றவேணும். என்று கீழ்பண்ணின ப்ரபத்தியின் பலத்தை இந்தஶ்லோகத்தால் ஸ்ரீராமனைக்குறித்து இளையபெருமாள் ப்ரார்த்திக்கிறார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அயோத்யா காண்டம் - சo - ம் ஸர்க்கம், அ - ம் ஶ்லோகம்.

---

உ௦.—ராமம் தஶரதம் வித்தி மாம் வித்தி ஜநகாத்மஜாம் ।
அயோத்யாமடவீம் வித்தி கச்ச தாத யதாஸுகம் ॥ க௦.

அர்த்தம்.—தாத-ஐயா ! ராமம்-ஸ்ரீராமனை, தஶரதம்-பத்துதிக்கிலும் ஸஞ்சரிக்கிற தேரையுடைய தசரத சக்ரவர்த்தியாக, வித்தி - நினையும், ஜநகாத்மஜாம் - ஸீதாபிராட்டியை, மாம் - நானாக, வித்தி - பாவியும், அடவீம் - காட்டை, அயோத்யாம் - அயோத்யாபட்டணமாக, வித்தி - அறியும், யதாஸுகம் - சுகமாக, கச்ச - போம்.

வ்யா—அவதாரிகை. ஸ்ரீஸுமித்ரையார், பெருமாள்பக்கலுண்டான வாத்ஸல்யத்தாலும், இளையபெருமாள் பக்கல் ஹிதவரதையாலும், "ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய ஸ்வநுரக்த: ஸுஹ்ருஜ்ஜநே" என்றும் - "அநுஜாதஸ்ய ஹவ தாவஸ்வ லுநேவயநோஷ்யஹம் । விதுஷாநீம்வ நரிஷம் கியதே தஜே நிவாரணம்" என்றும் - மன்றுடிக் கூடப்போக $ வொருப்பட்ட, இளையபெருமாளை அதிஶங்கை பண்ணி, இங்கு ‡ படைவீட்டிலுண்டான ஸம்போகங்களை ‖ க்குவாலாக நினைத்துக் கால்தாழாதே, எல்லாவுறவுமுறையும் பெருமாளும்பிராட்டியுமாக நினைத்து கூடப்போமென்கிறாள்.

* க. (ராமம்தஶரதம்வித்தி) "பெற்றார்பெற்றொழிந்தார்" என்று - ஔபாதிகபந்துக்களான வெங்களைக்குவாலாக நினைத்திராதே, "தேவதேவோஹரி:பிதா" என்றும்-"ஒளியுளார்தாமே யன்றேதந்தையுந்தாயுமாவார்" என்றுஞ் சொல்லுகிறபடியே, நிருபாதிகபிதாவானபெருமாளை ¶ தஞ்சமாக நினைத்துப்போம். (மாம்வித்தி

---

$ ஒருப்பட்ட - ஸம்மதித்த.

‡ படைவீடு - தேவாலயம், அதாவது ராஜதர்கம்.

‖ குவால் - கூட்டம், துணைக்கு ஸாதகம்.

¶ தஞ்சம் - துணை, அதாவது ரக்ஷகர்.

நகாத்ஜாஃ) அப்படி ஔவாயிகமாகாவான வென்னையும் குவா லாகநினைத்திராதே, "ஸம்ஸாரஸாகரோத்தாரணாஃ" என்றும் - "ஸவிஜநஜநாதநாஃ" என்றுஞ் சொல்லுகிறபடியே, பிராட்டி யையே தஞ்சமாகநினைத்துப்போம். (அயோத்யாவாஸிகளைப்போலே) "யத்ர நாஸ்தி ஹரிஸ்தத்ர நவஸ்தவ்யம்க்ஷணமபி | வஸ்தவ்யம் தத்ர தத்ரைவ யத்ராஸ்தே மது ஸூதநஃ" என்றுசொல்லுகிறபடியே, பெருமாள்ஸந்நிதியில்லாதபடைவீட்டைவிரும்பாதே, அவருகந்தகா ட்டைத்தஞ்சமாகநினைத்துப்போம்.

* ௨. அன்றியிலே, (ராமவிஷயத்தாலே) லோகமர்யாதையாலே உங்களையரைப்பிரிந்தீராகநினைத்திராதே,"ஜ்யேஷ்டோ ஹ்யாதாவித்ர ஸமஃ" என்கிற மர்யாதையாலே உங்கள் தமயனை ஐயரென்று நினைத்துப்போம். (ஸம்விதேத்யாதி) அந்த மர்யாதையாலே மதிநியா ளை என்னைப்போதி தாயாராகநினைத்துப்போம். (அயோத்யாமித்யாதி) காடென்று நினைத்திராதே பெருமாள்விரும்புற்றுகையாலே, அத்தை யும்அயோத்யையோபாதிஸ்நேஹித்தும்போம்.

* ௩. அன்றியிலே (ராமவித்யாதி)கஷாயபானம் போலேஶா ஸ்த்ரார்த்தவிதிக்கையன்றிக்கே, பாலேமருந்தாமாப் போலே, ஶ்ரீய:பதியான பெருமாளாகையாலே, அதற்கடியானசேஷவ த்தையில்வந்தால், "ஸேஷோஹ்யராதயோவஸ:" என்று-உங்களை யரோடொப்பரென்று நினைத்திரும். (ஸம்விதேத்யாதி) தானுங்களை யருக்கு அநந்யசேஷையாயிருக்குமாப்போலே, இவளும், "உனக்கே ர்க்குங்கோலமலர்ப்பாவை" என்றும்-"தஸ்யாஸீமவயோவத்தாஃ" என்றும் சொல்லுகிறபடியே, பெருமாளுக் கநந்யசேஷையான வாகாரத்தாலே உம்மையுகப்பிக்கு மென்று நினைத்திரும். (அயோ த்யாமித்யாதி) "ராமாஹீஷ்வஸம்யுக்தா:" என்று - படைவீடாக அநந்யஸேவ்யமாயிருக்குமாப்போலே, "ஹாநிவ்யஞ்ஜநா:" எ ன்று - அக்காடுதானும் அநந்யஸேவ்யமாயிருக்கு மென்று நினைத்திரு மென்றாகவுமாம்.

* ௪. அன்றியிலே, (ராமம் தஶரதம் வித்தி) உங்களைப்பிரிந்த ஐயரினி உளராகமாட்டார். இனிமேலெல்லா வுறவுமுறையும் பெருமாளென்று நினைத்திரும். (மாம் வித்தி ஜனகாத்மஜாம்) "ஜநகாத்மஜா" என்கிற மஹிஷியாலே நானு மென்றொருத்தியுண்டாக நினைத்திருக்க வேண்டா; அந்தவுறவும் பிராட்டியென்று நினைத்திரும். (அயோத்யாம் அடவீம் வித்தி) இனிபடைவீடு என்றுமொன்றுண்டாக நினைத்திருக்கவேண்டா; "புல்லென்றொழிந்தனகொல்" என்று-படைவீடுமின்றேகாடெழுந்ததென்று நினைத்திரும்.

* ௫. அன்றியிலே (ராமம் தஶரதம் வித்தி) உங்கள் தமயனாரை உங்களையரோபாதி ஸ்வதந்த்ரரென்று நினைத்திரும். அதாவது - கைகேயிவார்த்தையைக்கேட்டு அவருங்களைக் காடேறப்போகவிடுமாப்போலே, பிராட்டிவார்த்தையைக்கேட்டு ஆஶ்ரமத்தின்பின்னே போகத் துடங்குவர்கிடீர். (மாம் வித்தி) நானும்மையிப்போது போகவிடுகிறாப்போலே, அவளும்அப்போது § தியங்கின உம்மையுங்கூட நிவர்த்திப்பித்துப்போகவிடக்கூடுங்கிடீர். (அயோத்யாம் அடவீம் வித்தி) இப்படைவீட்டில் நிற்கப்பெறாதே காடேறப் போகிறாப்போலே, அக்காடுதன்னிலும் நிற்கப்பெறாதே கடற்கரையிலே போகக்கூடுங்கிடீர் என்று அத்யவஸாநம்பண்ணிக்கொள்ளுமென்றாகவுமாம்.

* ௬. அங்ஙனன்றியிலே, (ராமம் தஶரதம் வித்தி) வெறும்வடிவழகேயென்றிராதே, ராக்ஷஸரோடே வினையொத்தகாலத்தில் உங்களையரைப் போலே தனிவீரஞ்செய்யவல்ல ஆண்பிள்ளைகிடீரென்று நினைத்திரும். (மாம் வித்தி) அப்பூசல் நிமித்தமாக பயப்படுகையன்றியிலே, தேவாஸுர ஸங்க்ராமத்தில் உங்களையருடைய வீரப்பாடுகண்டால் நாங்களுகக்குமாப்போலே, அவ்வாண்பிள்ளைத் தனங்கண்டால், "ஶத்ருஹந்தாரம் பரிஷஸ்வஜே" என்று- மதித்துப் ப்ரீதிகோஷம் கொடுப்பாளொரு வீரபத்நியென்று நினைத்திரும்.

---

§ தியங்கின - ப்ரமித்த.

(ஊயோய)ாபிதுாஷி) அப்போதிவளைப் † பேணுகைக்குமதிளுஞ்சிறையுமா யிருப்பதொரு படைவீடில்லையென்று நினைத்திராதே, காட்டோடு நாட்டோடு வாசியில்லை, புலிநின்றதூறு என்னுமாப்போலே, நிற்கிறவன் பக்கல் மதிப்பாலே அக்காடுதானே யொருவராலும் மேலிடவொண்ணுதென்று நினைத்திருமென்றுகவுமாம்.

* எ. அங்ஙனன்றியிலே, (ஶாஜிதுாஷி) உங்களையர் உங்கள் விஸ்லேஷத்திற் பாடாற்றமாட்டாதாப் போலேகிடீர் உங்கள் தமயனும், "நஜீவேயம்க்ஷணமவி விநாதாமஸிதேக்ஷணாழு" என்றும்-"ஊஜெ்வாஹம்மஷிஷ்ாமி ஒக்ஷ்ணேநமதாம்மதிழு" என்றும்-உங்கள் விஸ்லேஷத்தில் பாடாற்ற மாட்டாதபடியும். (மாஜிதுாஷி) நானிப்போது உங்களைப்போகவிட்டு, "எற்றுக்கென் பிள்ளையைப் போக்கினேனெல்லே பாவமே" என்று - ஊநுதவிக்கப்போகிருப் போலேகிடீர் இவளும் உங்களைப்பிரிந்தால் க்லேஶிக்கும்படியும். (ஊயோய)ாபிதுாஷி) உங்களைப்பிரிந்து, "ஊவஹு ஷுஊகுஷ)ாவதீந நாம த-ஶஜூா। கூதுஸ்வஶவஸிூாநா" என்று- இத்திருவயோத்யையிப்போது படப்போகிருப்போலே கிடீர், உங்களோடு பிரிவுண்டானல், "வஸிஶஷவஹாஶாநி" என்றும் - "ஊவிவாக்ஷா: வஸிூாநா:" என்றும் -அக்காடுதானும் படும்படி யென்றுகவுமாம்.

* அ. அங்ஙனன்றியிலே, (ஶாஜிதுாஷி) பெருமாளென்று மிப்படி ஊவஹுதஶாஜ)ராய்த் திரியுமத்தனையோவென்று நினைத்திராதே, உங்களையரோ பாதிமுடியுஞ் சூட்டிபத்தூஷிக்கினு / மாணையுஞ் @ செங்கோலும் நடத்துவரென்று நினைத்திரும். (மாஜிதுாஷி) பிராட்டியு மப்படி யுடன்கேடாகக் திரிகையன்றியிலே, நான் மஹிஷீவஊத்திலே ஊஹிஷேகம்பண்ணி யிருந்தாப்போலே, கூாதாஹிஷேகெகையாய் மஹிஷீவஊத்திலேயிருந்து நிவஸிக்குமென்று நினைத்திரும்.

† பேணுகைக்கு - ரக்ஷிக்கைக்கு.

/ ஆணை - அரசாட்சி.

@. செங்கோல் - ந்யாயம்.

(அயோத்யா கிஷ்கிந்தா) இப்படித் திருவபிஷேகம் பண்ணின வநந்தரமே, "அபிஷேநாந் தேவேஷூவிஷ்ணும் ஸ்வாஸஸாவஸ்வநவோடு ஜாநி | அயோத்யாஸதேவீர ஷண்ட்தோயயாஷூம் விசோத்ஸநா நாஷ்ட்ர ஸ்ரீணதாநி" என்று - இக்கரடுதானும் படைவீடோபாதி நிறைகுடி யென்றுநினைத்திரும்.

* ௬. அன்றியிலே, (ராமோபாயம் விஷ) "பதாதிவஜீரக ஹதத்" என்றும் - "தேரொழிந்துமா வொழிந்துவனமேமேவி" என்றும்-"கலையுங்கரியும் பரிமாவுந் திரியுங்கானங்கடந்து" என்றும்- அநுஸந்தித்தவர்கள் வயிறுபிடிக்கும்படி, என்றுமிக்கால்நடையோ வென் றிராதே,பக்ஷிக்கிலும் வாஹநங் துடக்கமான தேர்களிலே ஏறித்திரிவரென்று நினைத்திரும். (ஸம்வித ஜநகாத்மஜாத்) "துன் னுவெயில் வறுத்த வெம்பறல்மேற் பஞ்சடியாள் மன்னனிராமன் பின் வைதேவியென்றுரைக்கு மன்னநடைய வணங்குநடங்திலளே" என்று - பிராட்டியும் உபஸ்ஸஞ்சாரமான காட்டிலே என்று மிப்படி நடந்துதிரியு மத்தனையோவென்று நினைத்திராதே, நானுங்களையர ருகே தேர்த்தட்டிலே யிருக்குமாப்போலே, வாஹநாதிகளிலே பிராட்டியுங் கூடவருவரென்று நினைத்திரும். (அயோத்யாஷிதாஷி) இக்காட்டிலேயோ உருவற்றிருந்து விடப்புகுகிறதென்றிராதே, இதி லே யிப்போது நித்யஸஞ்சாரம் பண்ணப்புகுகிறுப் போலேகிடீர், மீண்டு புகுந்து இப்படை வீட்டிலேயும் நித்யஸஞ்சாரம் பண்ணப் புகுகிறதென்று நினைத்திரும்.

ஆகவிப்படி போகிறவிடத்தில் ஸ்வாஸ்த்யத்தை யநுஸந்தித்துப் பிற்காலித்த இளையபெருமாளோடேற்ற வார்த்தை சொல்லித்தாக விறே சுவாதத்தில் தோற்றுகிறது. இது,"வ்யாமேவ தாஹாஹா மஷ்ளஷிதி ஷித நதநः । வவெத ஜஸ்ராங யாதாத்வே உதஷீஸொ ரஜ்ஜ்தः॥ஷாஷவயதாகாஷவஶ்லோகம்வோஷ ஸெநாவது" என்றும் - "காராஷஸாஸ்ஷாம் வெயஷிம்நேஹ

விசூ்ஜ்தே " என்றும்- வ்யதிரேகத்தில் ஸத்தையேபிடித்திலலேயாம்ப டியாய் போகுகைக்கு முற்கோலிநிற்கிற இளையபெருமாள் நிலைக்குச் சேராது.

இதுசேரும்போது இங்ஙனே பொருளாகவேணும். * கo. (ராமம்தசரதம்வித்தி) " ஸஹோதாவகூஹாராஜே வித்யகவும் நோவவுக்ஷயே" என்று - உங்களையரளவில் நீர் நெகிழ்ந்துநிற்கிற தொன்றுண்டு; அத்தைவிட்டு பெருமாளைப் பெற்றுரென்று மாகாரத்தாலே யாகிலும், அவரோபாதி யிவருமொருத்தருண்டென்று நினைத்திருக்கவேணும். (மாம்வித்தி) என்னையும் அவர் கைப்பிடித்தாரென்கிற வாகாரத்தாலே நெகிழ்ந்திராதே, பெருமாளோட்டை ஸம்பந்தத்தாலே பிராட்டியை வ்யதிவத்திபண்ணி யிருக்கிறமாத்திரம் அவரோட்டை * குடற்றுவக்காலே நானு மொருத்தியுண்டென்றுநினைத்திரும். (அயோத்யாமடவீம்வித்தி) " வநம் நமாவோஷ யேநமஹத்ராவவ: " என்று - பெருமாள் விரும்பினகாட்டையே படைவீடாகநினைத்து இவ்வூரை நெகிழ்ந்திருக்கிற தொன்றுண்டு; அத்தைவிட்டு அவர் தங்களையர்சொல் மாறுமைக்காகக் காட்டை விரும்பினுப்போலே, தம்பிசொல் மாறுமைக்காக இப்படைவீட்டையும் விரும்புவர்; ஆகையாலே இத்தையும் அவரோபாதி உத்தேஶ்யமென்று நினைத்திருக்கவேணும். இப்படி இளையபெருமாள் நினைவிதுவேயானுலும், ராவோத்ஸவத்தாலே கலங்கிச்சொல்லுகிறுளாகையாலே முன்புசொன்னவையும் ஸுஸ்தமாகக்குறையில்லை.

ஆகையாலங்குள்ள குறைகளைநினைத்து ψ நெஞ்சாறற்பட்டிராதே, அவ்வோவிடங்களுக்குத்தக்கபடியே $ பேணிக்கொண்டுபோகப்பாரும். (மஹதாதயாவஸவ்ய) " யேந யேநயாதாமஹதி தேந தேநஸஹமஹதி" என்றும் "காமஶ்ச்யுநஸஞரஶு" என்றும் " ஹா

* குடற்றுவக்கம் - சரீரஸம்பந்தம்.

ψ நெஞ்சாறல் - ஸேஷ்ராஜ்யம்.

$ பேணிக்கொண்டு -, ஆசைப்பட்டுக்கொண்டு, ஸந்தோஷப்பட்டுக்கொண்டு.

யாவாஸக்ஷே ந மஹேஜ’’ என்றும்-“நிழலுமடிதாருமானோம்’’ என்றுஞ் சொல்லுகிறபடியே,தொடர்ந்துகுற்றேவல்செய்யப்பாரும்.(மஹ) “வன தக்ஷோபாய நாஹே’’ என்றும்-“ அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை’’ என்றும் - இருந்தவிடத்தேயிருந்து கைங்கர்யம் பண்ணவேணுமென்று நிர்ப்பந்தமில்லை; பின்சென்ற வில்லியென்று பேர்படைக்கப்பாரீர். (தாத) ஹமவஷிஷயத்திலே போராடி ஓடிபுகுராநின்றவர்களை மௌரவித்து வார்த்தை சொல்லக்கடவதென்கிற ஔபசாரிகையாலே ஐயரென்று சொல்லுகிறாள். அன்றியிலே, (தா.த) உம்மைப்பெற்ற நானும் கைகேயிபடைத்தபேர் படையாதபடி பண்ணப்பாரீரென்று உவவரித்து வார்த்தை சொன்னாளாகவுமாம்.

*க.(யதாஸுவம்) யதாஸுஂஹவஂஸுவம்-என்றாய், நன்மைகளும் வந்தது வரக்கண்டுபோகப்பாரும். இவர்ஸுவத்துக்கு வெகுமாவது, “ஹவாஂஸுஸஹவெஷுஹ்யா மிரிவஸாநுஷுரஂஸ்யதே | சுஹஂஸவஂகரிஷ்யாமி’’ என்று - அச்சேர்த்தியிலே அடிமைசெய்யப்பாரித்து, அவருக்கு அதுகிடையாதே, சுதீயநடி அக்கரையு மிக்கரையுமாய்ப்பிரிந்து வனகுஹேஶ கைங்கர்யமாகையிறே. அங்ஙனன்றியிலே,*உ.(யதாஸுவம்)என்றது-ராஜஸுயதாஸுவம் ஹவதி தயாமஹ-என்றாய்- “ ஹாவஜ்ஞே நக்ஷு தஜ்ஞே ந ஶத்ரு ஜ்ஞே நவஶக்ஷண | க்ஷயாவந்தேண யதோக்தா நஸம்வ்ருத்த: விதாஜ ’’ அவரும்மை யுடையவராகையாலே, யாதொருபடியாலே நெஞ்சிற்குறையற்றுகப்பேயாயிருப்பர்; அப்படியே பேணிக்கொண்டுபோகப்பாருமென்றாகவுமாம். அங்ஙனன்றியிலே,*ந.(யதா ஸுவம்)என்று-யதாகுயோய்யாயாஹே ஸுவஂதயா ததாவி- என்றாயிற்று, உமக்குப் படைவீட்டிலும் ஸுவஹேதுவாயிருப்பது,“வேஶஸ்யஂவாவிஶோகாநாஂகாஜயே நக்ஷயாவிநா’’என்னு-

பெருமாளோட்டை அவிஶ்லேஷமிறே, அதெங்குமுண்டாகையாலே உம்முடைய ஸௌவத்துக்கு வைகல்ய மில்லைகாணு மென்றுமாகவுமாம். இப்படி ஸ்ரீஸுமித்ரையார் பெருமாள் பக்கலுண்டான வாத்ஸல்யத்தாலே இளையபெருமாளை வஹுமானமாகத் தாம் ஶிக்ஷித்து வார்த்தைசொன்னாராயிற்று. க௦.

தாத்பர்யம்.

(க) ஐயா! ஸ்ரீராமனை பிதாவைப்போல் ஹிதகரராகவும் ஸீதையை என்னைப்போலேப்ரியபரையாகவும் காட்டை வாஸயோக்யமாகவும் நினைத்து ஸுகமாய் புறப்பாடும்.

(உ) ஸீதையையும் ஸ்ரீராமனையும் தாய்தந்தைபோல் பூஜ்யர்களாகவும் காட்டை அயோத்யையாகவும் நினைத்து நேரிட்ட ஸுகத்தில் த்ருப்தியை யடைந்து புறப்படும்.

(ந) ஸ்ரீராமனைபக்ஷிவாஹனனைஸர்வேச்வரனாகவும் ஸீதையை லக்ஷ்மியாகவும் காட்டை பரமபதமாகவுமறிந்து ஸுகமாய் புறப்படும்.

(ச) உங்கள் பிறிவினால் தசரதரை உபசாந்தராகவும் என்னை பிறந்தகம் சேர்ந்தவளாகவும் அயோத்யையைக் காடாகவும் அறியும். நீர் ஸுகமாய் புறப்படும்.

(ரு) ஸ்ரீராமனை தசரதரைப் போலே பெண்டாட்டி பரதந்த்ரராகவும் ஸீதையை என்னைப்போலே உம்மை இருப்பிடம் விட்டு அனுப்புகிறவளாகவும் அயோத்யையைவிட்டு காட்டுக்குப் போவதுபோல் அக்காட்டையும் விட்டு கடற்கரை போவீரென்றும் அத்யவஸியும்.

(சா) உங்கள் தகப்பனாருக்கும் எனக்கும் இந்த அயோத்யாபுரிக்கும் ராமஸம்பந்த முண்டென்று நினைத்து எங்களை மறவாமல் ஸுவமாய்போய் வாரும். என்று காட்டுக்குப்போக நியமனம் கேட்ட இளையபெருமாளுக்கு தாயாரான ஸுமித்ராதேவி பகுவிதமாய் ஹிதம் சொல்லுகிறார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

அயோத்யாகாண்டம்- ௪௨ - ம் ஸர்க்கம், ௩௪ - ம் ஶ்லோகம்.

---

௪௦.— ராமம் ஶேஷமநுகதா த்ருஷ்டிரத்யாபி ந நிவர்த்ததே |
நத்வா பஶ்யாமி கௌஸல்யே ஸாது மாம் பாணினா ஸ்ப்ருஶ || ௧௧.

அர்த்தம்.—மே- என்னுடைய, த்ருஷ்டி: - பார்வை, (நயநேந்திரியம்), ராமம் - ஸ்ரீராமனை, அநுகதா - பின்சென்றது. அத்யாபி - இப்போதும், ந நிவர்த்ததே - திரும்பவில்லை. கௌஸல்யே! கௌசல்யையே! த்வா - உன்னை, நபஶ்யாமி - பார்க்கிறேனில்லை. மா - என்னை, பாணினா - கையினால், ஸாது - நன்றாக, ஸ்ப்ருஶ-தொடு.

வ்யா. அவதாரிகை. முடியானேயில்கரணங்கள்போலே, சக்ரவர்த்தியினுடைய கரணங்களும் பெருமாள் பக்கலிலே தனித்தனியே அநந்யார்ஹஶேஷமானபடியைச் சொல்லுகிறது.

*௧.(ராமம்ஶேஷமநுகதாத்ருஷ்டிரத்யாபி ந நிவர்த்ததே)கடல்கொண்ட வஸ்து மீளப் புகுகிறதோ வென்கிறான். "ஸமுத்ர இவகாம்பீர்யே" என்றும்-"ஸர்வஸத்குணஸம்பூர்ணோ ஜலதி:" என்றும்-"ஸம்பூர்ண நாமகுணாகரோஸௌ" என்றும் - அவர்தம்மைக் கடலாகச்சொல்லக் கடவதிறே. *௨.(ராமம் ஶேஷமநுகதாத்ருஷ்டி:) "ராமோராமயதாம் வர:" என்கிறபடியே, வேதநாவேதந விஷமமறத் † துவக்குகிற வவர் $ மினுக்கைக் கொடுபோக்கியது குற்றமோ? *௩. (ராமம்ஶேஷமநுகதா த்ருஷ்டி:) சக்ஷுரிந்த்ரியந்தான் ரூபவான்களை க்ரஹிக்குமதொழிய, ரூபவான்கள் சக்ஷுஸ்ஸை க்ரஹித்துக் கொண்டு போம்படியாவதே! ரூபவான் ரூபத்தைக் காட்டியென்னைவேத க்ராஹியாயிறே சக்ஷுஸ்ஸிருப்பது * ௪. (அநுகதா) பதார்த்தபாதநத்துக்கே கண்டகாரணம் பதார்த்தமான ஸாதநத்தை யநுஷ்டிப்பதே. * ௫. (ராமம் மே அநுகதாத்ருஷ்டி:) "யேநயேநதாதாகச்சதி" என்றும்-

---

† துவக்குகிற - கட்டுகிற, ஸ்வாதீனப்படுத்துகிற.

$ மினுக்கு - ஒளி, தைஜஸமான நயநேந்திரியம்.

"காமரூபவ்யாஹ்ருதஸம்ஞா" என்றும்-அவ்வஸ்தையைப்பின் செல்லுகை யொருவேதநக்ருத்யமாயிருக்க, ஸவேதநமான இந்த்ரியங்களுக்ஷிப்பதே. *௬.(ராமே ஸேநமதா) அதுதான்செய்யுமிடத்திலொரு தேஶவிஶேஷத்திலேபோனால்ஸ்ரீவைகுண்ட நாயகநு பக்கல்பண்ணும் ஸேவாவநத்தை,"இங்கேகாணவிப்பிறப்பேமகிழ்வர்" என்கிறபடியே,இஸ்ஸம்ஸாரத்திலேராமவிஷயத்திலேபண்ணப்பெறுவதே. *௭. (த்ருஷ்டிராமே ஸேநமதா)"வக்ஷ்யே த்வா நாமதந்த்ரா நாம்"என்றும்,"கண்ணவானென்றும் மண்ணோர்விண்ணோர்க்கு" என்றும்-ஜமவ்யாபநமான கரணம் முன்னேபோகத்துடங்கினவாறே, நீக்கிநின்றகண்ணும் அதின்பின்னேபோகத்துடங்கித்து. *.௮ (த்ருஷ்டிः)"த்ருஶிர் ப்ரேக்ஷணே" என்கிற யாஸ்கஸூத்ரத்தின்படியே, ஸாராஸாரவிவேகம் பண்ணி விஶேஷக்ரஹணஸக்தமாகையிறேயதற்கடியென்கிறான்.*௯.(த்ருஷ்டிः) நமக்ககப்பட நன்மைதீமைகளை யறிவிக்குமது தனக்கறியாதிராதிறே. *௧௦.(ஶேஷத்ருஷ்டிः)எனக்குஶேஷமாய்வைத்தன்றோதன்காரியஞ்செய்கிறது. ஶேஷமாவார்க்கு ஸாமதாதி ஶயாயாநம் பண்ணவேண்டாவோ?*௧௧.(ஶேஷத்ருஷ்டிः) அழகியதாகநெடுங்காலம்பழகிப்போந்தோம். *௧௨. (ஶேஷத்ருஷ்டிःராமே நமதா) விரவுமிவிதனானாயிருக்க,அங்கேஇதொருகண்ணின் ||நாட்டமிருந்தபடியென்.*௧௩.(ஶேஷத்ருஷ்டிः)இதுதான்ஸ்வதந்த்ரமாயிற்றாகிலும்இப்படிச்செய்யலாமிறே.*௧௪(ஶேஷத்ருஷ்டிः) கைகேயிஸாரைகளுடையகண்ணாகிலிப்படிசெய்யாதிறே."நஹாஸிவஶ்யேநவிஶ்வஸே நந" என்று - இதற்கு வழிகாட்டிக்கொடுத்தேன்நானேகிடீர்.*௧௫.(ஶேஷத்ருஷ்டிः)கண்டதிலேகால்தாழும்படிவசமாணவென்னுடைய த்ருஷ்டியாகையிறேயிப்படிசெய்கிறது.*௧௬. (ஶேஷத்ருஷ்டிः) அவ்விஷயத்திலே ப்ரவணமானபடியாலே அதுதான்விட்டுப்போகச்செய்தேயும் இவனத்தோடே தனக்கு ஸம்பந்தத்தை யெடுத்துக் காட்டுகிறான். "பெற்றதாயரை விட்டகன்று" என்று - பெண்பிள்ளைதான்விட்டுப் போகச்செய்தேயிறே, திருத்தாயார், "எந்தன்

நாட்டம் - பார்வை. விருப்பம்.

மடமான்" என்று—ஸம்போதிக்கச் சொல்லுகிறது. *௭.(த்வத்ருஷ்டி: ராமே ந க₃தா) என்னுடைய விஷயமானுலென்னெஞ்சைப்பின் செல்லு மத்தனைபோக்கி, ராமனைப்பின்செல்லுவதே!

அதற்குறுவதென், தனக்கு விஷயமானவளவும் பின்செல்லு கிறது, அனந்தரம்மீளாதோவென்னில்; *க.(அத்₃யாபி ந நிவர்த்ததே) "அதிக்ராந்தமதிக்ராந்தம்" என்று-அவர்ஸ்வவிஷயத்தைக்கழிந்தஇப் போதும்மீளக்காண்கிறிலோம். *உ. (த்ருஷ்டிரத்₃யாபி ந நிவர்த்ததே) இங்கேவரிலின்னமும் கைகேயி ஸ்வதத்திலே விழிக்க வேண்டில் செய்வதென்னென்கிறபயத்தாலேஇன்னமும்வருகிறதில்லை.*ங (த்வ த்ருஷ்டிரத்₃யாபி ந நிவர்த்ததே) ஒருவனுக்கொரு க்லேஶம் பிறந்தால், ஸம்பந்திகளானவர்களுடைய வந்துதவக்கடவதாயிறே யிருப் பது. ஆகவித்தனைநான் ராமவிரஹத்தாலேக்லேஶிதனானவிவ்வளவி லும்வந்துதவுகிறதில்லை.*ச.(த்வத்ருஷ்டிரத்₃யாபி ந நிவர்த்ததே) நெடு ங்காலம்பண்ணினவாஸனை யெல்லாங்கிடக்க, ‡"நோபஜநம் ஸ்மரந்நித₃ம் ஶரீரம்" என்கிறபடியே, நம்மை நேராகமறந்து வாராதொழி வதே. *ரு. (த்ருஷ்டிரத்₃யாபி ந நிவர்த்ததே) போனபெருமாளைமீட்க மாட்டாதாகிலும் தான்மீளத்தட்டென்ன. *சு.(ராமே ந க₃தா த்ருஷ்டி ரத்₃யாபி ந நிவர்த்ததே) ஏதேனுமாகஅவ்வஸ்துவைப் பின் சென்றார்க்கு, "ந ச புநராவர்த்ததே" என்கிறபடியே மீட்சி யில்லையாயிருந் ததிறே.

மீட்சியில்லையாவதென்! அது உம்மைவிட்டுப்போயிற்றோ மீளு கைக்கென்ன; *க.(ந கௌஸல்யே) கெடுவாய்! தோற்றுகிற மோஹ மன்றுகாண் வக்ஷ்யமாணவிஷயமாவது. அதீந்த்ரியமாகையாலே காயத்து க்ஷேமானபின்பு, வஸ்தோர்த்தியின் வுன்னைக்காணமையாலே போயிற்றென்கிறான். *உ.(ந கௌஸல்யே) உன்னைக்காணதபோது கண்தோற்றதேயும், உன்னைக் கண்டபோது கண்விழித்தும் பொரக்

‡ உபஜநம் - ஜநங்கள் ஸமீபத்திலிருக்கிற, இதம்-இந்த, ஶரீ ரம்-தேகத்தை, ஸ்மரந்-நினையாததாய்.

கடவனை நான் நீமுன்னேநிற்கச் செய்தே காணு தொழிகிறேன். ஶ்ரா- என்று-என்னை ஸந்நிஹிதையாகச்சொல்லாநிற்கச்செய்தே,நஶ்ராவஸ்யாமி-என்கிறபடி யென்னென்னில்;*ந.(நஶ்ராவஸ்யாமி) அவிதஶ்ருணோமி- யவஸாஜ்ஞாதஃ-ஸ்வரேணோக்தஃ-என்று-வார்த்தை சொல்லுகையாலேஸந்நிஹிதை என்று அநுமித்தேனத்தனை. சக்ஷுரிந்த்ரியங்குடிபோகையாலே ப்ரத்யக்ஷிக்கப்பெற்றிலேனென்கிறான். *ச.(நஶ்ராவஸ்யாமி)அவர்முகத்திலே விழிக்கப்பெறாதொழிந்தால், அவரைப்பெற்றவுன்முகத்திலேயாகிலும்விழிக்கலாமென்றிருந்தேன். அதுவுங்கிடையாதொழிவதே.*ரு. (ராமம்தேஹமதாத்ருஷ்டிஃ-நஶ்ராவஸ்யாமி) வ்யாநவரிகரமான கண்தானே அவர் பின்னே போகையாலே அஸந்நிஹிதமாயிற்று, ஸந்நிஹிதையான வுன்னையோ காணப்பெறுகிறிலேன், நானென்னசெய்வேனென்கிறான். *சு.(ராமம் தேஹமதாத்ருஷ்டிஃ-நஶ்ராவஸ்யாமி)" அண்டர்கோ னணியரங்கனென்னமுதனைக்கண்டகண்கள் மற்றொன்றினைக்காணாவே" என்றுமாப்போலே, அவ்விஷயத்திலே ஆழங்கால்பட்டது இனிவேறொன்றைக் காணவற்றோ என்கிறான்.

இப்படி சக்ஷுரிந்த்ரியந்தனக்குதவாமையாலே வாகிந்த்ரியத்தைக் கொண்டாகிலும் ஶ்வஸிப்போமென்று பார்த்து, அவள்பேரைச்சொல்லி ஆறுகிறான். (கௌஸல்யே) "ஸஷ்டேஜீவிதஸ்யாந்தோ ராஜோயத்ருஷிஷ்யதே" என்று - தென்றல்பகையாய் பெருமாளுடைய அநயத்தில்முடியத்தேடுகிற கைகேயியு மொருத்தி. "கிம்வாநஃ ப்ரோஷிதே தாதே யாவம் ஶரணமேவமே" என்று- அவர் வ்யதிரேகத்தில் முடியத்தேடுகிற நீயுமொருத்தி. ( கௌஸல்யே ) "கௌஸல்யா லோகபர்த்தாரம் ஸுஷுவேயம்மநஸ்விநீ" என்று-நீநாடுவாழமநோரதித்துப் பிள்ளைபெற்றபடியும். அதெல்லாங்கிடக்க, நாடோடென்னோடு வாசியறக் கெடும்படியாவதே. ( கௌஸல்யே-ஶ்ராநவஸ்யாமி) அநர்த்தகரையான கைகேயியை இத்தனைபோது கண்டகண்கள், ஶ்லாஸகரையான வுன்னைக்காணு தொழிவதே!

இவனிப்படி தன் தளர்த்தி தோற்ற, ஸர்வஜ்ஞ - என்றழைத்த வாறே தியங்கின விவனையு மிழக்கலாகாதே, புகுகிறேமென்று துணுக்கோடேகிட்டவந்துசெய்யவேண்டுவதென்னென்றுகேட்க; *க. (ஸாயம்ஸவாணி நாஸ்த்ர) என்னுடைய க்லேஶமெல்லாம் போம்படி உன்னுடைய ஈரக்கையாலேதடவி ஆஶ்வஸிப்பியாயென்கிறான். *உ. (வாணி நாஸ்த்ர) வரோவதிநியான வுன்னைக்காணாமையாலே சக்ஷுரிந்த்ரியம் குடிபோயிற்றென்றறிந்தோம். உன்னுடைய வாக்யஶ்ரவணம் பண்ணினபடியாலே ஶ்ரவணேந்த்ரியங்கிடந்த தென்றறிந்தோம். ஸர்வஜ்ஞ-என்று-உன்னுடைய நாமக்ரஹணம் பண்ணின படியாலே வாகிந்த்ரியங்கிடந்த தென்றறிந்தோம். மந்த்ரஹணம் பண்ணாமையாலே அவரை யுச்சிமோர்ந்த க்ராணேந்த்ரியம் போயிற் றென்றறிந்தோம். ஸ்பர்ஶேந்த்ரியஞ் செய்தபடி யென்னென்னில்; அஃதறியலாம்படி என்னை யணைத்துக்காணாய். கள்ளர் புகுந்துபோன வகத்திலே கிடந்ததும்கிடவாததும் ஆராய்வாரைப்போலே. வந்துபோனவர் தாம் வஞ்சக்கள்வனிறே. என்னைம்புலனு மெழிலுங் கொண்டிங்கேநெருநலெழுந்தருளிப்போனபுனிதரென்றாரிறே. *ங. (ஸாயம்ஸ்த்ர) இத்தனைபோதுங்கைகேயியோடே ¶யொருமிடராய் அவனைக்காட்டேறப் போகவிட்டு, இப்போதாக நின்று $ ஆரோதமடியாநின்றானென்று நினைத்திராதே, § அவித்யாவஸத்தாலே இக்கலக்கமிவனுக்கு வந்தேறி, இப்பாவி யென்செய்வானென்று நெஞ்சிறக்கத்தோடேதொடவேணும். *ச. (வாணி நாஸ்த்ர) அன்றுஅக்னிஸாக்ஷிகமாக ஜன்மக்ரஹணத்திலே ஸகலதர்மமாகப்பிடித்தவக்கையாலே அங்கினைவோடேதொடவேணும். *ரு. (வாணி நாஸ்த்ர) ஸவர்ணங்களாலும் என்னையணைத்து வெள்ளக்கேடாகாமே ஸாதிக்கும்படி ஶரணாவயவத்தாலே ஸ்பர்ஶிக்கவேணும். *சு. (ஸாயம்ஸவாணி நாஸ்த்ர) பெருமாளையெடுப்பதொப்பிப்பதாய், அவருடையவங்க

¶ ஒருமிடர்-ஏககண்டம்-ஒன்றாய்கலந்து.

$ ஆரோதம்-அனுவர்த்தனச்சொல்.

§ அவித்யா-அஞ்ஞானம்.

ஸம்பந்தத்தாலே வாஸிதமானவக்கையாலே தொடவேணும். *௭. (ராமஸ்ப்ருஶ) ராமஸம்பந்தம் பெறிலுஜ்ஜீவித்தும் பெறாதபோது முடியும்படியாயிருக்கிறவென்னை அவரைப்பெற்றவுன்னுடைய வக்கையாலே யணைக்கவேணும். ஸாக்ஷாத்ஸம்பந்தம் நேர்கொடு நேர்கிடையா தொழிந்தால், அவருடைய ஸம்பந்தி ஸம்பந்திகளுடைய ஸம்பந்தங்கொண்டு உஜ்ஜீவிக்கக் கடவதாயிறே யிருப்பது. "தாம்ஸ்ப்ருஷ்ட்வா ராமஸ்ப்ருஶ" என்றவர்தாமும் இத்தலையைப்பெறாதபோது இப்படி பட்டாரிறே.*௮. (பாணிநாஸ்ப்ருஶ) "அணிமிகுதாமரைக் கையையந்தோ வடிசசியோந்தலைமிசைநீயணியாய்" என்று-அவ்விஷயத்திலே சொல்லக்கடவ பாசுரத்தை அது கிடையாமையாலே ததீயவிஷயத்திலே சொல்லுகிறானிறே.

*௧. அண்டர்கோன்-இதரவிஷயங்களிற்போகாதபடி கால்தாழப் பண்ணுகிற விஷயத்தில் வைலக்ஷண்யமிருக்கிறபடி *௨.—அண்டர்கோன் - "யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:" என்றும்- "விண்ணோர் பரவுந்தலைமகன்" என்றும் - "அயர்வறு மமரர்களதிபதி" என்றும் சொல்லுகிறபடியே, அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளுக்கு நிருபாதிக நிர்வாஹகனான மேன்மையை யுடையவன். * ௩.—அண்டர்கோன்-தனித்தனியே முடியுடை வானவராய் நிரபேக்ஷமான பெருந்திரளுக்கு நியாமகனானவன். *௪.—அண்டர்கோன் - "மனிசர்க்குத் தேவர்போல தேவர்க்குந் தேவாவோ" என்றும் - "பரம் பராணாம்" என்றுஞ் சொல்லுகிறபடியே, ப்ரஹ்மாதிகளில் அத்யந்த விலக்ஷணரான நித்யஸூரிகளுக்கு மேலானவன். இப்படி நெட்டேணி யிட்டேறவேண்டும்படி ☨ மிசைகொம்பா யெட்டாநிலத்தேயா யிருக்குமோ வென்னில்; *௧.— அணியரங்கன் - அக்குறைதீரத் தன்னைக்கொண்டுவந்து ஸந்நிஹிதனாக்கினவன். *௨.— அணியரங்கன்- "அரங்கத்தரவணைப்பள்ளியான்" என்றுமாப்போலே, போக்குவரத்தற ஸ்தாவரப்ரதிஷ்டையாகவந்துசாய்ந்தவன். "ஶேஷ்யவதாரஸ்தாணுகாயா யாவத்ப்ரவஸீததி" என்று - அவர்பக்கல் நாம்பண்ணுமத்தைத் தாமிங்கேவந்து வளைப்புக்கிடக்

☨ மிசை-உயரத்திலிருக்கிற.

கிறவன். பயிர்த்தலையிலே @குடிற்கட்டிக் கிடப்பாரைப்போலே, ஜீவ ஸம்ரக்ஷணார்த்தமாகவந்து படுகாடு கிடக்கிறவன். *௩.—அணியரங் கன்-அண்டர்கோ னென்கிறவிடத்தில் அவர்களுக்கு மணுகவொண் ணாதபடி பெரியமதிப்போடே, "ஏஷ ஸர்வ" என்றுநியாமகனாய், அது நிரூபகமாம்படி யிருந்தான். இவ்விடத்தில் தேஶிகரில் தானு மொருவனாய்க்கலந்து பரிமாறி, "புனலரங்கமூர்" என்றடையாளஞ் சொல்லிப்போயிற்று.*௪.-அணியரங்கன்-ப்ராக்ருதமானதேசத்தை விட்டு, பற்றவேண்டும்படி ஸம்ஸாரத்துக்கு காரணமானகோயிலை யுகந்தவன். அண்டர்கோனமருஞ்சோலையிறே. *௫.—அணியரங்கன்- நாள்தோறும் ஶேஷவஸ்துவைப்பெறுகையாலே திவ்யோத்ஸவமாய், "ஸித்தாஶ்ரமமிதம் புண்யம் ஸம்ப்ராப்தவாந் ஸ்வஸ்தி" என்றும் - "பதாகாத்யுபஶோபிதம்" என்றும் - "திட்கொடிமதிள்சூழ்திருவ ரங்கத்தாய்" என்றுஞ்சொல்லுகிறபடியே, நித்யாலங்க்ருதமானகோ யிலிலே வாழுகிறவன். *௬.—அணியரங்கன்-"தேஶோயம் ஸர்வகாமதுக்" என்கிறபடியே, ஸர்வப்ரகாரமான ஸ்தவனை யகப்பட விங் கேயழைத்து தன்பக்கல் ஸகாராத்ரவாஸத்தாலே இஸ்ஸம்ஸாரிகளு டைய வ்யதிஸங்கங்களையும் போக்கி, சேர்த்து ரக்ஷிக்கக் கடவோ மென்று அதிலே யொருப்பட்டிருக்கிற கோயிலிலே யிருக்கிறவன். *௭.—அணியரங்கன் "ஶ்ரீரங்கஸ்தாநே நந்தஸ்தாநம்" என்றுசொல்லுகி றபடியே, அவர் ஸந்நாராயணத்தாலே யுகந்துவர்த்திக்கிறதேஶம். நித்யவிபூதியிலே யிருக்கும்போது அங்கு குறைவாளரில்லாதபடி யினாலே, தான் குறைவாளனாயிற்றிருப்பது. இங்கேவந்த பின்பா யிற்று ரக்ஷ்யவர்க்கம் பெற்று ஸபிவர்ணராய் திருவரங்கச் செல் வராயிற்று. நமக்கு பரமபத ஸந்தேஶ்ய மாமாப்போலே யாயிற்று, அவருக்குக் கோயிலுத்தேஶ்யமாயிருக்கும்படி.—ஸர்வஜ்ஞனை வித்தா லுமக்குப் பேறென்னென்னில்; *க.—என்னமுதனே-எனக்கு யாரா கனான என்னமுதனே. தேவர்கள் க்ருதத்தில் வ்யாவ்ருத்தி. அதாவது - தான்உப்புநீராய் கவேதநமாயுடம்பு நோவக்கடையவேண்டி ஶரீ ரத்தைப் *பூண்கட்டக்கடவதாய், இத்தனைபட்டாலும்மாளும்படியா

---

@ குடில்-சிற்றில்.

* பூண்கட்ட-பலம்செய்ய.

யிருக்கும். இது ஸர்வரஸமுமாய், ஸர்வகந்தமுமாய், ஸ்வயந்த விஷமுமாய், க்ஷுத்ராவெப்பூண்கட்டக்கடவதாய், நித்யமுமாயிருப்பது.*௨.—அமுதனை-"ஸகலவாக்ஷீதேவ்யாதிவஸ்ய" என்றும்-"க்ஷுத்ராவைவ ரஷ்ஷ்யஸ்ய" என்றும்-"ரஸோ வை ஸ:" "ஸர்வரஸ:" என்றும் - "விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:" என்றும் - "தூயவமுதை" என்றும்-"ஆராவமுதே" என்றுஞ்சொல்லுகிறபடியே, ஒருக்காலுந்தேக்கிடாதவமுதமாயிற்று.-*௩. அண்டர்கோனணியரங்க னென்னமுதனை-உபயவிபூதி யொருதட்டும் நானொருதட்டுமாயன்றோ விஷயீகரித்தது. அண்டர்கோ னென்கையாலே நித்ய விபூதி யோகஞ்சொல்லிற்று. அணியரங்க னென்கையாலே லீலா விபூதியோகஞ்சொல்லிற்று. அவ்வோபாதி தம்மையுமொருவிபூதியாகநினைத்து, என்னமுதனை என்கிறார். "திருமால் வைகுந்தமே" "திருபாற்கடலே என்தலையே" என்றுமாப்போலே. அண்டர்கோ னென்கையாலே ஸ்வாமித்வஞ் சொல்லிற்று. அணியரங்க னென்கையாலே ஸௌலப்யஞ் சொல்லிற்று. என்னமுதனை யென்கையாலே ஸௌஶீல்ய வாத்ஸல்யஞ் சொல்லிற்று. அண்டர்கோ னணியரங்க னென்கையாலே, ஸர்வஜகத் ஸ்வாமிநு! என்கிறார். என்னமுதனை என்கையாலே, மம ஸ்வாமிநு! என்கிறார். *௪. என்னமுதனை-"தஸ்மிந் விஷ்ணு: க்ருதக்ருத்ய:" என்று-அவனைப்பெற்று இவன் க்ருதக்ருத்யனைப்போலேயாயிற்று, இவரைப்பெற்று அவர் க்ருதக்ருத்யரானபடி. இப்படி நிரதிஶயபோக்யரான விவரைப்பெற்று செய்ததென்னென்னில்;*௧.—கண்டகண்கள்-என்றும்பாழ்போகாதபடி அநுபவிக்கப்பெற்றனவாயிற்று.*௨.—கண்டகண்கள்-"காணவாராய்" என்றும்-"அஜ்ஞாநஸாக்ஷாத்காரவாணிவக்ஷுஷா" என்றும்-காணவாசைப்பட்டுபோகையன்றிக்கே, யதாவந்நாராயணங்காணப்பெற்றனவாயிற்று.*௩.அமுதனைக்கண்டகண்கள்-ஸர்வேந்த்ரியவிஷயமான வஸ்துத்தை வக்ஷுஸ்ஸு விஷயீகரிப்பதே!*௪. அமுதனைக்கண்டகண்கள்-"வைஹாயஸே

தேநயதேந நராணாம் விஷ்ணுந்ருஜ்ஞாநி நிரீக்ஷதே ஸதாயே’’ என்கிற படியே, பீலிக்கண்ணனை கண்களன்றிக்கே பெற்றகண்கள். ‘‘நஸாம் ஸசக்ஷுஷா ஸஹி வீக்ஷதே தம்’’ என்றும் - ‘‘நசக்ஷுஷா பஶ்யதி கஶ்சநைநம்’’ என்றும் - ‘‘கட்கிலி’’ என்றும் - ப்ரமாணங்கள் நிஷேதிக்கச் செய்தேயும், முற்பட வின்றுகாணப்பெற்ற கண்கள். *ரு. அமுதனைக்கண்டகண்கள் - நாட்டாரைப்போலே மாறும்படியாக வாநம்பண்ணி அநுபவிக்கையன்றிக்கே, ‘‘நாஸூக்ஷி நவிபஶ்யதி’’ ‘‘ஸதத்வேவாத்ருஷ்டம் த்ருஷ்டாத்ருஶ்யதி’’ என்கிறபடியே, முதலிற்சிதையாதபடி காட்சியாலே பருகிக்களித்தனவாயிற்றிவை - *சா. கண்கள் - அநேந்த்ரா ந்ருஸஶ்ரம மென்றுமாப்போலே ஒன்றுக்கொன்றொப்பாயித்தனைபோக்கி, வேறுஉபமாநமில்லாதவை. *க. மற்றொன்றினைக் காணாவே - ஆதித்யமண்டலத்தில் தீக்ஷித்தாயிற்றிருப்பது. மற்றொன்றை எடுத்துக் கழிக்கைக்கு ⊕ ப்பாத்தம்போராதே இருக்கிறபடி. *உ. காணாவே - ‘‘பஶ்யந்தி ஸதாஸூரய:’’ என்றும் - ‘‘ஸதாபஶ்யந்தி’’ என்றும் - த்ரிவாதிஸூதியாக இமைக்கொட்டுவதும் செய்யாதே, அநுபவிக்கிற வடிவழகு இதொன்றுமே அநுபவிக்கப்புக்கால், மேற்றொன்றில்புகுராலாயோஇருப்பது. *ங. அணியரங்கனைக்கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே - ‘‘ஶாஸ்த்ராண்யேக ஜநார்த்தநம்’’ என்றும் - ‘‘ஶாஸ்த்ரத்ருஷ்டிர் நவதார்த்தநா’’ என்றுஞ்சொல்லுகிறபடியே, ஓலைப் புறத்தேகண்டு போகையன்றிக்கே, இக்கண்ணாலே யிங்கேகாணப் பெற்றதுவேறொன்றுகாணவற்றோ? *ச. என்னமுதனைக்கண்டகண்கள் மற்றொன்றினைக்காணாவே - கண்டபோதே முகத்தைமாற வைக்கவேண்டும்படி செந்தீயாயெரிந்திருக்கை யன்றிக்கே, கண்கள் குளிர்ந்திருக்கும்படி நிரதிஶயஸௌந்தர்யமாய், அதைவிட்டுப் புறம்புகால் வாங்கப்போயோவிருப்பது. *ரு. கண்டகண்கள் மற்றொன்றினைக்காணாவே - காணாதபடி அடியிலே விலக்கின்றோமாகில் மீட்கலா மத்தனை போக்கி, கண்டபின்புமீட்கலாமோ? *கூ. அண்டர்கோனணியரங்கனென்னமுதனைக்கண்டகண்கள் மற்றொன்றினைக்காணாவே - உபயவிபூதி விஶிஷ்டனாய் ஸர்வாத்மகனான விவனைக்கண்டால், ‘‘த்ருஷ்டே ஸர்வேரோ த்ருஷ்டமிதம் ஸர்வம் த்ருஷ்டம் பவதி’’ ‘‘நாந்யத்பஶ்யதி நாந்யச்ச்ருணோதி’’ என்றுமாப்போலே, ஸர்வமும் ததாத்மக

⊕ பாத்தம் - யோக்யதை.

மாய்த் தோற்று மத்தனையொழிய, தத்³வ்யதிரிக்தமாக வொன்றுந் தோற்றாதென்றாகவுமாம். மற்றொன்றினைக் காணாவே-என்று - அவனையே ¹ யுருவக் காணுமென்னும்படியாயிற்று. அதாவது-உகந்தருளின திருமேனியில் ஸாக்ஷாத்காரம், "தஸ்மிந்நத்³ருஷ்டே பராவரே" என்னும்-"ஆத்மாவாஅரே த்³ரஷ்டவ்ய:" என்னும் சொல்லுகிற உபாஸநதசையில் ஸாக்ஷாத்காரத்தைக்கொண்டு போய்மூட்ட, அது, "ஸதா³பஶ்யந்தி" என்கிற முக்ததசையில் ஸாக்ஷாத்காரத்தோடேமூட்ட, அது யாவதா³த்மபாவியாகையாலே, உருவவிப்படி நடக்குமென்று கருத்து. அத்தையிறே, ராமம் மேऽநுக³தா த்³ருஷ்டி: நத்வா பஶ்யாமி - என்று ஜஷி சொல்லுகிறது. ௧௧.

தாத்பர்யம்.

புத்ரவாத்ஸல்யத்தாலே நான் ஸ்ரீராமனை இடைவிடாமல் பார்த்து அப்யாஸம் பண்ணிவைத்தபடியால் ஸாராஸாரங்களை யறியத்தக்க என்னுடைய நயனேந்திரியம் ஸாரதமமான ஸ்ரீராமனைப் பின்தொடர்ந்தது. அவர் கண்களுக்கெட்டினதேசம் தாண்டிப்போனாலும் என்னுடைய நயனேந்திரியம் மீளவில்லை. ஆகையாலே, நீ என்முன்னாக நிற்கிலும் எனக்குத்தெரியவில்லை. உன்னுடைய குரல்கேட்டு உன்னை ஸமீபத்தி லிருப்பதாக நினைக்கிறேன். இப்போது எனக்கு த்வகிந்திரியங்கூட பெருமாள் பின்சென்றதோ வென்று ஸம்சயமாயிருக்கிறது. அதையுமாராய்வோம். நீ என்னை நன்றாக தொட்டுப்பார். என்று பெருமாள் வனத்துக் கெழுந்தருளினபிறகு கௌஸல்யாதேவியோடு தசரதர் தன்னுடைய துர்க்கதியைச் சொல்லுகிறார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அயோத்யா காண்டம் - ௫௯ - ம் ஸர்க்கம், ௪ - ம். ஶ்லோகம்.

௨௦.—விஷயே தே மஹாராஜ ராமவ்யஸநகர்ஶிதா: ।
அபி வ்ருக்ஷா: பரிம்லாநா: ஸபுஷ்பாங்குரகோரகா: ॥ ௧௨.

அர்த்தம்—மஹாராஜ - மகாராஜனே! தே - உம்முடைய, விஷயே - தேசத்தில், ராமவ்யஸநகர்ஶிதா: - ஸ்ரீராமனுடைய துக்கத்தாலே இளைத்திருக்கிற, ஸபுஷ்பாங்குரகோரகா: - பூவோடும், குருத்தோடும் மொக்கோடும் கூடின, வ்ருக்ஷா அபி - இடைவிடாமல் தண்ணீர்கட்டப்பட்டிருக்கிற மரங்களும், பரிம்லாநா:-நாலு பக்கங்களிலும் வாடிப்போயின.

---

¹ உருவ - முடிய.

வ்ர. ஸவதாரிகெ. மஹாவரிஸரத்திலேபெருமாளைவிட்டுத் தேருங்கொண்டு மீண்ட ஸுமந்த்ரன் வக்ரவர்த்தியைக்கிட்டி, பெருமாளுடைய விஶ்லேஷத்தில் பிறந்த விஶேஷங்கள் பலவுஞ்சொல்லி, உன்னெல்லைக்குள்ளுண்டான ஸ்தாவரங்களகப்பட பட்டபாடு இதுகாணென்கிறான்.

*க. (விஷயேதே) நாட்டாருடைய ராஜ்யத்துக்கு முன்னுடைய ராஜ்யத்துக்கும் உள்ளவாசிகேளாய். *உ. (விஷயேதே) தக்ஷிணகோஸலமும உத்தர கோஸலமுமா யுன்னுடைய ரக்ஷணத்திலே பொருந்தியெல்லைத்தோரணத்துக்குட்பட்டநாடங்க. *ந. (விஷயேதே) “இக்ஷ்வாகூணாமியம் பூமி: ஸஶைலவநகாநநா” என்று — விளைநிலத்தோடும் மலைநிலத்தோடும் மரநிலத்தோடும் வாசியற எனதென் றபிமாநித்து இருக்கும்படி, உன்னபிமாந விஷயமான விப்பரப்பில். *ச. (விஷயே) “நாடுநகரமும்” என்கிறபடியே, ஸவிஶேஷஜ்ஞராயும் ஸவிஶேஷஜ்ஞரராயும் ஸமஹோக்தாக்களாயுமாயுள்ளநாடு இருந்ததே குடியாக.

யாருடையநாடென்னில்; *க. (தே) “ப்ரஜாநாம்விநயாதாநாத் ரக்ஷணாத்பரணாதபி । ஸபிதா” என்றும் — “ஸபிதாயஸ்து போஷக:” என்றுஞ் சொல்லுகிறபடியே, பெற்றபிதா ப்ரஜைகளை ரக்ஷிக்குமாப்போலே, உன்வயிற்றிலேவைத்து ரக்ஷிக்கிற உன்னுடைய. *உ. (தே) ஸ்தாவரங்களகப்பட க்ருதஜ்ஞராய், வக்ஷவாதம் பண்ணும்படிவர்ண்யவானாயிருக்கிற உன்னுடைய. *ந. (தே) “ஸமீபவாஹ்யாஸ்து வாஹ்லிகா:” என்று — ஸமவதிஶேஷமாம்படியான வாவதேஶமன்றியிலே, ஸமவதவிஶேஷமாம்படியான இதேஶத்தையுடைய வுன்னுடைய.

என்னுடைய விஷயமாங்காட்டி லிப்படியாகைக்கடியென்னென்னில்; (மஹாராஜ) “ராஜாவா ராஜமாத்ரோவா” என்று — க்ஷத்ரவம்ஶ்யமாதல், ஸாமந்தராதல், க்ஷத்ரியஜந்மமாய்வைத்துப்பெட்டைக்குடியாதலாகையன்றியிலே, “த்வேஷம்ப்ரியிவிஸவஸுர” என்

றும்-"வநகாந்தவத்ரஜமத: வ்ருஹஷ்ணிவ" என்றும்-"வாயுர்ஹ்ரஸமய வயுஸ்ஸூர்யஸஞ்சஹத்தீம்ஸ்ஸூர்ஹிம்" என்றும்-ஒருமுள்குத்துகிலமாளுமாப்போலே, இப்பரப்படங்கவீரக்கையாலே தடவியடக்கியாளுகிற வுன்மதிப்பான பெருமையாலேஎன்கிறது. (ஸஹாராஜ) ரஜ்ஜுநாஜராஜா- என்றும்-"ஸுநரத்ருவ்யஜா ஸிஶ்வவ்யஜாஶ்யாவ்ருந ரஜ்ஜேதே" என்றும்- நாடுஇருந்ததே குடியாகவுமக்கு நல்படும்படி நீர்தான் நல்லீராய், இப்படி உஸயாநுராகமுமுண்டாம்படிநடத்துகிறவரல்லோ? ஆகையாலே யென்கிறது.

அதென்பக்கல் க்ருதஜ்ஞதையாலேயாய் பெருமாள் பக்கலொரு குணாரமில்லையோவென்னில் ; * ௧. (ஸர்வே ஸநகஸ்திதா: ) "குணாபிராமம் ராமம்" என்றும்- வல்வினையேனையீர்கின்ற குணங்களையுடையாய்" என்றுஞ் சொல்லுகிறபடியே, பெருமாளுடைய குணங்களில் † பாட்டாலேயென்கிறது. *௨. (ஸர்வே ஸநகஸ்திதா:) எல்லாரோடும் ‡ வரையாதே பொருந்தும்படியான பெருமாளுக்கு இவ்வாஸம் வருவதேயென்று க்லேஶித்தார்கள். *௩. (ஸர்வே ஸநகஸ்திதா:) எல்லாரையும் வாழ்விக்கிறபெருமாளுக்கு இதொரு வ்யஸநம் வருவதே என்று க்லேஶத்தால் க்ருஶங்களாயின.

இப்படி க்லேஶித்தவர்கள் தான்யாரென்னில்; (அபிவ்ருக்ஷா:) அறிவுடைய சேதநரல்ல ; அறிவில்லாத மரங்களகப்பட. (அபிவ்ருக்ஷா:) வ்ருக்ஷா அபி - வ்ருக்ஷங்களுமென்கிற உம்காரத்தாலே திர்யக்ஜந்துக்களேயல்ல, ஸ்தாவரமகப்பட க்லேஶித்தன வென்கிறது. அவர்கள் தான் க்லேஶித்தபடியுண்டோவென்னில்; "வாக்ரோஶந்தி வநதேவதா:" என்று-வநதேவதைகள் கூப்பிட்டன. "த்யஜந்தி கவளாந் நாகா:" என்றும்- "ம்ருகாஸ்ஸ்தநஹாராஞ்ச நிவ்ருத்த நிவேக்ஷா:" என்றும்-யானைகளும் ம்ருகங்களுங்கவ்வின புல்லுக்கடவாய் சோரநின்றனவென்று சொல்லிற்றிறே. "இஹைவ நிதநம் யாமோ மஹாப்ரஸ்தாநமேவ வா । ராமேண ரஹிதாநாம் து கிமர்த²ம் ஜீவிதம் ஹி ந:" என்று - மநுஷ்யர்கள் க்லேஶித்தார்கள். அவ்வளவேயல்ல, மரங்களும் க்லேஶித்தன வென்கிறது

---

† பாட்டாலே - ஆசையாலே. ‡ வரையாதே - பிரியாதே.

(*)கோடைதட்டியுலருதல் △பாரிலேதட்டியுலருதல் செய்தமரங்களன்றியிலே தளிரும் ♣முறியுமானபசுமரங்களப்படஉலர்ந்தனவோ வென்னில்; (வ்ருக்ஷாஶ்சவிவர்ணா:) "வ்ருக்ஷேவ்யஸநே" இறே. ஆகையாலே, ஸிக்தங்களாய் பாத்தியிலே நிறம்ப நீர் நிற்கச்செய்தேயுலர்ந்தன.

(வர்ணா:) ⚘ தறிகையிட்டுவெட்டுண்ட மரங்களடியற்றால் வாடுமாப்போலே, வாடின. (வர்ணா:) இப்போ திவ்விஶ்லேஷக்லேஶத்தாலே ☼செருக்குவாடித்தத்தனைபோக்கி, "ஏதிஜீவந்தமாநந்தோ நரம் வஷ-ஶதாதபி" என்று – உயிர்கிடந்தால் என்று கூடியும் நன்மைவருமென்கிற ந்யாயத்தாலே, பெருமாள் பதினாலாண்டு கழிந்தால் வருவரென்றும் நசையாலே கருகித்தனவில்லை. (வர்ணா:) ஶாகைகளில் கருவ்ருக்ஷமாய் இளசாங்கொழுந்துகள் வாடுகை யன்றியிலே,வர்ணா:-மரங்களிலடி ∴ப்பணையோடு தலைப்பணையோடு, கொம்புகளிலடியோடுதலையோடு,முத்தலையோடு இளசிலையோடு வாசியற வெங்குமுலர்ந்தன.

வெறுமிலைகளேயோ வாடித்தனவென்னில்; (ஸபுஷ்பாங்குரகோரகா:) பூக்களோடு குருத்துக்களோடு அரும்புகளோடுவாசியற வெல்லாஞ்சோர்ந்தன.(ஸபுஷ்பாங்குரகோரகா:)புஷ்பமாகிறது மலர்ந்தபூ. அங்குரமாகிறதுமுகிழ். கோரகமாகிறது ☾ கடுமொட்டு. இவையடைய உலர்ந்தன. (ஸபுஷ்பாங்குரகோரகா: வ்ருக்ஷாஶ்சவிராகவ்யஸநகர்ஶிதா:வர்ணா:) ஸபுத்ரவளப்ராணமனிதருடம்பு மெலிந்து முகம் வாடினாப்போலே, மரங்களும் பூக்களோடு ⓘசெருந்துகளோடு ஶாகைகளோடு ஶாகைகளோடு வாசியற, கொழுவிய வாய்ப்பெருத்துச் செய்விசுமான மரங்களடையகோகியுலருவதுஞ்செய்தன. (விஷயேவ்ருக்ஷா: வர்ணா:)உன்னெல்லைக்குள் வ்ருக்ஷாவஸ்தாநராரவமாய் இறைத்து வளர்த்தபடைவீடு சூழ்ந்தமரங்களோடு ✓ பறட்டைகளாய் காட்டிலே தானேமுளைத்து வளர்ந்த எல்லைநிலத்தில் மரங்களோடு வாசியற எங்குமுலர்ந்தன வென்றாகவுமாம். ... ... ... ... ... ... கஉ.

(*) கோடை - க்ரீஷ்மம், வெயில். △ பாரிலே - பாறையிலே. ♣ முறி - இலை. ⚘ தறிகை-உளி. ☼ செருக்கு-செழிப்பு. ∴ பணை-கிளை. ☾ கடுமொட்டு - கெட்டியானமொக்கு. ⓘ செருந்து - தளிர். செய்விசுமான - பரவாநின்றுள்ள. ✓ பறட்டை- செழிப்பற்றது.

தாத்பர்யம்.

மகாராஜனே! உம்முடைய பரிபாலனத்திலடங்கிய தேசத்தில் முடிய ஸ்தாவரஜங்கமபேதமின்றி எல்லாவஸ்துக்களும், நம்முடைய ஸ்ரீராமனுக்கு நேரிட்ட ஆபத்தினாலே அல்லாடி ப்ரதிக்ஷணமும் க்ர்சித்துப் போகின்றன. பூஅரும்புதளிர்களால் மிகவும் சோபித்து கொண்டிருக்கிற மரங்கள், ராமவியோகாநந்தரம் முன்னைக்காட்டி லும் இரண்டுமடங்கு அதிகமாய் தண்ணீர் கட்டியிருந்தபோதிலும், எல்லா அவயவங்களிலும் நன்றாய்வாடி, பெருமாள் மீண்டுவருவ ரென்னு மாசையால் ப்ராணனைமாத்திரம் தரித்திருக்கின்றன. பின்பு சேதனங்களுடைய ஸ்திதியை நீரே யோசித்துப்பாரும். என்று பெருமாளைவிட்டு வந்த ஸுமந்த்ரர் தசாதரோடு தேசஸ்திதியைச் சொல்லுகிறார்,

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அயோத்யாகாண்டம்-௯௯ - ம் ஸர்க்கம், ௧௨ - ம் ஸ்லோகம்.

---

௨௭.— ஸுபகஸ்சித்ரகூடோஸௌ கிரிராஜோபமோ கிரி: ।
யஸ்மிந்வஸதி காகுத்ஸ்த: குபேர இவ நந்தநே ॥ ௧௫.

அர்த்தம்.—நந்தநே - நந்தனமென்கிற இந்திரனுடைய உத்யான வனத்தில், குபேர இவ-குபேரன்போலே, யஸ்மிந் - எந்தபர்வதத்தில், காகுத்ஸ்த: - ககுத்ஸ்தகுலத்திலவதரித்த ஸ்ரீராமன், வஸதி- வாஸம்பண்ணுகிறாரோ. அஸௌ - இந்த, சித்ரகூட: - ஆச்சர்யகரமான கொடிமுடிகளையுடைய சித்ரகூடமென்கிற, கிரி: - பர்வதமானது, கிரிராஜோபம: - பர்வதஸ்ரேஷ்டமான திருமாலிருஞ்சோலை மலையை உபமானமாக வுடையதாய், ஸுபக: - அழகாயிருக்கிறது.

வ்யா. அவதாரிகை.—"இக்ஷ்வாகூணாமியம் பூமிஸ்ஸஸைலவநகாநநா" என்று - நாடுநகரமும் காடும் மலையுமான இக்ஷ்வாகுக்களுடைய ராஜ்யத்துக்குள் பெருமாள் எழுந்தருளி யிருக்கையாலே வீறுபெற்றது திருச்சித்திரகூட மென்கிறது.

(ஸுபக:) அல்லாதவிடங்களைப்பற்ற வீறுடைத்தாயிருக்கை. வீறுடைமையாவது-எல்லாரும் விரும்பும்படியா யிருக்கையிறே - அப் படிக்குப் பெருமாளெழுந்தருளி யிருக்கையாலே, படைவீடு இருந்ததே குடியாகவந்து படுகாடுகிடந்ததிறே.

எழுந்தருளி யிருக்கையாலுள்ள வைலக்ஷண்யமொன்றுமே யோவுள்ளதென்ன ; (விசித்ரகூடஃ) தேஶஸ்ஸஹாவந்தன்னுலும் விலக்ஷண மென்கிறது. (விசித்ரகூடஃ) “ரமணீயோஹ்யயம்தேஶஃ” என்று - திருவயோத்யையில் நின்றும் இங்கையேற வெழுந்தருளு கிற பெரியபெருமாள் ஶ்ரீரங்கக்ஷேத்ரத்தினுடைய மாஹாத்ம்யதையாலே அங்கே:::பதி கொண்டாப்போலே, திருவயோத்யையில் நின்றும் இங்கையேற வெழுந்தருளுவதாக, “ஜமாஶவாஸ்த்ரம் ஸ்வேஷாஂவை யத்ராயேண சவஸிநாம்” என்று - வளையவளைய வாஸ்தங்கள் தோறுந்தட்டித்திரிகிற பெருமாளும், இவ்விடத்திலே பிராட்டியுந்தாமுமினிதமரும்படியிறே இந்த தேஶத்தின் மாஹாத்ம்யதை. (விசித்ரகூடஃ) நாநாவியமான யாதுக்களாலும் நாநாவியமான ரத்நங்களாலும் நாநாவியமான கொடிமுடிகளாலுந் திருவுள்ளம்பிணிப்புண்ணும்படி சூஸ்ரமமா யிருக்கை.

இப்படி விசித்ரமான வணகூடமாவைகளை யுடைத்தாயன்றே திருவயோத்யையுமிருப்பது. அத்தையோ சொல்லுகிறதென்ன; (கூஸளமிரிஃ) “கல்லுங்கனை கடலும் வைகுந்தவானுடும் புல்லென் றெழுந்தன கொல்” என்று-கைவிட்டுப் போந்தவைபோலேயோ? “உகந்தினிதுறைகோயில்” என்கிறபடியே, அவனுகந்து வதிக்கிற விம்மலை.

என்போலவென்னில், (மிரிராஜோவஃ) பெருமாளும் பிராட்டியும் சேரவெழுந்தருளி யிருக்கையாலே, திருமாலிருஞ்சோலைமலை யென்று, அழகரும் நாச்சியாரு மெழுந்தருளியிருக்கிற திருமலையோ டொப்புச்சொல்லலாயிருந்தது.

இப்படிக்கிம்மலைக்கேற்ற மென்னென்ன; (யஸ்நுவஸதிகாகுஸ்ஸஃ) பிறந்துபடைத்துப்பொகட்டுப்போன திருவயோத்யைபோலு மன்றியிலே, பிறந்தபோதே பொகட்டுப்போன மதுரைபோலுமன்றியிலே, யாதொருமலையிலே, “நங்கள்குன்றம் கைவிடான்” என்கிறபடியே, விடாதே எழுந்தருளியிருக்கிறார். இப்படியிருக்கிறவர்

::: பதி - வேர்.

தாம்யாரென்னில்; (காகுத்ஸ்த:) இக்குலமாக உகந்தருளும்படியான பெருமையையுடைய பெருமாளென்கிறது. (காகுத்ஸ்தோயமிஹாவஸதி) ககுத்ஸ்தகுலத்திலேபிறந்து, திருவயோத்யையிலே எழுந்தருளியிருக்கிற பெருமாள் யாதொருமலையிலே யெழுந்தருளி யிருக்கிறார். (காகுத்ஸ்தோயமிஹாவஸதி) இம்மலையின்மேலே எழுந்தருளி யிருக்கிறபோதே, இக்குலத்துக்கு கூடஸ்தனா யிருப்பதொரு ராஜாவானவன், ஐராவதமாயிருக்க வதின்கழுத்திலே நின்றாப்போலே யிருந்தது. (காகுத்ஸ்தோயமிஹாவஸதி) "பரன்சென்றுசேர் திருவேங்கடம்" என்கிறபடியே, ஸர்வாதிகவஸ்து இனிதமர்ந்தருளுகிற தேசமிறே.

இப்படி இம்மலையிலே எழுந்தருளி யிருக்கிற விது வைவாஸ ஸ்தானத்தையாலே ஶ்லாக்யமாயிருக்குமோவென்னில்; (குபேர இவ நந்தநே) தனபதியான வைஶ்ரவணன், தன் செருக்காலே ஸ்வர்க்கத்திலே இந்த்ரனுடைய நந்தவனத்திலே யிருந்தாப்போலே யிருந்தது. குபேரனுடையதோப்பு சைத்ரரதமன்றோ? நந்தவனத்தைச் சொல்லுவானென்னென்னில்; அயோத்யாவாஸமான தோப்புகளைவிட்டு சித்ரகூடவாஸமான தேனமரும் பொழிற்சாரலிலே எழுந்தருளியிருந்தபோது, வைஶ்ரவணன் ஸாதாரணமான சைத்ரரதத்தைவிட்டு இந்த்ரனுடைய நந்தவனத்திலே யிருந்தாப்போலேயிருந்தது. இத்தால் பஞ்சாஶத் கோடிவிஸ்தீர்ணையான பூமிப்பரப்புக்குள் அவன் உகந்தருளின திவ்யதேஶமே உத்தேஶ்யமென்கிறது. ௧௫.

தாத்பர்யம்.

தனபதியானகுபேரன், அலகாபட்டணத்தைவிட்டு ஸ்வர்கலோகத்திலிருக்கும் இந்த்ரோத்யானமான நந்தனவனத்தில் விஹரிக்குமாப்போலே, ஸ்ரீராமன் அயோத்யையைவிட்டுசுகமாய்வாஸம்பண்ணுகிற ஆச்சர்யகரமான கொடிமுடிகளாலும் கைரிகாதிதாதுக்களாலும் ப்ரகாசிக்கிற இந்தபர்வதம், பெருமாளும்பிராட்டியும் உகந்து எழுந்தருளியிருக்கிற திருமாலிருஞ்சோலைமலைபோல் மிகவும் ரமணீயமாயும் எல்லாருக்கும் ப்ராப்யமுமாயுமிருக்கிறதென்று பரதர் சத்ருக்னரோடே சொல்லுகிறார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

÷ ௧௧௯௪ - முசிப்பு.

ஆரண்யகாண்டம் - ௧௯-ம் ஸர்க்கம், ௧௪-ம் ஶ்லோகம்.

---

௨௯.— தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ |
புண்டரீக விஶாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ || ௧௪.

அர்த்தம். தருணௌ - யுவாக்களாய், ரூபஸம்பந்நௌ - அழகாலே பூர்ணர்களாய், ஸுகுமாரௌ - கோமளஸ்வபாவத்தையுடையராய், மஹாபலௌ-பெருத்த பலத்தையுடையராய், புண்டரீகவிஶாலாக்ஷௌ—தாமரைபோலகன்ற கண்களையுடையராய், சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ-மரவுரியையும் மான்தோலையும் வஸ்த்ரமாக வுடையராய், ராமலக்ஷ்மணர்கள் இருக்கிறார்கள்.

வ்யா. அவதாரிகை. "ஸஹிதேவை ★ருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி: | அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:" என்கிறபடியே, உபகண்டகண்டிதஶக்திகளான தேவர்கள், ராக்ஷஸர்களுடைய ரஜஸ்ஸைப்போக்கும்படி ரஜோபஹரமான வடிவுகளும், ராக்ஷஸஸ்த்ரீகளுடைய மாங்கல்யங்கள் வாங்கும்படி கழுத்திலே கட்டின * கப்படங்களும், ராவணவந்திக்ருதைகளான தங்கள் ஸ்த்ரீகளுடைய விரித்த தலை, "விமுக்தகேஶ்யோ து:கார்த்தா:" என்று - ராக்ஷஸிகள் தலையிலேயாம்படி தாங்கள் விரித்த தலையிருப்பும், "ஸாஶ்ருநேத்ரா ஹாநாயதி வ ஸவ்யஶ:" என்கிறபடியே, அவர்கள் முகங்களிலே விஷாதாக்ஷரங்களாம்படி தங்கள் முகங்களிலே ஸஞ்சரிக்கிற ஶரணாக்ஷரங்களும், "உத்யதாஞ்ஜலிகா விஶ" என்கிறபடியே, அவர்கள் கைகளையெடுத்துக்கூப்பிடும்படி தாங்கள் ◌தொடுத்தகஞ்ஜலிபந்தங்களும், "ஸாஶ்ருபூர்ணமுகாஶ்சைவ ஸுஸ்ருவுர் பிவக்ஷஜ:" என்கிறபடியே, அவர்கள் கண்களிலே கண்ணீர் பாயும்படி தாங்கள் கண்ணுங் கண்ணீருமாய், "ஶாயாவ்ருக்ஷமிவாஶ்ரமா:" என்றும்—"வஶோராஜவஸ்ரீதாம் ஶ்ரூம்வாதகா ஜவதோய: | குயநாஜவ ஜாதாரம் தேவாஜஹ்ம்ருஜிநாஜிநங்:" என்றுஞ் சொல்லுகிறபடியே, ஸஜ்ஜநரானவர்கள் ஶாயாவ்ருக்ஷத்தைச்சென்று சேருமாபோ

---

★ உதீர்ணஸ்ய - மதித்த. * கப்படம் - கழுத்தில்போடும் சக்கரம். ◌ தொடுத்த - சேரவைத்த.

ணும்படி தாங்கள் ஶுஶ்ரூஷை பண்ணியும், "ப்ரஹ்வோஸ்மி ஸேவகோஸ்மி" என்று-அவன் ஸ்தோத்ரம் பண்ணும்படி தாங்கள் ஸ்தோத்ரம் பண்ணியும், "ஸர்வே ஸம்ஹிதா:" என்று - தமயனை விஶ்ரணும் முற்பாடனும்படி திருவடிகளிலே நமஸ்கரித்து, "நநமேயம்" என்றிருக்கிறவர்களைத் தலையழித்துத்தரவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, ஸாகேத ராஜ்ய ஸர்வஸ்வமும் நித்யாநபாயிநியான பிராட்டியும், "விதாதுரோவயாஶாதா உஜ்வலாபநம்" என்னும்-"ஜநகஸ்ய குலேஜாதா" என்னுஞ் சொல்லுகிறபடியே, தாம் உஷாஶ்ரயியாயும் அவள் ஜநககுல ஸுந்தரியாயும் திருவவதரித்து, இருவருமிரண்டிடத்திலுமாக வளர்ந்தருளுகிற காலத்திலே, இந்த யோகம் இப்படி *யகலவிருக்கப்பெறாது, இப்படியகலவிருந்தபோது ரக்ஷகராகாமையன்றிக்கே, "ஜகதஸ்ஸௌஶ்வமவிகல்பயாதி" என்னும், "கிந்நமா மாநாஶாஹீதி" என்றும் - இவர்கள் தங்களாலே ஜகத்துக்கு அழிவுவருமென்றும், சேர்ந்தபோது, "பூர்வாஸ்யாம் கர்மாணி கர்த்தவ்யாநி ப்ராதஸ்ஸ்நாத்வா" என்றும் - "உபேதம் ஸீதயா ஸத்ய ஸ்ரீமத்யா ஸமந்விதம்" என்றும்-ஜகத்துக்கு உஜ்ஜீவனமாயிருக்கையாலும், இம்மிதுநத்தைச்சேர்க்க வேணுமென்கிற வஹிஸந்தியாலும், "விநாஶாய ச துஷ்க்ருதாம்" என்றும் - "ஸம்ஹாரம்" என்றும் - "யஜ்ஞவிக்நகரம் ஹந்தும்" என்றும் - அவருடைய கவதாரரஹஸ்யஸத்வத்தை அடியொற்றினவனாகையாலும், விஶ்வாமித்ர மஹானானவன் உஶ்ரய ரத்நாகரத்தைக் கிட்டி ராமரத்தத்தை அபேக்ஷிக்க, அவனும் வாத்ஸல்யத்தாலே மதியெல்லாமுள் கலங்கிப் பெருமாளையுள்ளபடி யறியாதே, "ஊநஷோடஶவர்ஷோமே" என்று - இன்னம்பதினாறு பிராயம் நிரம்பிற்றில்லை; "பால்ய ஷோடஶவர்ஷாக வள மணஸ்ரோதிகீத்ருஶே" என்கிறபடியே, ஸுகுமாரராகையாலே தனித்தொரு காரியத்துக்காளல்லர்; "வத்ஸராஜ பரைர் யுத்தம் யோதவஸஹிதம் நய" என்கிறபடியே, முதுகண்ணாக என்

* அகல - பிரிய.

னையுங் கூட்டிக்கொண்டுபோவென்ன, விஶ்வாமித்ரனும், இவர் பருவத்திற் சிறுமைகண்டோ நீர் வார்த்தைசொல்லுகிறது, "சிறுமையின் வார்த்தையைமாவலியிடைச்சென்றுகேள்" என்று ஸாக்ஷிஹாவித்து, போய்கேட்க ∴முறித்தாயாகில், "வஸிஷ்டோபி மஹாதேஜா யே சேமே தபஸி ஸ்திதா:" என்று - அறியுமவர்களாய் ஸந்நிஹிதருமாய்ப்பலருமான இவர்களைக் கேட்கமாட்டாயோ? என்றீடேற்றி யிசைவிக்க, இவனுமிசைந்து, "ததௌ குஶிகபுத்ராய" என்று - இவனுக்கு இஷ்டவிநியோகார்ஹமாகப் பிள்ளைகளிருவரையுங்கொடுக்க, அவனும் ராமலக்ஷ்மணர்களைக் கொண்டுபோய் அஸ்த்ரஜ்ஞாநங்களாலே அவித்யையை நிரஸிக்குமாபோலே, அவர்களை யிடுவித்து தாடகையை நிரஸிப்பித்து, அநந்தரம் அவித்யாஸஞ்சிதமாய் பாபரூபமான உபயவித கர்மங்களையும் போலே தாடகாஜநிதரான ஸுபாஹுமாரீசர்களையு மழித்து, அதுதன்னில், "உத்தரபூர்வாகயோ ரஶ்லேஷவிநாஶௌ" என்னுமாபோலே, ஒருத்தனைக்கொன்று ஒருத்தனை யகலவடித்து, விஶ்வாமித்ராத்வரத்ராணம் பண்ணி, "ஶ்ரியமித்வஸ்தாஶநா:" என்றும் - "ஜாதவேதோமுகாத்ஸம்ஹவ்யக்ஷீ" என்றும்-லக்ஷ்மியைப் பெறும்போது அந்நிவாஸரமாகப்பெறவேண்டுகையாலே, "விஶ்வாமித்ரேண ஸஹிதோ யஜ்ஞம் த்ரஷ்டும் ஸமாகத:" என்று - ஜநகனுடைய யஜ்ஞஸமயத்திலேசென்று அந்த்ரயங்களையுமுபாஸித்து, "வில்லிறுத்து மெல்லியல்தோள் தோய்ந்தாய்" என்று சொல்லுகிறபடியே, ரௌத்ரமானவில்லையழைப்பித்து ஶைவதாமஸஸ்பர்ஶத்தாலேவந்தவதினுடையதோஷம்போம்படி திருக்கையிலேவாங்கி ::: குணாரோபணம்பண்ணி, ⊕ வீர்யஶுல்க்யையானபிராட்டியையுங் கைப்பிடித்து மீண்டுவருகிறவளவிலே, ராஜகவீரரசுபட்டதோவென்று அதிகோபவிதனாய்வந்த பரஶுராமனைக்கண்டு வாதவஸ்தனனை சக்ரவர்த்தி சகிதனாய், "அபயம் ஸர்வபூதேப்யோ ததாமி" என்னக்கடவ பெருமாள் தமக்கதிஶங்கைபண்ணி, "வா

∴ முறித்தாயாகில் - பின்வாங்கினால். ::: குணம் - நல்லகுணம். நாண். ⊕ வீர்யஶுல்க்யையான - பராக்ரமத்துக்குப் பந்தயமான.

ஶாநாம்ஶவக்த்ராணாம்ஹயம் ஜாதஹவஸி" என்று-பேர் வாசிக்குப் பிணங்கிவந்தவனாகையாலே பெருமாள்திருநாமஞ்சொல்லவஞ்சி, ஸாமாந்யமாக வென்பிள்ளைகளுக்கு ஸஹயப்ரதாநம் பண்ணவேணுமென்றிருக்க, இவ்வார்த்தையைக்கேட்டு † ப்ரவர்க்யம்போலே கிளர்ந்தெரிகிற விவனைக்கண்டு தணியவிடுவோமென்று பார்த்து, வஸிஷ்டாதிஜஷிகளும், "தத்ரஷ்டாஹீஶவாக்ஷாஶம் ஜ்வலந்தமிவபாவகம்। ஜஷயோராஶாஶேதி வசோஶரண்யம்வத" என்கிறபடியே, உன்னையொழிய ராக்ஷாமுண்டோவென்று பெருமாளுடைய ராக்ஷத்தையு மவன்தலையிலே யிரட்டிக்கமாட்டெறிந்து, நெருப்பிலே நீரைச்சொரிவாரைப்போலே குளிர வார்த்தைசொன்னவிடத்திலும், அவன் ஜாதிஷ்ந யாகையாலே ஆறுமையாலே, பெருமாளும் இவன் கையிலே யிந்த காஷமிருக்கையாலேயிறே இவனெரிகிறதென்று பார்த்து, மேலெழுந்த க்ஷத்ரதேஜஸ்ஸோடே அத்தைவாங்கி ஸஹஜமான ப்ராஹ்மண்யமேஶேஷிக்கும்படிபண்ணி, "க்ஷயம்யோஹதோ ரம் ஜாநாதிக்வாம் ஸர்வோத்தம்யஷோஷாஸ்வராஶஸ்த்ர ஸ்வஸ்தி தேஸ்துவரஜ" என்று-அவனும் தன்ஸாஹஸிகமான ப்ராஹ்மண்யத்துக்கிடாக ஸ்வஸ்தி சொல்ல, தன்னுடைய வைஷ்ணவமான வில்லை வாங்குகையாலே பெருமாளுடைய வைஷ்ணவஸம்யோகவிஷமாம்படி மழுவேந்திப்போக, பெருமாளும், "ப்ராஹ்மணோஸீதி பூஜ்யோமே" என்று-இவன் ஸ்வஸ்தி சொல்லுகையாலே ப்ராஹ்மணனென்றறுதியிட்டு, ⁑ அறுகும் * தாளியும்பறித்திவன் காலிலேபொகட்டுக்கும்பிட்டு, மாரில் நூலே ✥ கடகாகவிட்டு ரக்ஷித்து மீண்டு திருவயோத்யையிலே புக்கு, இச்சரக்குப் பெறுகைக்குப்பட்ட வருத்தமறியுமவராகையாலே, இவள் சீர்மையையறிந்து, "ராஜஸ்ஸீதயாஸார்த்தம் விஜஹாரபஹூந்ருதூந்" என்கிறபடியே, பெருமாளும் பிராட்டியு மினிதமர்ந்தெழுந்தருளி யிருக்கக்கண்ட ஸ்ரீஸஷி ப்பிராட்டியானவள், "லோகவாலோவஸம் நாயகோவயதஷேதி நீ" தானும் நாச்சியாரோபாதி ஸம்ஶஹாமிநியாகையாலும், "யதாத

† ப்ரவர்க்யம் - யஜ்ஞவிஶேஷம். ⁑ அறுகு - அறுகு என்கிற புல்லு. * தாளி - ஓர்கொடி. ✥ கடகாக - ரக்ஷகமாக.

ஹாமடுவோராரவூஷாஹஸஈரணீகூியடி" என்று-தனக்கு வகுத்த வாமரா ராஜாவதாரத்தினுடைய தேஜஸ்ஸு மிங்கே ஸஜ் மிக்கையா லும், தன் ✠கூத்துக்கொக்கப் பெருமாளை ஸ்யம்வரமாக வரிக்க, ராஜாவுமிது மாஙவடுமான விவாஹமாக வொண்ணாது, ஸஜே்க மாககாரஹணம்பண்ணி வைக்கவேணுமென்று பார்த்து,வளாஜா நவஷஊஞிாவ-ரோஹிதாஜிகளைத் திரட்டி ⁂ஊஞித்து, "ஊஜேயி கூாததஸ்ஙே நிஸ்யஜஸ-நிஸ்யபடி | ஸ்ணவவ-ஷேயாஹவிதா ஸ்ராஹிஷிஞாஜிரேஸ-தடி | ராஊ ராஜீவதா ஊாகூஂ யளவராஜ்ய ஜதி வ்ர-ஹ" என்கிறபடி, ஸம்வஸ்நக்ஷத்ரமான பூசத்திலே பெருமாளை யபிஷேகம் பண்ணக்கடவதென்று நிஸ்யித்து, அதுக்கு வேண்டும் ஸம்பியாநங்களைப்பண்ண, "ஹோஹம் விஸ ஊஜிஹாஜி" என்றும் - "யளவராஜ்யே ஸம்யோக்ஷ ஜெ்வஹ" என்றும் - நாட்டாரோடு ராஜாவோடு பண்ணின வாசைப்பாடுகள் தாங்கள் பண்ணினதாகையாலே, "எண்ணின வாறுகாவிக்கருமங்கள்" என்கிற படியே, அவை யஸஜ்மாய், "கூஉாஸம் கூஹ ஜிஹாஜி வஜிஷஜி வகாநஜே" என்றும் - "தவஸிநாம் ரணேஸதஜ ஹஜ ஜிஹாஜி ராக்ஷஸாநு" என்றும் - ஸத்யஸஜ்ரானவர் தம்முடைய ஸஜமே ஸஜமாம்படி கைகேயி ஊுராஜ்யஜியாய் நின்று கலக்கி, காட்டிலே எழுந்தருளி ஜணகாரண்யவாஸிகளான வாரஷிகளைக் காணும்போது, "ஙிஹாஜே ந ஜோவேயாஜ" என்கிறபடியே, வெறுங்கைக்கொண்டு காணலாகாதென்று பார்த்து விராயவய வ-ரஸரமாகச்சென்று காண, அவர்களும் ஊஹாரா ஜாைப்போலே பெருமாளுடைய வீயடுத்திலே ஊதிஸஜெ்பண்ணி வரீக்ஷித்துத் தெளியவேண்டாதபடி விராயவயத்திலே ஊஜேஷா ஜாஹரண ராகையாலே விநீதராய்வந்து, "வரிவாஜயஜோ ராஜ வயஜாநாநு ஙிஸாவஜெவ:" என்று-எங்களை ரக்ஷிக்கவேணு மென்று ஸரணம்புக, "ஷவதாஜதஜு ஷிஜ்தஜு ஊமதோஹம் யஜஹபா" என்று-÷ஓடி கொடுத்து, "ஜமாஜோஸஜஊம்ஷேஷாஂ வயஜாயேண தவஸிநாடி" என்கிறபடியே, ஸரஹஜஸ-தீ

---

✠ கூத்துக்கு - ஆடம்பரத்துக்கு. ⁂ ஊஞித்து- ஆலோசித்து.
÷ ஓம் கொடுத்து - அங்கீகரித்து.

க்ஷாமஸ்ய தக்ஷாதாத்ய ஸ்ரீவரான ஜக்ஷிகளாஸ் ரத்திலே வயமான யேண எழுந்தருளியிருக்கிற பெருமாள், சுமதர்ஷ்யாவதேஸத்தாலே மோஹாவஸ் தீரமான வஞுவடிவெசிவஸரத்திலே வணமஸா ஸெயுஞ்சமைத்து, "ஸராஃவணமஸாஞாயா ராவஸ் நக்ஷஹஸ் தயா।விராராஜஜஹாவாஹ ஸ்ரீத்யாவத்ர ராஜவ । ஞக்ஷ்ணேந ஸஹஹாதா" என்று - நாச்சியாரோடு இளையபெருமாளோடுங் கூட இனிதமர்ந் தெழுந்தருளி யிருக்கிறவளவிலே, "தருஸம் ராக்ஷஸீகாவி ஜாஜமாஜ யத்ருஷயா । ஸா தம்ஸமவமணவா நாஜ" என்று - ஸமவமணாகையா யிருக்கிற ராக்ஷஸி யானவள், யாத்ருச்சி க ஸம்க்ருதமடியாக வந்துகிட்டி, வாசாது விஷயமாயிருக்கச் செய்தேயும் வடிகனுன ஓராவாயமனடியாக விஸேஷஜ்ஞாநம் பிறவாமையாலும், வம்ஸரஷிகாரம் முன்னுகப் பற்றுதவளன்றிக்கே, அவ்விஷயத்திலே சுஸஹாவவாரத்தைப்பணணி நக்ஷராபிக்கிலக்காக, "ஐத்தஸ்தோஞக்ஷணஸஸ்யா: க்ரஸோராவஸ்ய வஸ்யத । உஷ்த்ய வஸ்ம்விஷேஷகண நாவஸள ஜஹாவஞ:" என்றும்-"கூரார்ந்தவாளாற் கொடிமூக்குங் காதிரண்டு மீராவிடுத்து" என்றுஞ் சொல்லுகிறபடியே, ஜக்ஷிணவாஹுவான இளையபெருமாளாலே தாங் கைத்தொடாராய் வெவரவஷ்யத்தை விளைப்பிக்க, "விரமவணஞாத்நிஸோணிதே தாக்ஷிதா ஸஸம்ஸஸவமம்ஹமிநீவரஸ்யஸா" என்று - * வார்ந்தமூக்கும் வடிகிற வுதிரமுமாய்த் தன் ஜ்ராதாவான வர னுக்கறிவிக்க, அவனும் கூவிதனுய், "வ்ருக்ஷராவ்யாஹி கேநக்வமேவம்ராவிராவிதா" உன்னையிப்படி செய்தவர்கள்யார், அவர்களைத் தெளியச் சொல்லென்று கேட்க, அவர்களை இன்னாரென்று அடையாளந் தெரியச்சொல்லுகிறுள் தாரணாஸ என்று தொடங்கி.

"வாதாஸ உஸரயஸ்யாஷாஸ்ஹாதாராஸ ராஜக்ஷணாஸ" என்று-இன்னார் மகனென்றும் இன்னபேரை யுடையவனென்றுஞ் சொல்ல வாசாதுமாயிருக்க, தாரணாஸ ராகவஸம்வந்தாஸ - என்று -

* வார்ந்த - பெருகுகிற.

பருவத்தையிட்டுச் சொல்லுவது வடிவழகையிட்டுச் சொல்லுவதாவதென்னெனில்; இவளுக்கு வைரூப்யமும் பிறந்ததித்தனைபோக்கி, வைராக்யமும் பிறந்ததில்லையிறே. ஆகையாலே, "காமமோஹிதா" என்கிற தன்னநிர்வஶம் வடிவிட்டு ப்ராதாக்கள் முன்னென்று பாராதே, தன்னுடைய ஹ்ருத்கதத்தைச் சொல்லுகிறாள். காமுகராகிலுமாம் ப்ரதிகூலராகிலுமாம் இவ்விஷயத்தில் அகப்பட்டவர்களுக்குப் *பணியிறே யிது. "யாநி ராமஸ்ய சிஹ்நாநி" என்று-அடையாளம் தெரியச்சொல்லென்று பிராட்டி திருவடியைக்கேட்க, "த்வஶ்ஶ்ரவஸி வ்ருத்தம் ஶம்ஸ" என்று சொல்லுவதற்குமுன்னே, "ராம: கமலபத்ராக்ஷ: ஸர்வஸத்வமநோஹர:" என்று சொன்னானிறே, இவை தனக்கு ப்ரயோஜக ரூபநாமங்கள் சொல்லவென்று முண்டிறே. அதிலே, "ரூபவாணிவிதிக்ருயிர: நாமாநிக்ருக்வா" என்கிற க்ரமத்திலே ப்ரமாணாவியான ரூபத்தை முற்படச் சொல்லுகிறாளாகவுமாம். அன்றியிலே, ஸர்வே ப்ருதத்த கவிதாநாம் ஹாவஜ்ஞாநம் த்ருஷ்டம்" என்று-குபிதையாகையாலே ஹ்ருத்கதத்தை அவஶமாக வெளியிடுகிறாளாகவுமாம்.

இதிலே, "ராமமிந்தீவரஶ்யாமம் கந்தர்ப்பஸத்ருஶப்ரபம் | பபூவேந்த்ரோபமம் த்ருஷ்ட்வா ராக்ஷஸீ காமமோஹிதா" என்கிறபடியே, தான் அவனைக்கண்டு காமுகையாகைக் கடியாயிருப்பதொரு ஶுகஷிக்ஷமான ஶ்ருகாரமும், தன் வரிஹவத்தாலுண்டான கோபாதிஶயத்தாலே, "தயோஸ்தஸ்யாஶ்ச ருதிரம் பிபேயமஹம்" என்றுஞ்சொல்லுகிறவளாகையாலே, "கோயமேவம் மஹாவீர்ய:" என்றிவர்களை அளவிடமாட்டாதே, அருகிருக்கிற ப்ராதாவான வரனுக்கு, "பலமூலாஶிநௌ தாந்தௌ தாபஸௌ ப்ரஹ்மசாரிணௌ" என்று-அவர்கள் எளிமைசொல்லுகிறதொரு ஶ்ருகாரமும், "ராமஸ்ய உமஹக கமூஹாம்ஸ்தாஸோஹவேநம" என்று-இவர்களுக்கஞ்சினவளாகையாலும், அவன்நெஞ்சிலே எரிச்சல் பிறக்கைக்காகவும், "பஞ்ஸ்யாஹ ஸ்ருதவஸ்யாமிநக்தம் ராமஸ்யஸம்ப்ரதி| ஸ்தாதும் ப்ரதிமவேஶகஸ்ய தாவஸ்யமஹாரணே" என்று-கையும் வில்லுமா யவ்வாண்பிள்ளைபுறப்பட்

* பணி - தொழில்.

டால் நீயோ அவர்முன்னே நிற்கிறுயென்று அவர்களுடையவாண்மை சொல்லுவதொரு சூகாரமும், ஆக சூகாரத்ரயமும் விவக்ஷிதம்.

அதில் முற்பட சூக்ஷ்மகா காரத்தில் யோஜனை யிருக்கிற படி. (தாரணைராமவைஸம்வந்நா ஸுகுமாரா மஹாபலா | ஶார்தூலவிஶாலாக்ஷா வீரக்ருஷ்ணாஜிநாம்பரா) அவர்களுடைய பருவமிருக்கிறபடியும், வடிவழகு இருக்கிறபடியும், செயலிருக்கிறபடியும், ⁑ மிடுக்கிருக்கிறபடியும், கண்ணழகிருக்கிறபடியும், ‡ ஒப்பனையழகு இருக்கிறபடியும், அவர்களிருவருக்கு முண்டித்தனைபோக்கி, வேறொருவர்க்கு மில்லைகாணென்கிறுள். "என்னை யிதுவிளைத்த வீரிரண்டு மால்வரைத்தோள் மன்னன்" என்று - என்னை யகப்பட இப்படி யாக்கிற்று அந்த மாணவலாவணாய மன்றோ. * க. (தாரணா) "யுவாகுமாரா:" என்றும் - "ய: ஸர்வஸ்மாய வேயஸே நவீயஸே ஸுஜாநயே விஷ்ணவே ஶாஸ்தியவீயஸே" என்றும் - "அரும்பினையலரை" என்றும் - வேதாந்தவிஷமான அர்த்தத்தை யிவளொரு ராக்ஷஸி கையாட்சியாகச் சொல்லுகிருளிறே. இதுதான் ராக்ஷஸிகளுக்குப் பணியாயிருந்ததிறே. "வ்ருக்ஷேஷ்வஹாயோமீ வரஸோத்காஸநாதந: | தஸ்ஸ: வரஸோயாதா ஸஜுவக மஹாயா:" என்றுளிறே ஶ்ரோத்ரியும். * உ. (தாரணா) உக்ரானவர்களோடு பலரானவர்களோடு தமராயவாமேவாதிகளோடு வாசியற, "கரியானொருகாளை" என்றும்- "காளைபுகுதக்கனக்கண்டேன்" என்றும்-வணயிநிகளை யகப்படுத்திக்கொள்ளுவது பருவத்தையிட்டிறே. அப்பருவத்திலேயாயிற்று இவளும் முற்பட ஈடுபட்டது. * ங. (தாரணா) இவள் பலஹாமையாயிற்று பெருமாள்பக்கலிலேயாகில், வைராக்யம் விளைத்தார் இளைய பெருமாள் பக்கலிலேயாகில், இரண்டுபக்ஷத்திலும் ஒருத்தரோ யமைந்திருக்க, இவ நாகமாகச் சொல்லுவானென்னென்னில் ; "கநேத்ராநுஸஞ்ச ஶாவீரா" என்று-அழகுக்கு மாண்பிள்ளைத்தனத்துக்கும் ஒருவர்க்

⁑ மிடுக்கு - பலம்.    ‡ ஒப்பனை - அலங்காரம்.

கொருவர்குறையாமையாலும், "க்ருததாரோஸ்மி பவதி பார்யேயம் தயிதா மம" என்றும்-"ஸ்ரீமாநக்ருததாரஶ்ச லக்ஷ்மணோ நாம வீர்யவாந்| அபூர்வீ பார்யயா சார்த்தீ தருண: ப்ரியதர்ஶந:| அநுரூபஸ்ச விஶாலாக்ஷி பர்த்தா ஸ்யாத்" என்றும்-நான் க்ருதவிவாஹனுமாய், ஸ்த்ரீஸஹாயனுமாகையாலே, உனக்கு யோக்யனல்லன். இவன் அக்ருதவிவாஹனுமாய், விவாஹம் பண்ணவேணுமென்கிற ஆசையையுடையவனுமாயிருக்கிறான். ஆனபின்பு, இவனை பர்த்தாவாகவரியென்று பெருமாள் திருவுள்ளமாக, அவ்வழியாலே இளையபெருமாள்பக்கலிலே இவள் ப்ரவணையாக, "கதம் தாஸஸ்ய மே தாஸீ பார்யா பவிதுமிச்சஸி| ஆர்யஸ்ய த்வம் விஶாலாக்ஷி பார்யா பவ யவீயஸீ" என்று-அவரடிமையான எனக்கு ஸ்த்ரீயானால், நீயுமடிமையாவாயித்தனை. அதுவணங்கலிலரக்கரான வுங்களுக்குச்சேராது; நாச்சியாராக வாழலாம்படி அவர்தமக்கு இளையநங்கையாகப் பாராயென்று இளையபெருமாள்சொல்ல, பெருமாள்பக்கலிலே துவக்குண்டும், ஆகஇருவர்பக்கலிலுந் துவக்குண்டு, இப்படி ப்ரவணையாகையாலும், வைரூப்யகரணத்திலும், "விரூபயிதுமர்ஹஸி" என்று-ப்ரயோஜககர்த்தாவாயும், "உத்க்ருத்ய கட்கம் சிச்சேத கர்ணநாஸே மஹாபல:" என்று-இளையபெருமாள் க்ரியாகர்த்தாவாயுமாக, இப்படியிருக்கையாலே, "தாப்யாமுபாப்யாம் ஸம்பூய ப்ரமதாமதிக்ருத்ய தாம்| இமாமவஸ்தாம் நீதாஹம்" என்று-இருவரையுங்கூட்டாகச் சொல்லுகிறவளாகையாலும், இங்கிருவரையுமொக்கச் சொல்லுகிறாள். * ௪. (தாத்பர்ய) "இருவராய் வந்தாரென்முன்னே நின்றார்" என்னுமாபோலே, ஒருவரிருவராய் வந்தன்றோ என்னை ‡ யீடழித்தது. *௫. (தாத்பர்ய) தம்பிதமையனானால் பருவத்திலேயுஞ்சிறிது வேறுபாடுகாணலாமிறே. அப்படியன்றியிலே, ஒருபடியாய்காணிருக்கிறது. புனர்பூசம் பூசமாய், பின்னானும் முன்னானுமானால், அத்தனை வாசிதெரியாதிறே.

---

‡ ஈடழித்தது - அழகைக் கெடுத்தது.

இப்படி பருவத்தையிட்டு மயக்குமித்தனையாய், வடிவுதன்னைப்பார்த்தால், ✤போலியாயிருக்குமோவென்னில்; *க. (ராவைஷவ்ருத்த) ராவைத்தைப்பார்த்தால், அழகுவேண்டியிருப்பார்க்கு அவர்கள்பக்கலிலே இரந்துகொண்டுபோக வேண்டும்படியாய்காண் ÷கூடுபூரித்துக்கிடந்தபடி. *உ. (ராவைஷவ்ருத்த) "காமனார்தாதை" என்று-அந்த காமனகப்பட, "ஜாதஜாதம்பவதி" என்று-இவர் திருமேனியிலேக ஷேமத்திலே உத்பத்தியாலன்றோ அவ்வழகு தானுண்டாயிற்று. *ங. (ராவைஷவ்ருத்த) "உத்பத்ரூபக்ஷணம்நிரம்ஹணம்திஷ்டதி" என்கிறபடியே, முற்பட ஆஶ்ரயமுண்டாய் அதிலே மஹணங்களுண்டாகையன்றிக்கே, "ராவைஷாக்ஷிண்யஸம்வத்ருஷிதஃ" என்கிறபடியே, ராவைதஶாஶ்ரயங்கள் ஸஹோத்பந்நங்களாய்காணவர்கள் பக்கலிருக்கிறது. *ச. (ராவைஷவ்ருத்த) "வடிவுடைவானோர்தலைவனே" என்றும்-"அச்சோவொருவரழகியவா" என்றும் - "என்முலையாளவொருநாளுன்னகலத்தாலாளாய்" என்றும்-காரார்திருமேனி கண்டதுவேகாரணமாப்பேராப் பிதற்றுத்திரிதருவன்" என்றும் "ராமேதி ராமேதிஸதைவபுத்யாவிசிந்த்யவாசாப்ருவதீ" என்றும்-பெண்பிறந்தாரைப்பிச்சேற்றி ‡ வாய்வெருவப்பண்ணும்வடிவுகாணவாது. அவர் தம்பியாரன்றோ மற்றையவர். இவர்களிருவருடையவும் வடிவழகிலேகாண் நானுழலுகிறது.

இவ்வழகேயாயணைத்துப்பார்த்தால்¶உறைத்திருக்குமோவென்னில்; * க. (ஸாகாரம்) முறட்டு ராக்ஷஸரான வுங்களைப்போலேயன்றுகாணவர்கள் ஸௌகுமார்யமிருக்கிறபடி. பூவிலே அணைத்தாற்போலேகாணிருப்பது. த்ருஷ்டாந்தஞ் சொல்லுமவர்களும், "கதலீ வ்ருக்ஷஸ்தம்பௌ" என்றும்-"ராஜீவஶ்யாமௌ" என்றும் - "பூவைப்பூவண்ணா" என்றும் - "காயாம்பூவண்ணா" என்

---

✤ போலி - அஸாரம்.      ÷ கூடு - தான்யம் வைக்குமிடம்.

‡ வாய்வெருவ - பிதற்ற.      ¶ உறைத்து - கடினமாய்.

றும்-வர்ஷத்தையிட்டிறே சொல்லிற்று. *உ.(ஸங்க்ராமம்) "வடிவிணையில்லா மலர்மகள் மற்ற நிலமகள்பிடிக்கும் மெல்லடி" என்றும் - பூவில்பரிமளத்தையும் மண்ணில் பரிமளத்தையும் உபாதாநமாகவுடைய பிராட்டிமாரு மகப்பட அணைக்கையன்றிக்கே, அடுத்தடுத்துப்பார்க்கவும் போராதபடியாய்காணவர்கள் ஸௌகுமார்யமிருக்கும்படி. * ௩. (ஸங்க்ராமம்) "நடந்தகால்கள்நொந்தவோ" என்றும் - "அடியாரல்லல்தவிர்த்த வசைவோவன்றே லிப்படிதான் நீண்டு தாவியவசைவோ" என்றும் - "தாளாலுலகமளந்த வசைவே கொல்" என்றும் - ஸாஹஸிகமான வ்யாபாரமகப்படத் திருமேனிக்குப்பொறாதென்று ஸுஹ்ருத்துக்கள் வயிறுபிடிக்கும்படியாய்காணவர்கள் ஸௌகுமார்யமிருக்கும்படி.*௪. (ஸங்க்ராமம்) திவ்யஜ்ஞாநகாரனொருவனிறே. இவர்கள் இளமையைப்பாரீர், இராண்டுகாமமாய் காண்தோற்றுகிறது.

(ரஹஸ்யஸம்வாதம் ஸங்க்ராமம்) அவன் ஸநத்குமாரனுமிறே யிருப்பது. "கந்தர்ப்ப இவ மூர்த்திமாந்" என்கிறபடியே, ரூபவான்களாய்காணிந்த காமர்களிருப்பது. "ராமோ மந்மதஸ்ரேண தாடிதா தர்ஷநஹ்ருதயே நிஶாசரீ" என்று-காமனுகவே வஸிஷ்டமித்துச் சொன்னுளிறே.

இப்படி || எழிலுமழகுமாய் தர்ஶநத்திலேயகப்படுத்துமளவேயாய், கிட்டி யநுபவிக்கப்பார்த்தா லுடல்கொடுக்கமாட்டாத துர்லபர்களாயோ இருப்பதென்னில்; *க. (ஸௌலப்யம்) $ வையாத்யத்தில் வந்தால், "தோற்றோம் மடநெஞ்ச மெம்பெருமான் நாரணற்கு" என்றும் - வரையெடுத்த பெருமானுக்கிழந்தேனென் வரிவளை" என்றும் - பெண்பிறந்தார்தோற்று எழுதிக்கொடுக்கும் படியாய்காணிருப்பது. * உ. (ஸௌலப்யம்) "ராமஸ்ய ஸீதயா ஸார்த்தம் விஜஹார பஹூந் ருதூந்" என்றும்-"மைந்தனைமலராள்மணவாளனை" என்றுஞ் சொல்லுகிறபடியே, ஶ்ருங்காரத்தில் வந்தால், அநேகஜந்துக்களை ஒருபடிப்பட நடத்தாநின்றாலும், எதிர்த்தலை கவர

|| எழில் - காந்தி. $ வையாத்யம் - யாஷ்டிர்ய்ம்.

யா நமாம்படிகாணவர்கள்வ்யாவஹ்ருதமிருக்கும்படி. அன்றிக்கே,*௩. (உ.ஹாவதை) "காதல்கடல்புரைய விளைவித்தகாரமர்மேனிநங்கண்ணன்" என்கிறபடி, பருவத்தையும் வடிவழகையும் சிவப்பையுமிட்டுப் பிறரைப் படுகுலைப்படுத்தித் துடிக்கும்படி பண்ணி, பின்னை யவர்கள் நினைவிலோரடியும் புகுராதபடியாய்காண் அவர்கள் ஸ்ருஷ்டவஹா யவ்யாவஹ்ருத மிருக்கும்படி யென்னவுமாம்.

ஆகஇப்படி ஸமுதாயஶோபையிலும் அவயவஶோபைமட்டமாயிருக்குமோவென்னில்;*க. (வர்ணாஸ்ரீகவிஶாவாக்ஷள)அதுகண்ணழகைத்தப்பினலன்றோ வேறொரு அவயவத்திலிழியவொட்டுவது. *உ.(வர்ணாஸ்ரீகவிஶாவாக்ஷள)அவையெல்லாங்கிட்டினல் அழிக்குமவை.இனியிது அங்ஙனன்றிக்கே,"தூதுசெய்கண்கள்கொண்டொன்றுபேசி" என்றும்-"தாமரைக்கண்கள்கொண்டீர்தியாலோ" என்றும்-தூதிலே தோற்றினபோதேயழிக்கும்படியாய்காண் கண்களிருப்பது. *௩. (வர்ணாஸ்ரீகவிஶாவாக்ஷள) வர்ணாஸ்ரீகவிதாஹ்லோஜமிறே. "ஸம்ரக்தநயநா வோராঃ" என்று-உங்களைப்போலே $எரிவிழியாயிருக்கை யன்றிக்கே, ஸ்வாபாவஸ்நயவஹமான அக்கண்களிருந்தபடிகாண்.*௪.(வர்ணாஸ்ரீகவிஶாவாக்ஷள) ரக்ஷணோவயோமியான கருவிழியுஞ் செவ்விழியுங் கண்பரப்பும், தமோகுணோத்ரேகத்தாலே நித்ராகஷாயிதமாதல், ரஜோகுணோத்ரேகத்தாலே கோபஸம்ரக்தமாதலன்றிக்கே, ஸத்வப்ரவர்த்தகையாலே, அவர்களுடைய த்ருஷ்டிவ்யவஸாய மிருந்தபடிகாண்.* ௫.(வர்ணாஸ்ரீகவிஶாவாக்ஷள) அவர்தாம், "த்ருத்வா நம்ஶோஷம்சேந்த்ர" என்று-தம்மை மறந்தாராகிலும், "யதாகவ்யாஸம்வர்ணாஸ்ரீகவேவேக்ஷிணீ" என்கிறபடி, அகவாயிற்கிடந்த வாத்ஸல்யத்தைக் கோட்சொல்லித் தாராநின்ற தாயிற்றுக் கண்கள்தான். *௬. (வர்ணாஸ்ரீக விஶாவாக்ஷள) பாற்கடல்போலே அக்கண்களுக்குள்ள அகலம் ஒருவரால்கரைகாண

---

$ எரிவிழி - நெருப்பைப்போல் எரிகிற கண்.

வொண்ணாதபடியாய்காண் கண்களிருப்பது. * எ.(புண்டரீகவிஶாலாக்ஷ) கண்ணிலுண்டான தெளிவுக்கு புண்டரீகத்தை யொரு §போலி சொன்னோமித்தனைபோக்கி, அகலத்தைப் பார்த்தால் கடலிற்புக்கார் கரை காணமாட்டாதே மயங்குமாபோலே, "புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப்பெரியவாய் கண்கள்" என்னு மித்தனைபோக்கி, வேறொருபாசுரமிட வொண்ணாதுகாண். *கூ. (புண்டரீகவிஶாலாக்ஷ) "உயிர்க்கெல்லாந் தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்ணன்" என்றும்-"தடங்கொள் தாமரைக்கண் விழித்து இடங்கொள் மூவுலகுந்தொழ விருந்தருளாய்" என்றுஞ் சொல்லுகிறபடியே, ஸஹஸ்ரநித்ராத்மகமாய் த்ரிவிதகோடியான உபயவிபூதியும் ஸகலோஜ்ஜீவநமத்திலே கடாக்ஷிக்கவற்றாய்காண் கண்களிருப்பது.

(ஏஹாவஶ்ய புண்டரீக விஶாலாக்ஷ) ஸமத்வத்தைக்காட்டி அவர்களைத் தோற்பித்து, அவர்களை, "ஜிதந்தே புண்டரீகாக்ஷ" என்றும், "தாமரைக்கண்ணனை விண்ணோர் பரவும் தலைமகனை" என்றும்-எழுதிக்கொள்வது கண்ணழகை யிட்டிறே. (ஏஹாவஶ்ய புண்டரீக விஶாலாக்ஷ) அவர்களளவிலே யீடுபட்டவர்கள் நேராகக் கைவாங்கமாட்டாதே, "ஸ்வயோகநிதாநே நஸம்யோகம் வாஸ்ய" என்றும் - "புண்டரீகாக்ஷ ரக்ஷமாம்" என்றும்-"தாமரைக் கண்களாலே நோக்காய்" என்றும்-திர்யக்ஷைபண்ணிக் கால்கட்டும்படி பண்ணுவது இக்கண்களின் தண்ணளிகாண். புண்டரீக விஶாலாக்ஷ-ஸ்வகாமாத- என்கிற ஸமாஸத்தாலே காமர்களென்று சொல்லிற்றிறே. ஆனால் புஷ்பபாணராகவேணுமே, அப்படிக்குக் கண்டதென்னென்னில்; "கடைக்கணென்னுஞ் சிறைக்கோலால் நெஞ்சூடுருவ வேவுண்டு நிலையுந் தளர்ந்துநைவேனை" என்னும்படி, என்னை நிலைகுலைத்த புஷ்பபாணங்களிருக்கிறபடி காண்.

அவயவஶோபாஸாரத்தாலேயோ அகப்படுத்துவதென்னில்; * க. (பீதக்ருஷ்ணாஜிநாம்பர) ஒப்பனை யழகாலுமழிப்பார்கள்காணவர்களென்கிறாள். * உ. (பீதக்ருஷ்ணாஜிநாம்பர) "செவ்வரத்த

§ போலி - உபமானம்.

வுடையாடை யதன்மேலோர் சிவிளிகைக்க” என்கிறபடியே, உள்ளுடுப்பதுமரவுரி, மேற்சாத்துவது கலைத்தோலுமாயிற்றிருப்பது. * ௩. (சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ) தாருண்யாதியான ஸௌந்தர்யத்தைப்பொதிந்ததொரு கீழ்ச்சீரையிருந்தபடிகாண். *௪.(தருணௌரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ। புண்டரீகவிஶாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ) “கிமிவ ஹி மதுராணாம் மண்டநம் நாக்ருதீநாம்” என்கிறபடியே,*வறைமுறுகலான ருஷிகளுமகப்பட விக்ருதமாம்படி யிருக்கக்கடவ அம்மரவுரியுந்தோலும், அவர்கள் வடிவிலேசேர்ந்தபடியாலே அழகுபெற்றிருந்தபடிகாண். * ௫. (சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ) ஏதேனுமாகவங்கே சாத்தவமையுமிறே ஸுகவிக்ரஹமாகைக்கு. “தாஸாமாவிரபூச்சௌரி: ஸ்மயமாநமுகாம்புஜ:। பீதாம்பரதர: ஸ்ரக்வீ ஸாக்ஷாந்மந்மதமந்மத:” என்கிறபடியே, “பீதகவாடையுடைதாழ விருந்தாவனத்தே கண்டோமே” என்றும்-“செய்யவுடையுந் திருமுகமுஞ் செங்கனிவாயுங் குழலுங்கண்டு” என்றும்-“பெண்பிறந்தார் வாய்புலர்த்தும்படியாய்காண் இடையழகிருப்பது. * ௬. (சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ) “உடுத்துக்களைந்த நின் பீதகவாடையுடுத்துக் கலத்ததுண்டு” என்று-ஸர்வஜ்ஞராசைப் படுவதும், “பெருமானரையிற் பீதகவண்ணவாடைகொண்டென்னை வாட்டந்தணிய வீசீரே” என்று-ஸோமவரராசைப்படுவதும் பரியட்டத்தையாயிற்று. *௭.(சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ) “ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம்। தத்ருஶுர்விஸ்மிதாகாரா:” என்றும்-ஸர்வஜ்ஞராந பரரான ருஷிகளகப்பட இவ் விக்ரஹகுணத்திலே யுடை குலைப்படாநின்றார்கள். “க்ஷந்த்ராகாரய தேஹவது” என்றும்-“பெற்றக்காலவனாகம் பெண்பிறந்தோமுய்யோமோ” என்றும் - உடம்பை யுகப்பிக்கக்கடவ ஸ்த்ரீகளாழங்காற் படச்சொல்லவேணுமோ?

எளிமைசொல்லுகிற யோஜனையில் ; (தருணௌ) அவர்கள் பக்கலிலே சரக்குண்டாக நினைத்திருக்கவேண்டாகாண்; “நயாஸயோ

---

* வறைமுறுகலான - வறுத்த வஸ்துபோல் கடினமான..

ஹ்ருதாஜஸ்ய வஶ்யாஜி" என்கிறபடியே, பூசலுக்கு ஆளாகாதார் சில ஸாஜராய்காணிருப்பது. நானேயோவிது சொன்னேன்; "ஸா யோஹ்யகூதவிஷ்யஸ்துநவவேத்தி ஸஜாவஜு। நவாஸஸஜஸம்வந்நோ நவயூஃஸ விஶாரஷஃ" என்று-பெற்றதகப்பனகப்பட நெஞ் சாறல் பட்டிலனோ? (தரு்ணள) "யஸவநேவிஷயெயஷிணாழ" என்கிறபடியே, விஷயவ்யவணராய் கூந்யவரராய்த் திரிகிறவர்க ளுக்கும் ஒரு பூசலுண்டோ போருவது.

ஸாஜரான இவ்வளவுமன்றுகாண்; (ரூஷவஸம்வநூள) "கூந்யா காஜயதேரூவஜு" என்றும், "ரூஷவேணவநிதாஜநஜு" என் றும்-ஸ்தீகளகப்படுகைக்கு மேனி மினுக்கித்திரியுமத்தனைபோக்கி, வ்ருஷர்களகப்படும் படியான ஆண்மை யுடையவர்க ளல்ல காண். (ரூஷவஸாவநூள)முங்கிற்பொங்துபோலே தோலில் பச்சை யித்தனைபோக்கி, அகவாயிலுள்ளீடில்லைகாண்.

அதுக்கடி யென்னென்னில்; (ஸுகுஜாரள) ஸ்ரீஜஸவ்து் களாகையாலே செல்வப்பிள்ளைகளாய் காணிருப்பது. (ஸுகுஜா ரள) "வரஸுயஹதஸ்ராஷ் ஜநவ்ராணஸ்ய ஹூதமே" என்கிற படியே, கடைக்கண்சிவந்து நீ பார்க்கும் பார்வையிலே மாயும்படியி ருக்குமவர்களோ உன்னுடைய கூத்ருமான ஆயுயங்களைப் பொறுக்கப்புகுகிறார்கள்.

வடிவைப் பார்த்தால் திறவியரல்லராகிலும், காயத்தில்வங் தால் திறவியராயிரார்களோ வென்னில்; (ஜஹாஸஜள) ஸஜஹீந ரானவளவேயன்றுகாண்; க்ஜாமதமான ராஜ்யத்தைக் கொடுக்கச் செய்தேயு மகப்பட ஆளமாட்டாதே யொதுங்கி பெண்டாட்டிக்கஞ் சிப்பொகட்டுப்போரும்படி கூத்ருஸாஜராய்காணிருப்பது. அன்றி யிலே, (ஜஹாஸஜள) ஸஜவான்கள் தானுனு மிவர்களிருவரு மித் தனைபோக்கி,இவர்களுக்குமேல்ஸஜமாய்வரப்புகுகிறார்களுண்டோ? "ஜ்யஷ்டதஜ்யோ நாரீதயோஜுயேயு ஸுஜயாஜா" என்கிறப டியே, காற்கட்டாம்படி குழைச்சரக்கா யிருப்பாளொருபெண்டா ட்டியையும் முதுகிலே கொண்டு திரிகிறவர்களோ பூசலாடப்புகு கிறார்கள்.

பூசலாடமாட்டார்க ளென்று அறிந்தபடி யென்னென்னில்; (வஂணஶீகவிஶாலாக்ஷௌ) விளைவதறியாமையாலே, இவனுக்கு வெரூவ்யும் விளைத்தோம், மேலென்னாகப் புகுகிறதோவென்று, அவர்கள் வெளுக்க வெளுக்க விழிக்கிறவிழியிலே கண்டேன்காண். வஂணஶீகஂஹிதாஹோஜமிறே. (வஂணஶீக விஶாலாக்ஷௌ) நீரிற் றாமரையைவறளிலே யிழுப்பாரைப்போலே தன்னிலமான நாட்டுக் கவர்க ளாளித்தனைபோக்கி, வெற்று நிலமான காட்டுக் காளல்ல ரென்னுமிடம் அவர்கள் கண்கள்தானே சொல்லித்தருகிறனகாண்.

அவர் தாங்கள் ஸுகுமாரானல், வேஷமுயத்தாலே படையாண்டு போரத்தட்டேன்னென்றிருக்கவேண்டா; (சீரகுஷ்ணாஜிநாஂரௌ) உடுக்கைக்கொருபுடவை யகப்படலன்றியிலே காட்டில் மரத்தோலையும் மான்தோலையு முடுத்துத்திரிகிறவர்களோ காசுநேர்ந்து படையாளப்புகுகிறார்கள். (சீரகுஷ்ணாஜிநாஂரௌ) உடுக்கிறபுடவையிரண்டு மேகஜாதீயமாகப் பெற்றதோ? உள்ளுடையொன்றும் மேலுடையொன்றுமாயன்றோ இருக்கிறது. (சீரகுஷ்ணாஜிநாஂரௌ) ஸூாவர மொன்று கொடுக்க, ஜஙமொன்று கொடுக்க, இப்படிபலர்பக்க லாக் கிரந்தன்றோ இதுதானு முடுக்கிறது.

வளரூஷோவவாஉநயோஜனெநயில், (தாரூணௌ) "ஊநஷோாஶவஷஃ" என்னும்படியான பிள்ளைப் பருவமுமன்றியிலே, "கடோகவஷஃஹாஹஸோவுஜஸூஹிவாதூவ" என்னும்படி, முதிர்ந்தபருவமு மன்றியிலே, பூசலென்றால் காட்டுக்காட்டென்று வரும்படியான நல்லபருவங்காண். (தாரூணௌ) "யௌவநேவிஷயெஷிணாஂ" என்றும்- "ராஜஂகாஂவிஷயாவிஹேஹிரே ஹவஷிஷயவாஹிநஃ" என்றும் - விஷயஶூவம் ராஜவாவியாகையாலே, இன்னம் ராஜஂம் சொள்ளவேணுமென்று மேலே விஜிகீஷுக்களாம்பருவங்காண். (தாரூணௌ) இப்பருவ முடையாரொருவரமைந்திருக்க, இருவர்கூடினல் இயலாததுண்டோ?

இப்பருவமும் யோஹஂதையு மறிய வடிவுபார்த்தால் இவர்களென்ன பூசல்பொருவதென்னும்படி ஸூஹாஸமா யிருக்குமோ வென்னில்; (ரூவெஸஂவநௌ) "ஹிஹோாரஸஂ ஹோாவாஹஂ" என்கிறபடியே, வேறொரு ஸூயஂயம் வேண்டாதபடி யவர்கள் தோளையும்

மார்பையுங்கண்டபோதே எதிரிகள் கால்வாங்கும்படியாய்கா ணிருப்பது. (ஸஹித்ரௌ) ஸஹித்ரமென்னும் மதிப்பா யிப்பருவங் கொண்டநுமிக்கையன்றிக்கே, ''மஹா ஸஹிஜ்ஞோ நர்விஜி ரத்ந'' என்றும் -''யஶஸ்ஸௌக ராஜநா'' என்றும் சொல்லுகிறபடியே, ஸுபோய்ராவஸ்தாங்குடங்கி ஸம்பாஹுரீவாதி விரோதிவிஷயம்பண்ணினத்தாலே பெருமதிப்பாயிருக்கிறவர்களல்லவோ வென்றாகவுமாம்.

இப்படி விரோதிவிஷயம் பண்ணுமிடத்தில் வருத்தத்தோடே க்லேஶித்தோ பண்ணுவதென்னில்; (ஸுகுமாரௌ) அவர்கள் ஆண்மைத்தனத்தில் வந்தால் ஒருவகைக்குச் சிறிது சொல்லலாமித்தனை போக்கி, வடிவழகைப்பார்த்தால் ஸஹஜமாய்ப் பொல்லாதாயிருக்கையன்றிக்கே, ஸத்ருஜஹிரஸமாய்கா ணிருப்பது. (ஸுகுமாரௌ) அவர்களுமாய்ச் சிறிப்பார்த்தார்களாகில் முன்னேவந்த நாலிரண்டு பேரைக் கொன்றுவிடுமளவேயோ? ''ஸதேவமாநுஷ ஈக்ஷ்வந்தம் ஜகத் ஸர்வம் ஸவிஷ்யாதி'' என்றும் - ''ஸோம ரஜீவனம் ஈஹிம் உஹதிகோவேந'' என்றும் - ஹதியை யிருந்ததேகுடியாக நசிப்பியார்களோ?

இப்படி நசிப்பிப்பது எது கைமுதலாக வென்னில்; *க. (மஹாபலௌ) தோள்வலியே கைமுதலாய்காணிருப்பது. *உ. (மஹாபலௌ) மஹத்வத்தாலே கேவலம் பாஹுபலமேயன்று, மநோபலமுமுடையவர்கள்; கேவலம் மநோபலமேயன்று, பாஹுபலமுமுடையவர்களென்று இரண்டையும் நினைத்துச்சொல்லுகிறாள். *ங. (மஹாபலௌ) உன்னுடைய ஸதாரஜபலமும், ஸஸைந்யமாம்படிகாண் அவர்கள் பலத்தின் மிகுதியிருக்கும்படி. * ச. (மஹாபலௌ) நெடும்போது யுத்தம்பண்ணினாலும ஶ்ரமந்தட்டாதபடி பலாதிபலௌகளென்கிற வித்யைகளுடையராய்கா ணிருப்பது.

இப்படிக்கு ஶ்ரமந்தட்டாதென்று அறிந்தபடி யென்னென்னில்; (புண்டரீகவிஶாலாக்ஷௌ) வெற்றுநிலமான இக்காட்டிலே திரியச்செய்தேயும், தன்னிலத்திலேநின்ற தாமரைபோலே, அக்கண்ணிற்செவ்விதானே சொல்லாநின்றதுகாண். (புண்டரீகவிஶாலாக்ஷௌ) எதிரிகளென்றாலவர்கள் பக்கலிலே ஒரு மார்தவத்தைப்

பண்ணி சிறுத்தல் பெருத்தல் செய்கையன்றிக்கே கவிக்ருதமாய் காண் கண்களிருப்பது. (வால்மீகிராமாயணே) "ஶ்ரீதிவிஶாரி தேக்ஷணௌ" என்று-எதிரிகளைக் கண்டால் *உறுவுகை யன்றிக்கே, ||மேனாணிப்பாலே ஒருக்காலைக்கொருக்கால் விஸ்த்ருதங்களாய் காண் கண்களிருப்பது.

எதிரிகளென்றா லிப்படி முகம்மலருகைக்கடி யென்ன; பூசலுக் கென்று கட்டியுடுத்து ஸந்நத்தராயன்றோ அப்படியே யிருக்கலா வது, அவஸரத்திலே வந்துதோற்றினருண்டாகில் செய்யுமதென னென்னில்; (ஸ்ரீக்ருஷ்ணாஜிநாம்பரௌ) "ஸந்நத்தௌவிவஶிஷ்ட்ரதः" என்கிறபடியே, உள்ளுடையு மிறுக்கி உடம்புக்கிடுமிட்டு ஸந்நத் ராய்காணவர்களிருப்பது. (ஸ்ரீக்ருஷ்ணா ஜிநாம்பரௌ) காட்டிலே ஸத்வியஸங்கங்களையும் வேட்டையாடித்திரிகிறவர்களாகையாலே உடைத்தோலும் மரச்சடையுமாய்காணவர்களிருப்பது.

ஆகவிப்படி, "ஸ்தோத்ரநமோகாநு ஜயதி ஸீநாதாநேந ரா வவः | ஶாலாநு ஶுஶ்ரூஷயா வீரோ யதுஷாயாயிஶாத்ர வாநு" என்கிறபடியே, அபெளகளை யழகாலே யழித்தும், அரி களை வலத்தாலே யழித்தும் அமதிகளை அருளாலே யளித்தும், தக்கார்க்குத்தக்க கருவிகளை யுடையராய்காணவர்களிருப்பது. ஆன பின்பு, "வல்லாளன்தோளும் வாளரக்கன் முடியும் தங்கை பொல் லாத மூக்கும் போக்கு வித்தான்" என்கிறபடியே, நான் மூக்க றுப்புண்டாப்போலே நீயும்முடியறுப்புண்டு போமித்தனை போக்கி, அவர்களோடு புக்கால் ஜயியாதுகாணென்று பரிஹஸித்துச் சொ ல்லுகிறாள். கச.

தாத்பர்யம்.

க. ராமலக்ஷ்மணர்கள், நவயௌவநமுடையவர்களாயும், மன் மதன்முதலானாரும் வெட்கப்படும்படியான நிரதிசயசௌந்தர்யமு டையவர்களாயும், புஷ்பம்போல் அதிஸுகுமாராரயும், கார்யம் செய் யும்போது கொஞ்சமும் இளைப்பில்லாதபடி அதிக பலமுடையவர்க ளாயும், எப்போதும் ஸத்யத்தைவிடாதவர்களாயும், மலர்ந்திருக்கிற வெண்தாமரைப்பூப்போல் விசாலமாயும் நிர்மலமாயுமிருக்கிற கண் களையுடையவர்களாயும், நிருபமாநமான ஸஹஜ ஸௌந்தர்யமுடை

* உறுவுகை - வாட்டம். || மேனாணிப்பு - கர்வம்.

யவர்களாயும், தாமுடுத்த மாவுரிமான்தோல்களினுல்மிகவும்சோபை யுடையவர்களாயுமிருக்கிருர்களென்று, சூர்பணகை, ராமலக்ஷ்மண ஸௌந்தர்யத்தில் மோஹித்துத் தன்னுடைய ஸோதரர்களானகாதூ ஷணர்களோடு சொல்லுகிருள்.

உ. ராமலக்ஷ்மணர்களுக்கு இப்போது யுத்தம்செய்யத்தக்க வயஸ்ஸுகூடவரவில்லை. அவர்கள் தங்களழகினுல் பெண்களைவசப்ப டுத்தி அவர்களோடு விஹரித்துக்கொண்டு ஸுகுமாரராய்த்திரிவர்க ளேயன்றி உங்களைப்போன்ற வீரர்களுக்கு எதிரில வரவும்கூடதைர் யமில்லாத பயங்காளிகள். தங்கள் ராஜ்யத்தைநேராக பரிபாலனம் பண்ண சக்தியில்லையாகிலும், ராஜனென்கிறபேர்வஹித்து ஊரிலிருக் கவும்கூடசக்தியில்லாமல் ராஜ்யத்தைவிட்டு காட்டுக்குவந்து, அங் கும் ஸுகமாய்வாஸம் செய்வதற்கு ப்ரதிபந்தகமான பெண்டாட்டி யைக்கூடக்கொண்டு திரிகிருர்கள். எனக்கு மூக்கையறுத்துப்பின்பு உங்களாலென்னதீங்கு வருகிறதோவென்றுபயந்து வெண்தாமரை போலே வெளுத்த விழிகளைத்திறந்து நாலு திக்கிலும் பார்த்துக்கொ ண்டிருக்கிருர்கள். உடுக்கவஸ்த்ரமும்கூட ஓரிடத்தில் ஸம்பாதிக்கச் சக்தியில்லாமல், மரத்தைக்கேட்டு ஒருகட்டுவஸ்த்ரமும், மானைக்கே ட்டு ஒரு மேல்வஸ்த்ரமும், கஷ்டப்பட்டுஸம்பாதித்து போரும் போ ராதுமாய்க் கட்டிக்கொண்டிருக்கிருர்களென்று, யுத்தம்செய்வதற்கு காதூஷணர்களுக்கு தைர்யம் வரும்படி, ராமலக்ஷ்மணர்களுக்கு அனேகவிதமான தௌர்ப்பல்யத்தைச் சொல்லுகிருள்.

ங ராமலக்ஷ்மணர்கள், யுத்தத்துக்கு ஆசைப்படும்படியான பரு வத்தையுடையவர்களாயும், தர்சனமாத்ரத்தால் சத்துருக்களைப்பின் வாங்கும்படி பண்ணும்படியான அழகையுடையவர்களாயும், அனு யாஸமாய் தங்கள் புஜபலத்தினுலும், மனோபலத்தினுலும், ஸஹாதி ஸம்ஹைகளென்கிற வித்யாபலத்தினுலும் சத்துருக்களை அழிக்கிற வர்களாயும், சத்துருக்களைப்பார்த்து கொஞ்சம்கூட விகாரமில்லா மல் நிர்ப்பயமாய்ப் பார்த்துக்கொண்டு வஸ்த்ரங்களையிறுக்கிக்கட்டிக் கொண்டுயுத்தத்துக்குஸித்தமாயிருக்கிருர்கள். அவர்களோடுயுத்தம் செய்யப்போனுல், நான் மூக்கறுப்புண்டாற்போல் நீங்களும் தலையறு ப்புண்பீர்களென்று காதூஷணர்களை அவமானப்படுத்திசூர்பணகை சொல்லுகிருள்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ஆரண்யகாண்டம் - ௩௰ - ம் ஸர்கம் - ௩௯ - ம் ஶ்லோகம்.

௩௯.— தம் த்ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம் |
பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே ||௩௯.

அர்த்தம்.—வைதேஹீ-ஸீதாதேவி, ஶத்ருஹந்தாரம்-சத்ருக்களை ஹிம்ஸிக்கிற, மஹர்ஷீணாம்-பெரியயோகிகளுக்கு, ஸுகாவஹம் - ஸௌக்யத்தைப் பண்ணுகிற, தம்-அந்த, பர்த்தாரம்-பதியான ஸ்ரீராமனை, த்ருஷ்ட்வா - பார்த்து, ஹ்ருஷ்டா - ஸந்தோஷத்தை யுடையவளாக, பபூவ - ஆனாள். பரிஷஸ்வஜே - நன்றாக ஆலிங்கனம் செய்துகொண்டாள்.

வ்யா. ஶரதாரிகை. "ஶஸ்த்ரக்ஷதானி" இதிவத் க்ரியையாலே, ராக்ஷஸவேட்டையாடின பெருமானுடைய யுத்தஜாத ஸ்வேதபிந்துவான திருமேனியில் ராக்ஷஸ ஶர வ்ரணமென்ன வாடி ஶ்ருங்காரமான மாலாவிர்ப்பத்தைப்பண்ணி, பிராட்டி ஸத்தைபெற்றாளென்கிறது.

* க. (தம்) "ஸ்வயம் ப்ரஹர்ஷ விக்ரஹம்" என்று-விண்ணப்பஞ்செய்ய வேண்டும்படி, ராக்ஷஸஸமயமான தேஶத்தி லுன்னைக்கொண்டு போக அஞ்சுவேனென்றவரை. *உ. (தம்) "ஸ்வயம் ப்ரஹர்ஷ விக்ரஹம்" என்று- பிராட்டிவாயாலே கருத்தபூதமாக, அன்று துடங்கித் திருவுள்ளத்திலே கறுவியிருந்து, பதினாலாயிரம் ராக்ஷஸரையும் முடியும் உடலுமாகத் தறித்து உதிரவெள்ளத்திலே மிதக்கவிட்டுப் பிராட்டியைக்கையைப் பிடித்துக்கொண்டு காட்டினவரை. * ங. (தம்) "ஶூரித்யஜனேதஜஸ்ய" இத்யாதிப்படியே வீரப்பாட்டுக்குச் சிறுவிரல் முடக்கும்படி ஶரதீனமானவரை. * ச. (தம்) படுக்கைத்தலையில் விடுபூவிழுந்து திருமேனிசிவக்கும் ஸௌகுமார்யாதிஶயத்தையுடையவரை. * ரு. (தம்) உகப்பாலே அடுத்துப்பார்க்கில் நயமான தேஜஸ்ஸுக்கும் ஸ்தானமான திருமேனியுடையவரை. *சு. (தம்) ரிஷிகளுக்குப்பண்ணின ப்ரதிஜ்ஞையைக் கடலோசை யாகாதபடி தலைக்கட்டுகையாலே பூர்ணமானவரை. * எ. (தம்) ரத்னவிசிதமான பொன்னரிமாலைபோலே ஶத்ருஶர வ்ரணாங்கிதமான திவ்ய விக்ரஹத்தை யுடையவராயுள்ளவரை.

ந கறுவி - கோபித்து. ¶ பொன்னரிமாலை - ஓராபரணம்.

(த்ருஷ்ட்வா) கருமுகைமாலையைப் பன்னீரிலே தோய்த்தெடுப்பாரைப்போலே, யுத்தாயாஸவிஶிஷ்டமான திருமேனியைத் தன்பார்வையான பன்னீராலே வழியவார்த்து. (த்ருஷ்ட்வா) ஆதபாபிஹதருடைய ஶீததடாகப்ரவேஶம்போலே, ராக்ஷஸாஸ்த்ராபிஹதமான திருமேனியைத் தன் பார்வையாகிற அம்ருததடாகத்திலே தோய்த்தெடுத்து,

(ஶத்ருஹந்தாரம்) ப்ரதிபக்ஷ நிரஸநத்தாலே வந்த [P] புகருடைமை. "ஸமோஹம் ஸர்வபூதேஷு" என்கிற பெருமாளுக்கு ஶத்ருக்களுண்டோ வென்னில்; "ஜ்ஞாநீத்வாத்மைவ" "த்வேஷ்யாணாஹி" இத்யாதிகளாலே ஆஶ்ரிதவிரோதிகள் தனக்கு விரோதிகளாமித்தனையிறே.

(மஹர்ஷீணாம் ஸுகாவஹம்) யாகஸம்ரக்ஷணம் தொடங்கி, "கிம்கரிஷ்யதி" என்று வயிறுபிடித்து பீதராயிருந்த மஹர்ஷிகளுடைய பயங்கர ஶத்ருக்களடங்கக்கொன்று, அவர்களுக்கு ஸுகாவஹராயுள்ளவரை. (மஹர்ஷீணாம் ஸுகாவஹம்) தம்முடைய ஶோகார்த்தத்துக்கு ஸாந்த்வத்தைப்பண்ணி தம்முடைய ஸத்தைக்கு ஆதாரரானவரை.

(பபூவ) மாலையும் மணமும்போலே அத்யந்தம் ஸாகாரமான விக்ரஹத்தையும் ஸ்வபாவத்தையுமுடைய பெருமாள், கடிநமாத்ருஸ்வபாவரான முரட்டு ராக்ஷஸரோடே யுத்தம்ப்ரவ்ருத்தித்த போது தொடங்கி ப்ரேமாதிஶயத்தாலே ஸத்தைமாண்டுகிடந்த பிராட்டி, திருமேனியிலொரு தீங்கின்றியிலே நின்ற பெருமாளைக்கண்டு ஸத்தைபெற்றாளென்கிறது.

(ஹ்ருஷ்டா) த்ருஷ்டியுண்டானால் ஹர்ஷம்பிறக்கக்கடவதிறே. ராமஸௌந்தர்யத்தை முழுக்கக்கண்டு திருவுள்ள மீடுபட்டபடி.

* க. (வைதேஹீ) ஐயர்வயிற்றிலே பிறந்திலேனாகில், எனக்கு இப்பேறில்லையே. * உ. (வைதேஹீ) இக்குடியிற் பிறந்திலேனாகில் பெருமாளென்னைக் கைப்பிடியாரே. * ங. (வைதேஹீ) இந்நிலத்திற் பிறந்திலேனாகில் இவ்வில்லோட்டை ஸம்பந்தங்கிடை

[P] புகர் - காந்தி.

யாதே. அவ்வில்லோட்டை ஸௌஹார்த்தமில்லையாகில் வீர்யமூல்யமாக இவ்வாகாரங்கூடாதே. * ச. (லெவாச ஹீ) யந்ஸ்ருஷ்டா த்துத்திலே என்னையும் தம்முடைய வம்ஶத்தையும் பெருமாளுக்கு அடிமையாகவெழுதிக்கொடுத்த ஐயரிந்த வாகாரங்கண்டாலென்ன படுவரோ. * ரு. (லெவதேஹீ) "வாஸோஜ்ஞஷ்டி விதூதாவஹார ரிணம்" என்றபடியே, ஸவபுருஷாகாஷமான இந்நிலையை ஐயரையொழிய நான் காண்பதென்று விசூருஷூதி பண்ணுகிறாள்.

(ஹதபூரஜ) வாணிகு ஹணவேளை துடங்கி வதிஸவ்ருதி வதீபண்ணிப்போந்தாள். இப்போதிறே யாஸ்ருதும் ஜீவித்தது.

(வஸிஷ்வஜே) ஸுஸ்ரூநம் பண்ணினாள். (வஸிஷ்வஜே) வஸிவணமாகத் தழுவினாள். (வஸிஷ்வஜே) வய்ரூவமாகத் தழுவினாள். தழும்பு மாறுமளவுந்தழுவினாள். ஶரவ்ணங்களாலே வந்த தழும்பெல்லாம் மாறுமளவுந்திருமுலைத்தடத்தாலே*வேதுகொண்டாள். தான்கைகண்ட மருந்திறே. ஶரவ்ணங்களுக் காலிங்கநமாமிடத்திலேக்தோடைந்நூற்றோடு வாசியில்லையே. அந்தரங்கருள் ளுறவெய்தபுண்ணுக்குமருந்தானவிது தோல்புரை ⁑ யெய்தபுண்ணுக்குமருந்தாகச்சொல்லவேணுமோ? என்றிருந்தாள். ஒருகொடியாகிறது கொழுகொம்பைத்தழுவி யல்லது நில்லாதிறே. (ஹதபூரஜ வஸிஷ்வஜே) நிதூவஸம்ஸ்யாமஸ்ஹிதிரஸ்வமான ஹதூஸ்வாகாரம் ஒருகொழுகொம்புக் குண்டானால், கஷாயாஶமாய்க்கொண்டு கொழுகொம்பை முட்டப்படர்ந்து அத்தை சிறப்பித்துக்கொண்டல்லது ஸ்வரூபமில்லையோ ஹாயபூகாகாரமான கொடிக்கு? "ஹதபூரஷவஸெவ்வ ஹாயபூயாஸ்ஹிதிஷிந்தே | ஸவஷெவ்ருஷம் வஷீஷ்யதே நவிநாஷூஷ" என்னுமாப்போலே.

தஜ - என்கிறவசநம், பெருமாளுடைய ஸவபூகாரங்களையும் காட்டுகிறது. த்ருஷ்டா-என்கிற வசநத்தாலே, பெருமாளுடைய ஸவபூகாரங்களையும் நோக்கிக்காணக் கண்ணுடையாள் பிராட்டியென்கிறது. ஶதூஹந்தாரஜ - உஹஷீணாம் ஸுவாவஹஜ - என்கிற வசநங்களாலே, தன்னோடு குடற்றுவக்குண்டான வேதநர்க்கு அநிஷ்டநிவ்ருத்தியையும் இஷ்டப்ராப்தியையும்பண்ணினபோத

* வேதுகொண்டாள் - உஷ்ணமாக்கினாள். ⁑ எய்த - அடைந்த.

ல்லது இவளைக்காணக் கண்ணில்லை யென்கிறது. ஸஹஸைவ - அத்த லைக்கு அதிஶயாவஹையாய் ஸத்தையைப் பெற்றபடி. ஹ்ருஷ்டா-"ஸ்தி யஶ்ரீர்ணி யஶஸ்வீநிஹ்ருதே."-வைதேஹீ-உபகாரஸ்ம்ருதி பண்ணு கிறாள். ஸுதுஷ்கரம் - தன்காரியம் சுமந்து நடத்தினரென்றாள். தன் காரியத்தைச் சுமந்து நடத்துகையாவது, "விதத்வஶிக்ஷ்மமோணம் ரோதா" என்கையாலே, தன் வம்ஶரக்ஷணம் பண்ணுகையிறே. பரிஷஸ்வஜே-ஆஶ்லிஷ்டாரக்ஷணத்தால் வந்தகளிப்புக்குப் போக்கு வீடு ஆலிங்கநம்போலே யிருந்தது. அவருக்கும் ப்ரயோஜநம் அது போலேகாணும். கரு.

தாத்பர்யம்.

பதினாலாயிரம் தேரேறிவந்த கரதூஷணர்கள் முதலானசத் ருக்களெல்லாரையும் கொன்று மஹர்ஷிகளுக்கு ஸௌக்யத்தைப் பண்ணி சத்ருக்களுடைய பாணங்களினாலடிபட்டிருக்கிற திருமேனி யையுடைய தன்னுடைய பர்த்தாவான ஸ்ரீராமனை, வீரர்களான விதேஹர் குலத்திலவதரித்த வீரபத்நியான ஸீதாதேவி, கண்ணாரப் பார்த்து, ஆநந்தபரிபூர்ணையாய்நன்றாக ஆலிங்கநம் பண்ணிக்கொண் டு, காயங்களுக்குத் தன்திருமுலைத்தடத்தால் ஒத்தடம்கொடுத்து கா யம் போமளவும் பராமர்சித்தாள்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

கிஷ்கிந்தாகாண்டம் - க - ம் ஸர்கம் - எக - ம் ஶ்லோகம்.

உ௦.— பத்மகேஸர ஸம்ஸ்ருஷ்டோ வ்ருக்ஷாந்தர விநிஸ்ஸ்ருத: |
நிஶ்வாஸ இவ ஸீதாயா வாதி வாயுர்மநோஹர: || கசு.

அர்த்தம்.—வாயு: - காற்று, பத்மகேஸரஸம்ஸ்ருஷ்ட: - தாம ரைப்பூவின் தாதுக்களோடு கலந்ததாய், வ்ருக்ஷாந்தரவிநிஸ்ஸ்ருத: - செடிகளுடைய மத்யதேசத்தில் நின்றும் வெளிப்புறப்பட்டதாய், ஸீதாயா: - ஸீதாதேவியினது, நிஶ்வாஸ இவ - மூச்சுக்காற்றுப் போலே, மநோஹர:-மநஸ்ஸை இழுக்கிறதாய், வாதி-வீசுகிறது.

வ்யா. * க. (பத்மகேஸரஸம்ஸ்ருஷ்ட:) ஸர்வப்ராணிகளுக் கும் ப்ராணநஹேதுவான காற்றுத்தானே நம்மை ஸர்வஸ்வாப ஹாரம் பண்ணுகின்றதி யென்கிறார். * உ. (பத்மகேஸரஸம்ஸ்ரு

ஷ:) இக்காற்றின் காயமும் யமஜியெழுந்து செல்லாநின்றது. * ௩. (வஷ்டகேஸரஸம்ஸ்ரூஷ:) தாமரையாள் கைவிட்டபடியாலே தாமரைத்தாதும் வ்ருதிகமித்தது. * ௪. (வஷ்டகேஸரஸம்ஸ்ரூஷ:) "வாஜாரஞ்ஜநேவ வக்ஷஜராஜ:" என்று - அவள் தனக்குமகப்பட பாயகமானது நமக்கு பாயகமாகச் சொல்லவேண்டாவிறே. * ரு. (வஷ்டகேஸரஸம்ஸ்ரூஷ:) இதினுடைய ராஜஸமிருக்கும்படியென். நம்மையும் மதிக்கிறதில்லையே. * ௬. (வஷ்டகேஸரஸம்ஸ்ரூஷ:) இதுக்கடி கணிகைகளோட்டைஸம்ஸமயமிறே. * ௭. (வஷ்டகேஸரஸம்ஸ்ரூஷ:) இத்தைக் காற்றென்றிருந்தோம். இது கேஸரியாயிருந்ததீ. * ௮. (வஷ்டகேஸரஸம்ஸ்ரூஷ:) தனக்கு மேலே கூட்டுப்படையும் தேடிவாராநின்றது. ரமவான்களிறே கஸஹாயஶமரராயிருப்பார். இதுரவெஷீ நமாகையாலே துணை தேடுமிறே.

இப்படி பாயகமாய்வந்ததாகில், அறிந்தருகவே வஸிஹஸிக்கத் தட்டென்னென்ன. * ௧, (வ்ருக்ஷாஞரவிநிஷ்ரூத:) உமரத்திலே கண்டு வஸிஹஸிக்க வொண்ணாதபடி, "குன்றாடு பொழில்நுழைந்து" என்கிறபடியே, மரங்களிலே வந்துபதிகிடந்து நடுவே புறப்படக் கண்டதித்தனை. * ௨. (வ்ருக்ஷாஞரவிநிஷ்ரூத:) செல்வப்பிள்ளைகள்வெயில்பொறாமல் நிழலிலேவருமாப்போலே, இதுவும் மரத்தினிழலிலேவாராநின்றது. *௩.(வ்ருக்ஷாஞரவிநிஷ்ரூத:) கீழே வஷ்டகேஸரஸம்ஸ்ரூஷ:-என்று- ஸௌரஹ்யஞ்சொல்லிற்று. மரத்திலேதேங்கியிடைவெளியாலே§யொழுகப்புறப்படுகையாலே மாந்த்யஞ் சொல்லிற்று. மரத்தினிழலிலே வருகையாலும் தாமரையிலுள்ளதேனை†யளாவிவருகையாலும், ஶைத்யஞ்சொல்லிற்று. ஆக ஸௌரஹ்யமும் மாந்த்யமும் ஶைத்யமும் சொல்லிற்று. * ௪. (வ்ருக்ஷாஞரவிநிஷ்ரூத:) விடாய்த்த நம்மை மரத்தடியிலே யொதுங்கவொட்டுகிறதில்லை.

---

§ ஒழுக - க்ரமமாய். † அளாவி - ஸ்பர்சித்து.

இப்படி வாயுகமாய் வந்தால் நம்மைக்கொண்டகலு மித்தனே யன்றோவென்ன ; * க. (நிஶ்வாஸஜவஸீதாயா:) முகம் பழகினாற் போலே யிருக்கையாலே அதுவும் செய்யப்போகிறதில்லை. * உ. (நிஶ்வாஸஜவஸீதாயா:) ஜைமினியினுடைய மூச்சுக்காற்றுப்போலே யிருக்கையாலே, அவள் தான் மரத்தடியிலே யொளித்துநின்று வருகிறாளோவென்கிற நசையாலே போகப்போகிறதில்லை. * ௩. (நிஶ்வாஸஜவஸீதாயா:) "ஶூந்யோச்சிவஜிஹ்வைஸ்ஸநிஶ்வாஸாந் காமிநாம்" நிஶ்வாஸத்துக்கு வஸிஷ்டமுண்டாகச் சொல்லக்கடவதிறே. * ௪. (நிஶ்வாஸஜவஸீதாயா:) ஸஸ்ஸ்பந்நமாய் † நலிகிறதற்குமேல் ஸாரகமாயும் நலியாநின்றது.

இப்படிக்கொத்த காற்றுத் தோன்றின வளவோவென்னில் ; (வாதி) காடு தன்பரப்புந்தாணும்படியுலாவாநின்றது. அன்றியிலே, (வாதி) என்று வாயுகமென்று கொண்டு போகவொண்ணாதபடி தான் ஸம்வாஸித்த மதுத்தாலே துவக்காநின்றது. இதுதான் மது வாஸமிறே.

இப்படி வாயுகமாகவந்து தோற்றியுலாவுகிறதுதா னேதென்னில் ; (வாயு:) ஸர்வப்ராஜீவநஹேதுவான காற்றுகிடரிப்படி வாயுகமாகிறது. (வாயு:) "பீஷாஸ்மாத்வாத: பவதே" என்று - இவருக்கஞ்சித் திரிகிற காற்றிறே இவர் தம்மையஞ்சப் பண்ணித்திரிகிறது.

இப்படி யஞ்சப்பண்ணுகிறபடியென்னென்னில்; (ஸ்தேநாஹார:) மேலெழுந்ததன்றியிலே உள்ளுள்ள வஸாஷ்டமகப்பட கவஹரியாநின்றது. (ஸ்தேநாஹார:) §இனியாரைப்போலே ∴பின்னுப்புச்செய்யாநின்றது. இது ஶோகத்திலே யொருவழிப்பறிக்காரர் ஸாயியாய் நடக்கிறது.

வஜ்ரகேஸரஸம்ஸ்ப்ருஷ்ட: - என்கையாலே, தங்களை யின்னாரென்று அறியாமைக்கும், கண்டால் ஸயப்படுகைக்காகவுமவர்களும் யஜ்ஞநம் பண்ணிவருகிறாப்போலே யிருக்கிறது. வ்ருக்ஷாஸாவி

---

† நலிகிறதற்கு - பாதிக்கிறதற்கு. § இனியாரைப்போலே - ஸ்நேஹிதர்போலே. ∴ இன்னுப்பு - பாதை.

நிஸ்ருதः - என்கையாலே, அவர்கள் வழிப்போகிறவர்களை வருந் தனை யும் மரத்தடிகளிலே பதிகிடந்து அவர்கள் அணுகவந்தவாறே புறப்படுமாப்போலே யிருக்கிறது, நிஶாஸஜவஶீதாயா:-என்கை யாலே, அவர்கள் கைகழியப்போகாமே துவக்கும்படி ¶ பண்டுகண் டறியுமாப்போலேயிருந்து, உம்முடைய ஊர்சொல்லீர் பேர்சொல் லீர் என்றாற்போலே, முகமறிவுசொல்லியுகப்பிக்குமாப்போலே யிரு க்கிறது. வாதி-என்கையாலே, காயமும் கைபுகுருந்தனையு மவர்கள் நின்றவிடத்திலே நில்லாதேபாருபாரகென்று ஸஞ்சரிக்குமாப்போலே யிருக்கிறது. வாயு:-என்கையாலே, யாரேனுந்தொடர்ந்து பிடிக்கப் புக்கால் உடம்போடேம்பு தாக்காநிற்கச்செய்தேயும், கைக்குப்பிடி கொடாதே யிருக்கும்படியைச் சொல்லுகிறது. ஶரீராபஹாரः என் கையாலே, மேலெழுந்த கீழ்ச்சீரையன்றியிலே உள்ளுள்ளதடைய அபஹரிக்கும்படி சொல்லுகிறது. க௰.

தாத்பர்யம்.

காற்று, தாமரைத் தாதுகளோடே கலந்து மரத்தினிழலில் மெ ள்ள மெள்ள வெளிப்புறப்பட்டு வீசுகிறபடியால், குளிர்ச்சியையும், வாஸனையையும், மாந்த்யத்தையு முடையதாய், ஸீதையினுடைய மூச்சுக்காற்றை ஸ்மரிப்பித்துக்கொண்டு, திருடர்போலே என்னு டைய ஸமஸ்தகரணங்களையும் அபஹரிக்கிறது. என்று பம்பாதீரத் தில் ஸ்ரீராமன் லக்ஷ்மணரோடு சொல்லுகிறார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

கிஷ்கிந்தாகாண்டம் - ௨௪ - ம் ஸர்க்கம் - ௩௧ - ம் ஶ்லோகம்.

௨௦.— க்ஷ்வேதேயஶ்சாப்ரமேயஶ்ச ஜிதேந்த்ரியஶ்சோத்தமதார்மிகஶ்ச ।
அக்ஷய்யகீர்த்திஶ்ச விசக்ஷணஶ்ச க்ஷிதிக்ஷமாவாந்க்ஷதஜோபமாக்ஷ ॥

அர்த்தம். க்ஷதஜோபமாக்ஷ - ரக்தம்போல் சிவந்தகண்களையு டைய ஸ்ரீராமனே! த்வம் - நீர், க்ஷ்வேதேயஶ்ச - அளவிடத்தகாதவ ராயும், அப்ரமேயஶ்ச - கிட்டவொண்ணாதவராயும், ஜிதேந்த்ரியஶ்ச - வசீகரிக்கப்பட்ட இந்த்ரியங்களையுடையவராயும், உத்தமதார்மிகஶ்ச - ச்ரேஷ்டமான தர்மத்தையுடையவராயும், அக்ஷய்யகீர்த்திஶ்ச-நாசமில் லாதயசஸ்ஸையுடையவராயும், விசக்ஷணஶ்ச-ஸமர்த்தராயும், க்ஷிதி க்ஷமாவாந்- பூமியைப்போல பொறுமையுடையவராயும் இருக்கிறீர்.

---

¶ பண்டு - முன்னே.

ஸ்ய, அவதாரிகை, "ததஶ் ஶரேணாபிஹதோ ராமேண ரணகர்கஶ: | பபாத ஸஹஸா வாலீ நிக்ருத்த இவ பாதப:" என்கிறபடியே, பெருமாள் திருக்கையி லம்பாலே நினைவன்றியிலே ♆மறுபாடுருவ வேவுண்டுதரைப்பட்ட வாலியானவன், கூவிதனாய், "ஜாநே பாபஸமாசாரம் த்ருணை: கூபமிவாவ்ருதம் | ஸதாம் வேஷதரம் பாபம் ப்ரச்சந்நமிவ பாவகம்" என்று-கிட்டினாரை விழப்பண்ணுகைக்குப் புல்மூடுகிணறாயிருந்தீர். அணுகினாரை முடிக்கைக்குப் பொடி மூடுதணலாயிருந்தீர். இப்படி ப்ரச்சந்நபாவரான நீர், பரமபாவநமாய் ஜகதாஹ்லாதகரமான இக்ஷ்வாகுவம்ஶத்தையென்செய்யக்கட்டியுடுத்தீரென்றுதொடங்கி, "விஷயே வா புரே வா தே யதா நாபகரோம்யஹம்" என்று-உம்மோடெங்களுக்குக் ⁂காணித்தாயம்,பூமித்தாயமில்லை; ♀எல்லைமயக்கமில்லை; △மந்திரவழக்காட்டமில்லை; ÷வான்பகை,வழிப்பகையில்லை;ஜாதிப்பகை, குடிப்பகையில்லை; ‡பசுமறித்தல், ⊛நிரை சாய்த்தல்செய்ததில்லை; ஊர்ப் ⚘பிணக்கு,நீர்ப்பிணக்கில்லை; பெண்பிணக்கு மண்பிணக்கு மில்லை; "நத்வாம் ப்ரதிஜாநேஹம் கஷ்டாந்நாம் ஹம்ஸ்யகில்பிஷம்" என்று-நான்தானும்மையின்னாரென்றறியேன்; இப்படியிருக்க,நிரபராதரானநாங்களிருக்கிறவிடத்திலேநீர்தாமே *யிடறிக்கொண்டுவந்து என்செய்யக் கொன்றீர். "ஸாதிஹாப்ரதியுத்த்யந்தம் ஸுக்ரீவேண ஸமாகத: | யதி ஹி ப்ரதிஸ்ந க்ருத்யம் கர்மஸமாசர:" என்று-உம்மோடே பொரவந்தவனல்ல, வேறொருவனோடே பொருகிறவன். இப்படியிருக்கிற வென்னைச் சடுதியிலேபுகுந்து கொன்று கொடுந்தொழில் செய்தீர். "வயம் வநசரா ராம ம்ருகா மூலபலாஶநா: | ஏஷா ப்ரக்ருதிரஸ்மாகம் புருஷஸ்த்வம் நரேஶ்வர:" என்று-நாங்கள் காடர்,

---

♆மறுபாடுருவ - பின்னே பொத்துக்கொண்டு போம்படி. ⁂ தாயம் - பங்கு. ♀ எல்லைமயக்கம்-ஹத்துநிமித்தமானகலக்கம். △ மந்திரவழக்காட்டம் - வீட்டுச்சண்டை. ÷ வான்பகை - நெடுநாளையத்வேஷம். ‡ பசுமறித்தல்- பசுக்களைக்காவலில் வைத்தல். ⊛ நிரைசாய்த்தல் - பசுக்கூட்டங்களை திருப்பிக்கொண்டு போதல். ⚘ பிணக்கு - விவாதம். * இடறிக்கொண்டு - கால்பொறுண்டிக்கொண்டு.

நீங்கள் நாடர்; நாங்கள் ம்ருகங்கள், நீங்கள் மநுஷ்யர்; நாங்கள் தின்பது காயுங்கிழங்கும், நீங்கள் தின்பது செந்நெற்சோறு; நாங்கள் குடிமக்கள், நீங்கள் ராஜாக்கள் - என்றும், "அயோக்யம் வஹ்னிஸேவா ... ... ... ... ... ..." என்று - வேட்டையாட வந்தீராகில், கலைத்தோல் புலித்தோல்போலே யெங்கள்தோல் யஜ்ஞாக்களுக்⊕குறுப்புத்தோலுக்குறுப்பாகிறதல்ல; எங்களுடைய ... ... கள், சவரிசாமரங்கள் போலவும், யானைக்கொம்பு, புலி ✠யுகிர்போலவும், விநியோகயோக்யமுமல்ல; எங்களுடையமாம்ஸம், முட்பன்றி மானுடம்பு முசலாமையிவற்றின் மாம்ஸங்கள்போலே போஜ்யங்களல்ல; நிஷித்தம். "ராஜ ... ... ... ... ... ... ..." என்று - ராஜவயாதிகள் பண்ணினார்க்கு நரகமேகாணுங்கதி என்றாற்போலே, இப்புடைகளிலே ஒருகோடி வார்த்தைகளைச்சொல்லி, "... ... ... ... ... ... ..." என்று - இப்படிப் பாராமல் சொல்லப்பட்ட பெருமாளும், நீயொருவிவேகியாய் வெளிக வார்த்தைமறிகிறாயில்லை; ஒளகிகமான ⁂வழக்குமறிகிறாயில்லை. உன்னறிவு கேட்டால் ந்யாயாநுஷ்டாநம்பண்ணின நம்மைப் பழிக்கிறாயித்தனையிறே. காணித்தாயம் பூமித்தாயமில்லை யென்றாய்; "... ... ... ..." என்று - மலைமுங்கில்களோடு சிறுகாட்டோடு பெருங்காட்டோடு வாசியற இந்த ... யுடைய எங்களதன்றோ? "... ... ..." என்று - எங்கள்காணி யூராகிறது இதுவன்றோ? எல்லைமயக்கமில்லை மந்திர வழக்காட்ட மில்லையென்றாய்; "... ... ... ..." என்று - ... ... ராஜரோடே ஸக்யம் பண்ணினோம். ஆனபின்பு, "... ... ..." என்னும்படி, எல்லைமாறாட்டமாத்திரமின்றிக்கே, நேராக ராஜ்யத்தைப்பறித்தும் பரிகரத்தைநாலுபேரோ

⊕ உறுப்பு-யோக்யம். ✠ உகிர்-நகம். ⁂ வழக்கு-ந்யாயம்.

ழியச்சேர்த்துக்கொண்டும் செய்தாய். வான்பகை வழிப்பகை யில்லை யென்றாய்; "யதாவத்தாஸ்வாஸயந்நுக்தோ நாபிஷிக்தேந" என்று-அவன் காலிலேகுனிந்தவளவிலும் ஸஹிக்கமாட்டாதே, "வத்யேனைகேநவா ரணே । தஸ்மாத் ஏவ பாப்யவாயீ" என்று-ஒற்றையுடையோடே ஓட அடித்தியல்லையோ? ஜ்ஞாதிப்பகை குடிப்பகையில்லையென்றாய்; "ஸ்வயம் ஹ்ருத்வா ஸதாராணாம்" என்று-நீயேசொன்னாயே? அப்படிக்கொத்த தம்பியோடே வெறுத்தியல்லையோ? பசுமறித்தல் நிரைசாய்த்தல் செய்ததில்லை; ஊர்ப்பிணக்கு நீர்ப்பிணக்கில்லையென்றாய்; அவன் க்ருஷிகோரக்ஷணவாணிஜ்ய ஸேவத்தாலே ஸம்பாதிக்கிற ஸர்வஸ்வமும், பட்டமாக எழுகிற குடிக்காடுகளும் குளங்களும் வாங்கிக்கொண்டாயல்லையோ? பெண்பிணக்கு மண்பிணக்கு மில்லையென்றாய்; "ஹாதவ்யா தவ்யஸி ஹாயயா யாம்" என்று - ஸ்த்ரீ ஹரணமும் க்ஷேத்ரஹரணமும் பண்ணிற்றில்லையோ? நான்தானும்மை யின்றொன்றறியேன்; இப்படியிருக்க நிரபராதரான எங்களை யிருந்தவிடத்திலே நீர் தாமே இடறிக்கொண்டுவந்து என்செய்யக் கொன்றீரென்றாய்! "ராஜபிர்த்ருதத்தண்டாஸ்து க்ருத்வா பாபாநி மாநவா: । நிர்மலா: ஸ்வர்க்கமாயாந்தி ஸந்த: ஸுக்ருதிநோ யதா" என்றும் — "ஸ்வாஜ்ஞயா ராஜா திக்ருதா ஜ்ஞம் ஸ்வயம் ப்ரஸ்ருதேவ ரக்ஷிதவ்யா" என்றும்-நாங்கள் ராஜாஹ தனுடையவன் நிக்ரஹ அதிகாரிகளாய் துஷ்ட நிக்ரஹம்பண்ணித்திரிகிறவர்கள். நீகுற்றஞ்செய்தவாறே நீயிருந்தவிடந்தேடி வந்துன்னை தண்டித்தோம். உம்மோடே பொரவந்தவனல்ல வேறொருவனோடே பொருகிறவன் இப்படியிருக்கிறவென்னைக் கொன்றீரென்றாய்; "வத்யநிவிஷ்டானாம் ப்ராவிந்த ஷோஷோந்தவிஷ்யதே । ஸ்வயம் ப்ரவிசதியம்ப்ரவாயஜ்ஞாஹாவா ஸ்ரோமஹ்யவி" நம்மோடே பொராதொழியவுமாம், கெட்டோடவுமாம், உன்னைக்கொன்றாலொருதோஷமுமில்லை. நீயோ ஒருகுரங்கன்றோ? ராஜாக்கள் சொல்லுமாப்போலே சொன்னாய். நாங்கள் காடர், நீங்கள் நாடர், நாங்கள் ம்ருகங்கள், நீங்கள் க்ஷேத்ரர்கள், நாங்

லுங்கோள். அன்றியிலே, * கூ. (ஜ்யோதிஷே) என்று-வாதவாதி யாய், "தஸ்மிந்வாதாத்யேநஃ" என்றும் - "காலாய்" என்றுஞ் சொல்லுகிறபடியே, ஶத்ருக்களுக்கு நாஶகராய், ஶரணாகத ருக்கு ஶுஶ்ரூஷகரா யிருக்குமவரென்றுமாம்.

அழகியது ; நீதானே ஜ்யோதிஷே-என்று-அவர்பெருமையைச் சொன்னாயிறே! அப்படிக்கு, "செல்வர் பெரியர் சிறுமானிடவர்நாம்" என்றும்-"அவனெவ்விடத்தான் யானார்" என்றும்-வஸ்துத்துக்குப் பரமாணுபோலே இருக்கிற நாம் அவ்வஸ்துவை அணுகவும்ஶரணவ ரணம்பண்ணவும் போமோவென்னில் ; *க. (ஸர்வலோக ஶர ண்யாய)பெருமாள் நீர்மைக்காகாதாருண்டோ? *உ.(ஸர்வலோக ஶரண்யாய)* லோகஸ்ஸ்ருஷ்டிபோலே அந்த ஸர்வலோகத்திலே நானுமொருவனன்றோ? *ங. (ஸர்வலோகஶரண்யாய) "நீசனே ன்நிறைவொன்றுமிலேனென்கண் பாசம்வைத்தபரஞ்சுடர்ச்சோதி" என்றும்-எத்தனையேனுந் தீரவபராதம்பண்ணினாரையும் அங்கீகரி த்து; இத்தாலே தேஜஸ்விகளா யிருக்கிறவர்க்கு. *ச. (ஸர்வலோக ஶரண்யாய) "ஸர்வலோகைகவீரஸ்ய ஶரணாகதவத்ஸல:" என்று- "ஸஸைந்யவஸ்துஜனம் ஸஜாதீயவஸ்துஷு" என்கிற ஸர்வ லோகத்துக்கும் புகலானவர்க்கு. * ரு. (ஸர்வலோகஶரண்யாய) அவ்வளவேயன்றிக்கே, ஸப்தஸ்வராதிகளோடும், அதல விதல ஸுதல தலாதல ஜ்யோதல ரஸாதல பாதாளங்களோடும்வா சியற வர்த்தமானஸர்வலோகங்களுக்கும் புகலானவர்க்கு. அன்றியிலே, *சு. (ஸர்வலோகஶரண்யாய) என்று - "பொன்னுலகாளீரோ புவ னமுழுதாளீரோ"என்றும்-"புவனியும் விண்ணுலகு மங்காதுஞ்சோ ராமே ஆள்கின்ற" என்றும்-"ஹிரண்மயேபரேலோகே" என்றும்- "அஸ்மின்லோகே ததோலோகே" என்றுஞ் சொல்லுகிறபடியே, உப யவிபூதிக்கும் நிர்வாஹரானவர்க்கு. *எ. (ஸர்வலோகஶரண்யா ய) "ஜநா: க்ரோஶந்தி" போலே, லோகாஶப்தத்தில் ஜநங்களை ரக்ஷிக்கிறதாகவுமாம். அன்றியிலே, *அ. லோகம் என்று-"லோக ஸங்க்ரஹணே" என்று-ஜனவாசியாகவுமாம். கூ.(ஸர்வலோக ஶரண்யாய) ஸர்வவியலோகம். அதாவது-தேவயோநிகளாயும் ஈடு

ஷ்யயோநிகளாயும் ஸ்தாவரயோநிகளாயும், தர்மார்த்திகளாயும் காமார்த்திகளாயும் அநுகூலராயும் ப்ரதிகூலராயும், உத்க்ருஷ்டராயும் அபக்ருஷ்டராயும், இப்படி அநேக விதரானவர்களுக்கெல்லாம் புகலானவரன்றோ?

அவனை இப்படி எங்கே கண்டோமென்னில்; "அபீஷ்டமய ப்ரதாநேந்த்ரோ நாகோ: ப்ராஜாபத்யவதீ வஸிவாதி" என்று-தேவர்களான ப்ரஹ்மாதிகளுக்கு இழந்தபதங்கொடுத்தவர், "விஷ்ணுஶக்தி வரோ தேவ:" என்று-பெருமாளுக்கு நல்லேறுகையாலே தேவனுன நானிழந்த ராஜ்யந்தாராரோ? "ஸுக்ரீவஶ்சைவ தஸ்யாக்ரே ராஜ்யம் ராவண: ப்ரத்யபாதயத்" என்று-திர்யக்குக்களான ஸுக்ரீவாதிகளுக்கு இழந்த ராஜ்யங்கொடுத்தவர், "ஜ்ஞாநேந ஹீந: பஶுபிஸ்ஸமாந:" என்று-அறிவில்லாமையாலே திர்யக்கான நான் இழந்த ராஜ்யந்தாராரோ? "அயோத்யாஸ்தேவீரஹ்ருதே தாயயாவஸம் விரோதிதாந்யா ப்ரவிஷ்டாநி" என்று-மநுஷ்யஶரீரங்களான ஜநஸ்தாநவாஸிகளுக்கிழந்த தேஶங்கொடுத்தவர், மாநுஷ்யங்கொண்டாடி உறவாய் வந்த நானிழந்த தேஶந்தாராரோ? "ஶைஶவாத்ப்ரப்ருதி ஸுஜ்ஜ ப்ரதிவேதேஶ்வகாஸ்து" என்று-ஸ்தாவரமான அஹல்யையைத் தன் ப்ரக்ருதியோடே கூட்டினவர், "பஸ்மந்யவஸ்திதா" என்று-ஸ்தாவர ப்ரதிஷ்டையாக நிற்கிற வென்னை என் ப்ரக்ருதியோடே கூட்டாரோ? "ரக்ஷிதவ்யாஸ்த்வயா ஶஶ்வத் கர்ப்பபூதாஸ்தபோதநா:" என்று-தபோநுஷ்டாநத்தாலே தர்மார்த்திகளான ருஷிகளுக்குப் $புகலானவர், "விபீஷணஸ்து தர்மாத்மா" என்று-எனக்குப் புகலாகாரோ? "ராஜேந்த்ர ராஜ்யமேவத" என்று-ஸத்யமான ராஜ்யத்தை இரந்த அக்ரவர்த்திக்குக் கொடுத்தவர், ராஜ்யகாங்க்ஷியான எனக்குத்தாராரோ? தாரா ருமைகளை விரும்பிக் காமபரவஶரான மஹாராஜர்க்கு தாரங்களைக்கொடுத்தவர், "த்வத்ஸகாஶே ப்ரதாம் ஸ்வதாராம்ஸ்ச" என்று-பிராட்டி பக்கலிலே அநுகம்பை பண்ணின தர்மதாரங்களை யிழந்த வெனக்குத் தாராரோ? "ஹ்ருஷ்டயோகாநநுத்தமாந்" என்றும்-"ஸ்வர்க்கமாரோஹதி" என்றும்-ஜடாயு ஶபர்யாதிகளுக்கு மோக்ஷங்கொடுத்தவர், எனக்கு மோக்ஷந்தாராரோ? "மஹாமதி ப்ராஜ்ஞா நா:"

$ புகலானவர் - ரக்ஷகர்.

என்று-ஸர்வஜ்ஞருமான ருஷிகளுக்குப் புகலானவர், ஸர்வஜ்ஞஸ்ரு ஷ்ட்யாதிகளைப் பண்ணினவெனக்குப் புகலாகாரோ, “ஸ்வயம் நாரதேந விக்ருதம் யோராதம் பந்தும் | தம் நிஹத்ய மஹாபாஹு தத்தாஹஸ்ய தபஸ்வ:” என்றும் -“விதிதாஸ் ஸநாதநே” “ப்ரதிபேதே ஸ்வாஸ்யம்” என்றும் - ப்ரதிகூலனான ஸ்வஜனுக்கு ஸாவஜந்யமான விரோதி ஶரீரத்தையும் போக்கி, ஸ்வதேஶத்தையுங் கொடுத்து, ப்ரதிகூலனான காகத்துக்கு விரோதியைப்போக்கி ஸ்வதேஶத்தைக்கொடுத்தவர், “ப்ராணஸம்ஶ்ரம் ப்ராதக்ஷித:” என்னும்படி ப்ரதிகூலனான வெனக்கு என் தேஶம் தாராரோ? “தவாந்வருணாரஸ்வேப்யஸ்மஹிஷிதயஸந்தா:” என்று-உத்க்ருஷ்டரான தேவர்களுக்குப் புகலானவர் ப்ரபந்நனுகையாலே உத்க்ருஷ்டனான வெனக்குப்புகலாகாரோ? “ஸவிக்ஷ்வப்ரதமிஷ்டம்” என்றும்-“பாஷாண மௌதவ்ய மேஷா பாதஸ்பர்ஶஹத:” என்றும் - ஸ்வக்ருஷ்ங்களான திர்யக் ஸ்தாவரங்களுக்கு ஸ்வநிவர்த்தகரானவர், “ப்ரக்ருத்யா ராக்ஷஸோத்ஸஹ்ய:” என்று-ஸ்வக்ருஷ்டனான எனக்கு ஸ்வநிவர்த்தகராகாரோ? இவ்வுதாஹரணங்களிலே கண்டுகொள்வது.

ஆகிறது, ஆனை அறிவிக்கிறதென்ன; *க. (விபீஷணர்) பராஶர பாராஶர்யாதிவசம்போலே விரோதி விபீஷணனென்றாய், ராவணாதிகளை பயப்படுத்துவேனென்று நினைத்திருங்கோளென்று ஸ்வயஶக்திதானுகிலுமாம். *உ. (விபீஷணர்) “பீஷாஸ்மாத் வாத: பவதே பீஷோதேதி ஸூர்ய:” என்றும்-“பயம் பயாநாம் பீஷணம்” என்றும்-ஸர்வபயஜ்ஞருமாய், ஸ்ரீதாஉபயஜ்ஞருமான பெருமாள் ஸந்நிதானத்துக்கும்வேறொருவர்க்கும் பயப்படவேணுமோ? *ங. (விபீஷணர்) ஆணையுஞ்செங்கோலும் நடத்துகைக்கு, ‘மஹாபாணி:’ என்று-ஒருதடிகாரனென்றுசொல்லுங்கோள்-அன்றிக்கே, *ச. (விபீஷணர்) என்று-ஸர்வஜ்ஞனென்று அறிவிக்கமாட்டீர்கோளாகில், “உத்யாத மஹாபாணி:” என்று-கையுந்தடியுமாயொருத்தன் பயப்படும்படி நின்றானென்றாகிலுஞ் சொல்லுங்கோள். §நிதாநஜ்ஞனை பிஷக்கின்முன் வ்யாதிதன் தான்பண்ணின அபத்யங்களைச்சொல்லி அதுக்கீடாக பரிஹரித்துக் கொள்ளுமாப்போலே, “நிவர்த்த

---

§ நிதாநஜ்ஞனை - ரோகஸ்வரூபமறிந்தவனை.

ணம் ஹேஷஜம் ஹிதம்" என்றும்-"மருத்துவனாய் நின்றமாமணிவண்ணன்" என்றும்-பேசப்படுகிற ஸர்வஜ்ஞன்முன்பு ஸம்ஸாரிஸ்வதோஷத்தை முன்னிட்டு ரக்ஷித்துக்கொள்ளு மத்தனைபோக்கி, நன்மையை முன்னிடுகைக்கொன்றுமில்லையிறே. ஆகையாலே, *ரு.(விபீஷணம்) "நநிந்திதம் கர்மதத் அஸ்தி லோகே ஸஹஸ்ரஶோ யந்நமயாவ்யதாயி" என்றும்-"கொன்றேன்பல்லுயிரைக்குறிக்கோளொன்றிலாமையினால்" என்றும்- என்னுடைய பூர்வவ்ருத்தஜ்ஞாநங்களிவையென்னுங்கோள். *சு.(விபீஷணம்)"ஸாம்ப்ருஸம்வ்ருஸ நம்வ்ருத்தம் ஸ்ராதரம்யஃபரிதத்ஜேஷ" என்றும் "உவர்த்தநீர்போல வென்றனுற்றவர்க் கொன்றுமலன்" என்றும், ஸோதரனான ராவண னகப்பட வெருவும்படி பண்ணின தோஷதர்ஷி னென்னுங்கோள்.

உன்னுடைய வ்ருத்தஜ்ஞாநங்களிவையாகில் பெருமாள் திருமுன்பே யறிவிக்கும்படி என்னென்னில்; *க.(உபஸ்திதம்) "தர்ஶாவாஸோவிஸர்ஜ்ஜ்யாஸ்ரீக்ருதஸ்தோநாஸ்திகஃ பர்ஸா|ஸரோஶ்ரயேதாதிதேவம் ஶ்ரயஶரணம் யதி| நிவேதிதாஷம் விபீதம்ஜதேர்ம" என்கிறபடியே முன்னப்படியேயாகிலும், ஸர்வதாஶ்ரயணம் பண்ணினால் நிவேதிதாஷனாயிற்றிருப்பது; அப்படிக்கு, * தூயோமாய்வந்துநின்றோமென்றுஞ் சொல்லுங்கோள். *உ.(விபீஷணோபஸ்திதம்) முன்னேவந்துநின்றேனென்னுங்கோள். நாலடியும்வந்துபெருமாளுக்கு உபகரித்தேனென்றுசொல்லுங்கோள். வாராதேஜலதியிலேயிருந்து ஶரணமென்றேனாகில் கடற்கரை மடுவின்கரைப்பட்டதுபட்டு அரைகுலையத்தலைகுலைய அவர்வந்து விழவேண்டாவோ? *ந.(உபஸ்திதம்) எல்லைக்குள்ளேவந்தபின்பு "ஸ்திதோஸ்மி தவஸந்நிதௌ" என்னும் படிநிலைபெற்றேன். *ச.(உபஸ்திதம் நிவேதயத) "என்னிலைமையுரையாய்" என்கிறபடியே, என்னுடைய வ்யவஸ்திதியை அறிவியுங்கோள். *ரு. (உபஸ்திதம் நிவேதயத) மதியாத்தனமாக வடுத்துக் கொடுபுகுராதே திருவுள்ளம் பார்த்துப்புகுரவேணுமே என்று உங்களருகேநிற்கிற நிலையைச் சொல்லுங்கோள். *சு.(உபஸ்திதம் நிவேதயத)எதிர்சூழல் புக்குத்திரியாதபடி $ உடுத்தணித்தாக வந்தபடி சொல்லுங்

$ உடுத்தணிக்காக - அசேதனம்போல் பாதந்திரனாய்.

கோள். *எ. (உபாஸ்ரிதம் நிவேதயத) தக்தாமைத்தேடிக்கொடுக்கச் செய்தேயும், "ஜ்ஞாதிப்ரஸித்த்யா த்யக்தஸ்வதாரந்ஸிவராஸ்த்தம்" என்றும்-"ஓடினேனோடி" என்றும்-பிறகிட்டுப்போமவர்களை அறிவித்த நீங்கள் இருந்தவிடந்தேடி நானேவந்த வென்னை அறிவிக்கலாகாதே. *அ. (விபீஷணோபாஸ்ரிதம் நிவேதயத) ராவணன் தம்பியாய் நடுவேயோரிடத்திலே யிருந்து ஆள்வரவிட்டு ஸாந்நித்யம்பண்ணிச் செய்யலாம்படிக்குப் பிடியாள்கொண்டு பின்னைவருகையன்றிக்கே, "உன்னையெய்தியென் தீவினைகள் தீர்ந்தேன்" என்றும் - "பொன்னடியை யடைந்துய்ந்தேன்" என்றும்-"ஆலின்மேலாலமர்ந்தா னடியிணைகள்" என்றும் சொல்லுகிறபடியே, ஸகலம் பின்னே பட்டதும் படப்புகுந்துகொண்டு நின்ற நிலையை விண்ணப்பஞ்செய்யுங்கோள்.

ஆகவித்தால் ஸமர்த்த ஸமாஸ்ரயணம் பண்ணுவார்க்கு ஸாதகர் முன்னிலையாகப் பெறவேணுமென்னும் அர்த்தஞ்சொல்லிற்றாயிற்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்,

---

யுத்தகாண்டம். கஎ-ம் ஸர்க்கம் - கசூ-ம் ஸ்லோகம்.

---

அவதாரிகை. மஹாராஜர், பெருமாள் பக்கல் பரிவாலே ஸ்ரீ விபீஷணாழ்வானுடைய அநுகூல பாஷணங்களை விப்ரலம்பமென்று புத்திபண்ணி தந்நிரஸநார்த்தமாகப் பெரியபதற்றத்தோடே கூட பெருமாளுக்கு ஒருவார்த்தை விண்ணப்பம்செய்தாரென்கிறது.

௨௦. ஏதத்து வசநம் ஸ்ருத்வா ஸுக்ரீவோ லகுவிக்ரம: |
லக்ஷ்மணஸ்யாக்ரதோ ராமம் ஸம்ரப்தமிதமப்ரவீத் ||சக||

அர்த்தம். ஸுக்ரீவ: - ஸுக்ரீவன், ஏதத் - இந்த, வசநம் - சொல்லை, ஸ்ருத்வா-கேட்டவுடனே, லகுவிக்ரம: - சீக்கிரமாகபராக்ரமித்தவராய், லக்ஷ்மணஸ்ய - லக்ஷ்மணனுடைய, அக்ரத: - எதிரில், ராமம் - ஸ்ரீராமனைக்குறித்து, ஸம்ரப்தம் - பரபரப்புடன், இதம் - இந்தவார்த்தையை, அப்ரவீத் - சொன்னார்.

வ்யா. (ஏதத்துவசநம்ஸ்ருத்வா) "ராவணம்ஸரணம்கத:" என்கிற அவ்வார்த்தையைக்கேட்டதற்குப் பின்பு மஹாராஜர்வேறு

பட்டரென்கிறது, "விஜயிஷ்யா ஈஹ ஹேதுநா" என்கிறவிடத்தில் ராவணனுமல்லன் விபீஷணனுமல்லன், ஸத்ருவென்று நிர்ணயித்தபோது சுச்சத்தாற் பிறந்த விக்ருதிபோலன்றிறே; இதுதான் ப்ரியகாரியத்தை மறைத்துப் பெருமாள்தன்னை அநுகூலனென்று ஸ்வீகரிக்கும் வார்த்தையைச்சொல்லிஅம்முகத்தாலே நலியவந்தானென்றுபிறந்த விக்ருதியிறே. (ஏவம் விக்ருதி) இவன் ஸரணாகதிபெருமாள் செவிப்படுமாகில் பின்பு மீட்கவொண்ணாது; ஆமந்த்ர ஸ்வத்துக்கு முற்படவேணுமென்று சடக்கெனப் போனரென்கிறது. (லக்ஷ்மண ஸ்ரீதரஸ்ய) தம்மோபாதி பரிவரான இளையபெருமாள் ஸந்நிதியிலே. அவரும் அத்யாத்மஸங்கியானவராகையாலே அவரையுங் கூட்டிக்கொள்ளுகிறார். "ஹஸதஸ்யேஹ தோஷம் நாத ஸம்ஸ்ய ஸ்ய இதி" என்றவரிறே. (ராமம்) "ராவணம் ஸரணம் கத:" என்கிற வாக்ய ஸ்ரவணத்தாலுண்டான ஸந்தோஷத்தாலே அவிசாரராயிருக்கிறவரை. (ஸம்ரப்த) பெருமாளுக்கு மிவர்போகிறவழியை அநுஸ்யூதமாக்கரிக்கவொணாதபடி @அடர்த்துக்கொண்டு. அதாகிறது-ராஜ்யம் விட்டுப்போந்து §குவால்நாளுண்டோ? ராஜநீதியைமறந்ததோ? இவ்விடம் ஷாரமன்றோ? ராவணன்செய்யு மநீதிகளறியவில்லையோ? ஒருத்தன் சரணமென்னுங் காட்டில் இவற்றைமறந்ததோ? என்றாற்போலே சொல்லுகை. (ஜகாத வ்ஸ்ரீ:) வந்தவன் ராக்ஷஸேந்த்ரனாயிருந்தான்; அநுகூல பாஷணமும் பண்ணினான்; இவனாராயிருக்கிறானோவென்று ஸந்தேஹித்துப் பெருமாளுக்கு இவன்வரவு சொல்லுகையன்றிக்கே, ஸத்ருவென்றே நிஸ்சயித்து தகவ்வரிஹாரத்துக்காகச் செய்யவேண்டும் ஹிதத்தைச்சொன்னார். பெரியபெருமாளைப் பேரிட்டு இளையபெருமாளைநோக்கி அடர்த்து வார்த்தை சொன்னாற்போலே சொன்னரென்னவுமாம்.

தாத்பர்யம்....சுக்ரீவன், விபீஷணனுடைய இச்சொல்லைக்கேட்டு சீக்கிரம் எழுந்து ஸ்ரீராமலக்ஷ்மணர்களிடம் சென்று பெருமாளைப் பார்த்து பரபரப்புடன் இந்தவார்த்தை சொன்னார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



---

@ அடர்த்துக்கொண்டு - மேல்விழுந்து. § குவால்நாளுண்டோ - அநேகநாளாயிற்றோ.

யுத்தகாண்டம், கஎ-ம் ஸர்க்கம், கஅ-ம் ஶ்லோகம்.

ஸுக்ரீவனுக்கு. இவர்களால் நம்மை யொன்றும் செய்யவொண்ணுதபடி தேவர் மந்த்ராதிகளிலே ப்ரவர்த்திக்கவேணுமென்று சொல்லி அவ்வளவிலே நில்லாத பரிவாலே மங்களாஶாஸநம் பண்ணுகிறார்.

மந்த்ரே வ்யூஹே நயே சாரே யுக்தோ பவிதுமர்ஹஸி ।
வாநராணாஞ் ச பத்ரம் தே பரேஷாஞ் ச பரந்தப ॥ ௨௨

அர்த்தம். பரந்தப - சத்ருக்களைத் தபிப்பிக்கிறவரே! மந்த்ரே - யோசனையிலும், வ்யூஹே - ஸேனாவிந்யாஸத்திலும், நயே - உபாயத்திலும், சாரே - தூதிலும், யுக்தஃ - பராக்கில்லாதவராக, பவிதும் - ஆகுகைக்கு, அர்ஹஸி - யோக்யராகிறீர். தே - உமக்கும், வாநராணாஞ் - வானரர்களுக்கும், பரேஷாஞ் - இதரர்களுக்கும், பத்ரம் - மங்களமுண்டாகட்டும்.

வ்யா. (மந்த்ரே) ந்யாயவித்துக்களான ஸசிவரோடே ரஹஸ்ய காரியம் நிரூபிக்கை. (வ்யூஹே) யுத்தயோக்யமான ஸேனைகளை நிலையிலேநிறுத்துகை. (நயே) ஸாமாதிஉபாயத்தாலே காரியம் நடத்துகை. (சாரே) பராபிப்ராய பரிஜ்ஞாநார்த்தமாக நிபுணரான சாரரைஏவுகை. (யுக்தோபவிதுமர்ஹஸி) முன்போலே நமக்கெதிராரென்று இருக்கவொண்ணுது; ராஜ்யக்ருத்யங்களிலே அவஹிதராகையோக்யம். தைவபௌருஷங்களிலே பௌருஷத்தைப்ரதானத்தாலே சொல்லி, அதுக்கு தைவஸாஹாயத்தை ஆஶாஸிக்கிறார் உத்தரார்த்தத்தாலே. (பத்ரந்தே) ஸர்வலோக நாயகரான தேவர்க்கு மங்களமுண்டாகவேண்டும். (வாநராணாஞ்)"ராமவாக்யே வ்யவஸ்தாநாம் வாநராணாம் ச தேஷாம்" என்றிருக்கும்வாநரஶோர்யாதிகளுக்கும். (பரேஷாஞ்) அல்லாத ருக்ஷாதிகளுக்கும் மங்களம் முண்டாகவேணும். (வாநராணாம் பரேஷாஞ் விஷயே மந்த்ரவ்யூஹநயசாரே யுக்தோபவிதுமர்ஹஸி) வாநரங்களுடையவும் ஶத்ருக்களுடையவும் விஷயமாக மந்த்ராதிகளிலே அவஹிதராகவேணும். (பத்ரந்தே) இவரிப்போது பத்ரமாகநினைக்கிறது ஶரணமென்றவனைக் கைக்

கொள்ளாதொழிகை. (வாஜவ) ஶத்ருக்களுடைய ஸேனைக்கூட்டம் மண்ணுண்ணும்படியன்றோ தேவர் வர்த்தாவமிருக்கும்படி. இத்திருநாமம் யதார்த்தமாகவேணும். சஉ.

தாத்பர்யம்.—தேவரீர் முன்போலிருக்கக்கூடாது. தூதனால் சத்ருபலத்தை யறிந்து தன் மந்திரிகளோடு யோசித்து, ஸேனையை வ்யூஹமாய் வைத்து, நாலுஉபாயங்களையும் செலுத்தி, இப்படி ஜாக்ரதையாய் இருக்கவேண்டும். நமக்கெல்லாருக்கும் மங்களமுண்டாகட்டும்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.



யுத்தகாண்டம். கஎ - ம் ஸர்க்கம்-கக - ம் ஶ்லோகம்.



அவதாரிகை. சிலர் ஶரணாகதராய் வந்தார்களாகில் நீரிப்படி ஸந்தேஹிக்க வுமக்கு வந்ததென்னென்ன; இவர்களாகதரும் விஶ்வஸிக்கவொண்ணாதென்கிறார்.

கக. ஸுதய த்ர நவதா ஹ்யேதே ராக்ஷஸாஃ காமரூபிணஃ |
ஶூராஶ்ச நிக்ருதிஜ்ஞாஶ்ச தேஷு ஜாது நவிஶ்வஸேத்|| சக.

ஹ்யேதே - இந்த, ராக்ஷஸாஃ-அரக்கர்கள், ஸுதய த்ர நவதாஃ - மறைந்து நடக்கிறவர்களாயும், காமரூபிணஃ - இஷ்டமான ரூபத்தையுடையவர்களாயும், ஶூராஶ்ச-பராக்ரமிகளாயும், நிக்ருதிஜ்ஞாஶ்ச-வஞ்சகமான உபாயத்தை யறிந்தவர்களாயும், ஹி - இருக்கிறார்களன்றோ? தேஷு - அவர்களிடத்தில், ஜாது - ஒருகாலும், நவிஶ்வஸேத்-நம்பிக்கை செய்யக்கூடாது.

வ்யா. (ஹ்யேதேஉ ஸுதய த்ர நவதாஃ) ஹ்யேதே-என்று ப்ரத்யக்ஷ விஷயமானவர்களை ஸுதய த்ர நவதாஃ-என்கிறபடி யென்னென்னில்; இவர்கள் காண்கிறவளவல்லர்; ‖ பதிபடை யுண்டென்னும் நினைவாலே. (ஹ்யேதே) இவர்களுடைய வாகாரமே அவிஶ்வஸநீயதையைச் சொல்லித்தாரா நின்றதென்கை. இவர்கள் நாலேந்துபேர்வந்து நம்மைச் செய்வதென்னென்னில்; (ஶூராஶ்ச நிக்ருதிஜ்ஞாஶ்ச) நேர்கொடு நேர் நலியமாட்டார்களாகிலும் வஞ்சிக்க விரகறிவார்கள். உமக்கு செவ்வையிலுண்டான வலியோமமித்தனையும் வஞ்சனத்தி

‖ பதிபடை - மறைந்தஸேனை.

லே உண்டு காணுமவர்களுக்கு-(த்வேஷ்யாஜாதாந்நவிஶ்வஸேத்) ஆன பின்பு, ஆயிரம் ப்ரவ்ருத்திபண்ணினாலு மவர்கள்பக்கல் நிரபேக்ஷனா யிருக்குமவன் விஶ்வஸிப்பானல்லன். ௪௩.

தாத்பர்யம்-இந்த ராக்ஷஸர்கள், தங்களுக்கிஷ்டமான சரீரத்தை எடுத்துக்கொண்டு மறைந்திருந்து பிறரை வஞ்சிக்கச் சூரர்களாகை யாலே இவர்களிடத்தில் நம்பிக்கை வைக்கக்கூடாது.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம். ௧௭ - ம் ஸர்க்கம் ௨௦ - ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. அநந்தரமனல்லனாகில் இவனாராய்வந்தான்; வந்தவன்தான், அஹிதரான நம்பக்கல் செய்யுங்கார்யமென்னென்னில்; அவற்றைச்சொல்லுகிறது. ப்ரணிதிரித்யாதியாலே.

௨௦. ப்ரணிதீ ராக்ஷஸேந்த்ரஸ்ய ராவணஸ்ய பவேதயம் |
அநுப்ரவிஶ்ய ஸோऽஸ்மாஸு பேதம் குர்யாந்ந ஸம்ஶய: || ௪௪

அர்த்தம். அயம் - இவன், ராக்ஷஸேந்த்ரஸ்ய - அரக்கர்களுக்கு அரசனான, ராவணஸ்ய - ராவணனுடைய, ப்ரணிதி: - *கூடசாரியாக, பவேத் - ஆவான். ஸ: - அப்படிப்பட்டவன், அஸ்மாஸு - நம்மிடத்தில், அநுப்ரவிஶ்ய - புகுந்து, பேதம் - நம்மில் ஒருவர்க்கொருவரில்த்வேஷம்வரும்படியான உபாயத்தை, குர்யாத் - பண்ணுவன். நஸம்ஶய: - ஸந்தேகமில்லை.

வ்யா. (அயம் ப்ரணிதிர்பவேத்) நீர்ஶரணாகதனாக நினைக்கிறவிவன், ராவணன் வரவிட்டானொருத்தனாகக்கடவன். ஒருத்தனாகில் முதலிலேதன்னை அமைத்துக்கொண்டு புகுருமதொழிய, "விபீஷண இதி ஶ்ருத:" என்றும்-"விபீஷணோபஸ்தித:" என்றும்-"ராகவம்ஶரணம்கத:" என்றும்-தன்னை வெளியிட்டுக்கொண்டு ஶரணம்புகுருமோ? ஶரணமென்று புகுந்தார்சிலர் ஹந்தர்செய்யுங்கார்யத்தைச் செய்வார்களோ வென்னில், (ராக்ஷஸேந்த்ரஸ்ய ராவணஸ்ய) "பாபஸ்ய ந்யூநஸ்ய ந்யக்க்ருதஸ்ய" என்கிறபடியே, தான் வேறொருத்தனாயிருக்க வேறொருத்தனாகச்சொல்லி, கார்ய கா

* கூடாசாரி - மறைந்துவந்ததூதன்.

ஷத்திலே வேறொருவனாகச் செல்லும் தௌஷ்ட்யத்துக்கு நிர்வாஹகனான ராவணன் மதித்து வரவிட்டானாகக்கடவன், ஆனால், தான் புகுந்து செய்வதென்னென்னில்; (வேஷாந்தரஸ்தோ அநுப்ரவிஶ்ய)நமக்கு ப்ரதிகூலனானவன் நம்பக்கலிலே அநுகூல வேஷத்தோடே ப்ரவேசித்து. (ஹேதும் க்ஷாத்ரஜ) “அநக்ஷம் தா:ஸ்வம் ஸாத்வம்வநள” என்றிருக்கும் தேவரையும் என்னையும் எதிரிகளாம்படி பண்ணும். (நஸம்ஶய:) ராவணஸம்பந்தத்தாலே ஶத்ருவாக நினைக்கும்படியிருக்கிறவிவன் ஶரணம்புகுந்தான். ஆனால் அநுகூலனோ ப்ரதிகூலனோ வென்று ஸம்ஶயிக்கவன்றோவடுப்பது என்ன; அது வேண்டா; துஷ்ப்ரக்ருதியாகையாலே ஆநுகூல்யம் ஸம்பவியாது; வஞ்சகனாயே வந்தானென்று நிஶ்சிதம். ௪௪.

தாத்பர்யம் - சரணம் புகுந்த விவன், மாயாவிகளுக்குத்தலைவனான ராவணனுஸாரனாலேவப்பட்டு இங்கே வந்தவனாகையால், இவன் நம்ஸைந்யத்தில் நல்லவன்போல் சேர்ந்து; நம்மிலொருவர்க்கொருவரில் த்வேஷத்தை யுண்டுபண்ணி நம்மை உபத்ரவம் செய்வன். இதில் ஸம்சயமில்லை.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், ௧௭-ம் ஸர்க்கம், ௨௧-ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. நாம் ஜாகரூகராயிருக்க நம்பக்கலிலே இவனுக்கு புத்தித்ரோஹம் பண்ணலாயிருக்குமோவென்ன; அதில் அவகாஶம் பெற்றிலனாகில் அநுகூலனென்று நாம் விஶ்வஸிக்குமளவும் நம்மோடே ஒரு நீராகக்கலந்து இடம்பெற்றதொருபோதிலேதானே ப்ரஹரிக்கிலும் ப்ரஹரிக்கும் என்கிறார்.

௨௧. அதவா ஸ்வயமேவைஷ சித்ரமாஸாத்ய புத்திமாந் |
அநுப்ரவிஶ்ய விஶ்வஸ்தே கதாசித் ப்ரஹரேதபி. || ௪௫.

அர்த்தம். அதவா - இல்லாவிட்டால், புத்திமாந் - கூர்மையான புத்தியையுடைய, ஏஷ: - இந்தவிபீஷணன், அநுப்ரவிஶ்ய - புகுந்து, விஶ்வஸ்தே - நம்பிக்கையுடையவனாகப்பண்ணப்பட்டவளவில், ஸ்வயமேவ - தானே, சித்ரம் - அவகாசத்தை, ஆஸாத்ய - அடைந்து, கதாசித் - ஒருகாலத்தில், ப்ரஹரேதபி - அடித்தாலும் அடிப்பன்.

வ்ா. (ஸுயவா) ஹேஷ௦கா்ஸ்ாஸ-என்கிறவக்ஷத்தைவ்யாவதிக்கிறது. (ஸுயடூலெவெஷ:) என்னைக்கொண்டும்மை நலிதல், உம்மைக் கொண்டு என்னை நலிதல் செய்யவிடம் பெற்றிலனாகில், தானே நலியிலும் நலியும். எப்போது இவன் நலிவதென்னில்; (ஸுடிவ்ரவிஸ்ரவிஸ்ருஹ்ஸு) நாம் விஸ்வஸிக்குமளவும் ஸுடிஸுவனாய் நம்மோடே ஒருநீராகக்கலந்து நாம் விஸ்வஸித்தவளவிலே. விஸ்வஸித்தாலும் நஞ்சேர்த்தியிலேயிவனுக்கு நலிய: ஸவகாஸமுண்டோவென்னில்; (ஹிஷ்ரலாஷ்ரு) நாம் விஸ்வஸியாதபோது இவனுக்கிடமன்றிக்கே ஒழியுமித்தனைபோக்கி, விஸ்வஸித்தால் அவனுக்கு நலியஇடமரிதோ? (பெுலிலாநு) இடமில்லாவிடிலும் காணவல்ல பெுலிகூர்மையையுடையனென்கை.ரக்ஷணயத்தில் ஸவஸர வ்ரதீக்ஷரான உமக்குள்ள பெுலியோமத்தளவுண்டு காணும் இவனுக்கு வரஹிம்ஸெயிலே. (ஸுஷாஜிஸ வ்ரஹரேஷவி) இடம்பெற்ற வொருபோதிலே வ்ரஹரிக்கிலும் வ்ரஹரிக்கும். ஸுயவா-இவன் ராவணனுடைய வ்ரணியிலாதுமன்றிக்கே, ராவணன் தான் முன்பு ஸந்யாஸிவேஷங் கொண்டு நலிந்தாற்போலே, ஸரணாமத வேஷத்தைக்கொண்டு நம்மோடே கலந்து, நாம் விஸ்வஸித்தவாறே இடம்பெற்றபோதிலே நலியவநதானாகவுங் கூடுமென்றுமாம். சஞ.

தாத்பர்யம் - இவன் நம்மில் ப்ரவேசித்து, நமக்கனுகூலன்போலிருந்து, நாமிவனை நம்பினபோது தன்னுடைய தீவ்ரபுத்தியால் நம்முடைய துர்ப்பலஸமயத்தை யோசித்துப்பார்த்து, அக்காலத்தில் தானே ஹிம்ஸிக்கலாம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுஜகாண்டம், கஎ - ம் ஸமம், உஉ - ம் ஸ்லோகம்.

ஸவதாஸிகை. நாமெதிரிகள்மேலே எடுத்துவிட்டவளவிலே, அத்தலையில்நின்றும் செவ்வியனாய் வந்தவன் அடியற்று வந்தானாக வேணும்; அவனை ஸ்வீகரிக்கை ராஜநீதியன்றோ? ராஜாக்களாயிருக்கிறவுமக்கு இதறியவேண்டாவோவென்ன; அது நீதியன்றென்கிறார்.

௨௩. மித்ராடவீபலஞ்சைவ மௌலம் ப்ருத்யபலம் ததா |
ஸர்வமேதத்பலம் க்ராஹ்யம் வர்ஜயித்வா த்விஷத்பலம் ॥ ௬௬.

அர்த்தம். த்விஷத்பலம் - சத்ருபலத்தை, வர்ஜயித்வா - விட்டு, மித்ராடவீபலம் - ஸ்நேஹித ஸம்பந்தமான பலமென்ன, காட்டு ஜனங்களுடைய பலமென்ன, மௌலம் - குலபரம்பரையில் வந்த தாஸவர்க்கமென்ன, ததா - அப்படி, ப்ருத்யபலம் - சம்பள ஆட்கள்பலமென்ன, ஏதத் - இந்த, ஸர்வம் - ஸமஸ்தமான, பலம் - பலமானது, க்ராஹ்யம் - எடுத்துக்கொள்ளத்தக்கது,

வ்யா. (மித்ரபலம்) அதாவது-ஸுஹ்ருத்வர்க்கமாயிருக்கை. ததா காமந்தகே-“மௌலஸம்மித்ரஸம்பந்தம் ததாவம்சக்ரமாகதம் | ரக்ஷகம் வ்யஸநேப்யச்ச மித்ரம் ஜ்ஞேயம் ததர்த்தவித்.” (அடவீபலம்) வநப்படை. (மௌலம்) பித்ருபிதாமஹக்ரமாகதமான தாஸவர்க்கம். (ப்ருத்யபலம் ததா) கூலிப்படை. (ஸர்வமேதத்பலம் க்ராஹ்யம்) இந்த வர்க்கத்ரயபலமும் க்ராஹ்யம். (வர்ஜயித்வா த்விஷத்பலம்) சத்ருபலம் க்ராஹ்யமன்று. ததா காமந்தகே-“ அமித்ரமித்ரமேமித்ரம் மித்ராமித்ரஹதஸ்ததா” இத்யாதி. இதுக்கொரு சாஸ்த்ரம் வேணுமோ? அவன்மேலே அம்புபடக்கண்ண நீர் பாயுமிவனையோ? நமக்கு பலமாகக் கொள்ளுவது. ௬௬.

தாத்பர்யம் - ஸ்நேஹிதர்கள், வேடர், தாஸர்கள், கூலியாட்கள், ஆகிற இவர்களுடைய பலத்தை ஸ்வீகரித்து, சத்ருபலத்தை விட வேணும்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

யுத்தகாண்டம், ௧௮-ம் ஸர்க்கம், ௨௩-ம் ச்லோகம்.

அவதாரிகை. வர்ஜயித்வா த்விஷத்பலம்-என்று ஸாமாந்யத்தாலே சநாசிக்கக்கடவோமோ? அங்குத்தை நசையற்றுப் போந்தவன் விச்வஸநீயனன்றோ? ஆனால் அவனை பரிக்ரஹிக்கத்தட்டென்னென்ன; அங்குத்தை நசையற்றுப்போராமைக்கும், அத்தாலே விச்வஸநீயனல்லாமைக்கும் ஹேதுக்களைச் சொல்லுகிறது. வக்ஷ்யத்யா இத்யாதியாலே.

உ௭. வ்யக்த்யாராக்ஷஸோஹ்யேஷ ஸ்ராதா உசித்ரஸ்ய வைவிஹோ|
ஆமதஸ்ஸ்ரீவோ: வக்ஷாக கயஉஷ்லிம்ஸ்ஸ்விஸ்ஸஹோஸ்க்|| சஎ.

அர்த்தம். விஹோ-ஸ்வாமியே! ஏஷஹி-இவன்தான், வ்யக்த்யா-பிறப்பால், ராக்ஷஸோவை-அஸுரனன்று; சுசித்ரஸ்ய-சத்ருவினுடைய, வக்ஷாக - பக்கத்திலிருந்து, ஆமதஸ்ஸ -வந்தவனன்று; சுஷ்லிம்ஸ்-இவனிடத்திலும், கயம்-எப்படி, விஸ்ஸஹோஸ் - நம்பிக்கை செய்யலாம்.

வ்யா. (வ்யக்த்யாராக்ஷஸோஹ்யேஷ:)பிறப்பாலே ராக்ஷஸனென்னுமிடமுமக்குஸம்வ்ருதிவஷ்மே; ஆனால் அவனைசாதிரித்து விஜாதீயரான நம்மைப்பற்ற ஸம்ஹாவனையுண்டோ? (ஹி) ஸம்வ்ருதிவத்தன. (ஸ்ராதா உசித்ரஸ்ய) "ஸ்ராதாஸ்வாஉஷத்ருரா தந:" என்று-நம் ஸத்ருவுக்கு ஸரீரமென்று சொல்லலாம்படி யிருக்கிறஅவனன்றோ? (வை) "ராவணஸ்யாஉநஜோ ஸ்ராதா" என்று-தன்வாயாலே சொல்லுகையாலே-வ்யவிஸமன்றோ? நீரும் ஸ்ராதாவைவிட்டன்றோ நம்மைப்பற்றினதென்ன; (ஆமதஸ்ஸ்ரீவோ: வக்ஷாக) என்னைப்போலே, நிரஸ்னாய் வந்தவனன்றே; அவனோலக்கத்தினின்றும் வந்தவனன்றோ? (விஹோ) முதலிகளென்னு ஆராய்ச்சியைக் கைவிடாதேகொள்ளீர். (கயஉஷ்லிம்ஸ்ஸ்விஸ்ஸஹோஸ்க்) இப்படி அவனை சாதரிக்கைக்கு அனேக ஹேதுக்கள் உண்டாயிருக்க, என்ன ஹேகுவாஹாஸங்கொண்டு இவனை விஸ்வஸிப்பது. சஎ.

தாத்பர்யம் - இந்தவிபீஷணன்; பிறப்பிலோ ராக்ஷஸன்; நமக்கு சத்ருவான ராவணனுக்கு உடன் பிறந்தவன்; வந்ததோ சத்ருஸைந்யத்திலிருந்து; இப்படியிருக்க இவனை எப்படி நம்பலாம். ஸ்வாமி! நீரே யோசித்துப் பாரும்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

யுத்தகாண்டம் - கஎ - ம் ஸர்க்கம், உச -ம் ஸ்லோகம்.

---

அவதாரிகை. அவன் தன்னை பரிஹஸிக்கையாலே நசையற்று ஆர்த்தனாய் ஸரணம்புகுந்து வந்தானென்று விஸ்வஸிக்கத் தட்டென்னென்ன;அந்த வ்யதிவத்தி விவ்ருஹஸ க்ருதை என்னுமிடத்தை - ஸஹேதுகமாகச் சொல்லுகிறார்.

௨௮. ராவணேந ப்ரணிஹிதம் தமவேஹி நிஶாசரம் |
தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே க்ஷமம் க்ஷமவதாம் வர ‖ ௨௮

அர்த்தம். க்ஷமவதாம்வர-யுக்தமறிவார்க்குத் தலைவரானவரே! தம் - அந்த, நிஶாசரம் - ராக்ஷஸனை, ராவணேந - ராவணனாலே, ப்ரணிஹிதம்-கூடசாரியாக நியமிக்கப்பட்டவனாய், அவேஹி-அறியும், அஹம் - நான், தஸ்ய - அவனுடைய, நிக்ரஹம் - வதத்தை, க்ஷமம் - யோக்யமாக, மந்யே - நினைக்கிறேன்.

வ்யா. (தம் நிஶாசரம் ராவணேந ப்ரணிஹிதம்) நீர் அநுகூலனாக ப்ரமிக்கிறவனை நமக்கு ஶத்ருவான ராவணனாலே ப்ரணிதிகர்மத்திலே நியுக்தனாக ப்ரதிபத்தி பண்ணீர். (அவேஹி) உமக்கிவன் ப்ரணிதியென்னுமிடம் தோற்றுகிறதில்லையாகில், என்பக்கலிலே ஒரு அவதாரணம் பண்ணியருளீர். அறியாதவை எல்லார்க்குங் கேட்டறியவேணும். ஆனால், இவனைச் செய்யவடுப்பதென்னென்ன; (தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே க்ஷமம்) நானவனுடைய நிக்ரஹமே யுக்தமென்று நினைக்கிறேன். இவனையுள்ளபடி அறிந்தநான், வஞ்சகனான விவனுடைய நிக்ரஹமே யுக்தமென்று அறுதியிட்டேனென்கை. ஸம்ஶயமுண்டானவிடத்தில் வதமேகர்த்தவ்யமென்னுமிடம் ஶாஸ்த்ரஸித்தம்-"த்விஷந்தம் ஸேவ்யகார்யேஷ்வபி ந க்ஷந்தவ்ய கதஞ்சந | யஜ்ஞவிக்ரஹம் பாண்டவாநாம் ஹந்யாத்" "க்ஷணம் விஶ்வாஸ நிஶ்சயாத்" "யஸ்யாம் த்ருஷ்டாம் ஶ்ரேயஶ:" "நாஹம் ஹந்தா ந்ந". (க்ஷமவதாம்வர) யுக்தங்களெல்லா மறிவார்க்குத்தலைவரல்லீரோ? யுக்தங்களெல்லாமறிந்தருள வேண்டாவோ. அதவா- (தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே க்ஷமம்) என்கிறபோது, அவ்வளவிலும் பெருமாளுடைய திருவுள்ளத்தி லிரக்கத்தைக்கண்டு, உம்முடைய க்ஷமா திஶயத்துக்கு த்வேஷணனைவிவனே விஷயம்; ஸுக்ரீவனன்றோ விஷயமென்கிறுரென்றுமாம். ௨௮

தாத்பர்யம் - ராவணாஸுரன் நம்பலத்தை யறிகைக்காக இந்த விபீஷணனைத் தூதுவிட்டானென்று அறியும். நானிவனைக்கொல்வதேயுக்தமென்று நினைக்கிறேன். நீர்யுக்தங்களை விசாரிக்கவமர்த்தராகையாலே இதை யோசிக்கவேணும்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்³த⁴காண்ட³ம், ௧௭ - ம் ஸர்க்க³ம், ௨௫ - ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. தஸ்யாஹம் நிக்³ரஹம் மந்யே - என்று - ப்ரணிதி⁴வத⁴ம் யுக்தமென்னக்கடவீரோ வென்ன ; கேவலம் ப்ரணிதி⁴மாத்ரமே யன்று; து³ஷ்டப்ரக்ருதியாகையாலே இடம்பெற்றவிடத்திலே நலியக்கூடுமாகையாலே கொல்லத்தட்டில்லை என்கிறார். ராக்ஷஸ꞉ இத்யாதியாலே.

௨௫. ராக்ஷஸோ ஜிஹ்மயா பு³த்³த்⁴யா ஸந்தி³ஷ்டோऽயமுபஸ்தி²த꞉ ।
ப்ரஹர்த்தும் மாயயா ச²ந்நோ விஶ்வஸ்தே த்வயி சாநக⁴ ॥௨௫

அர்த்தம். அநக⁴ - தோஷமில்லாதவரே ! அயம் - இந்த, ராக்ஷஸ꞉ - அஸுரன், ஜிஹ்மயா - குடிலமான, பு³த்³த்⁴யா - புத்தியாலே, ஸந்தி³ஷ்ட꞉ - அனுப்பப்பட்டவனாய், த்வயி - நீர், விஶ்வஸ்தே - நம்பினவளவில், ப்ரஹர்த்தும் - அடிப்பதற்கு, உபஸ்தி²த꞉ - கிட்டிவந்தவனாய், மாயயா - கபடத்தால், ச²ந்ந꞉ - மறைக்கப்பட்டவனாயிருக்கிறான்.

வ்யா. (அயம் ராக்ஷஸ꞉) ராவணப்ரணிதி⁴யாய் வந்த ராக்ஷஸன், கேவலம் ப்ரணிதி⁴கார்யத்தளவிலே வ்யாபரிப்பானாய் வந்தானல்லன். என்செய்ய வந்தானென்னில் ; (ஜிஹ்மயா பு³த்³த்⁴யா ஸந்தி³ஷ்ட꞉ ப்ரஹர்த்தும் உபஸ்தி²த꞉) குடிலபு³த்³த்⁴யா ப்ரேரித꞉ த்வாம் ப்ரஹர்த்தும் உபஸ்தி²த꞉. - ராக்ஷஸராகிறார் குடிலபு³த்³தி⁴களென்னுமிடம் நமக்கு அநுபூ⁴தமன்றோ? ராவணேந ஸந்தி³ஷ்ட꞉ குடிலபு³த்³த்⁴யா உபஸ்தி²த꞉-என்னவுமாம். நம்மையிங்ஙனே நலியலாயிருக்குமோவென்னில் ; (மாயயா ச²ந்ந꞉) க்ருத்ரிமத்தாலே தன்னை மறைத்துவந்தவனாகையாலே நலியலாம். அதாகிறது - ஶரணாக³தவேஷத்தாலே தன் ஸ்வரூபத்தை மறைத்துவருகை. எப்போதிவன் நலிவதென்னில் ; (விஶ்வஸ்தே த்வயி) இவன் அகவாயறியாதே உக்திமாத்ரத்தைக்கொண்டு ஶரணாக³தனென்று உம்மை அவன் அதீ⁴நமாக்கினவளவிலே. (ச)ஶப்³த³த்தாலே லக்ஷ்மணாதி³களையும் ஸமுச்சயிக்கிறது. "அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம்" என்று - ஆஶ்ரிதர்க்கு அழிவுக்கிட்ட வடிவாகத் தம்மை நினைத்திருப்பாரென்று பார்த்து, உமக்கு நெஞ்செரியும் லக்ஷ்மணாதி³களையும் நலியுமென்கிறார். (அநக⁴)

ஸூத்ராநுஸாரத்தாலே பிறர்பக்கல் தோஷங்காணவறியீர் ; நான் சொல்லவாகிலும் அறிந்தருளீர். ௨௪,

தாத்பர்யம் - ஸ்வாமி! தேவரீர் தோஷமறியாதவராகையாலே, ராவணன் தன் குடில புத்தியாலிவனை யனுப்பினானென்று இவன் தோஷத்தை யறியவில்லை. கபடோக்தியால் தன்ஸ்வபாவத்தை மறைத்து நமக்கெல்லாருக்கும் நம்பிக்கையைப் பிறப்பித்துப் பின்பு நன்றாய் நம்மை நலிவதற்கு ஸமீபத்தில் வந்திருக்கிறான்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், ௧எ - ம் ஸர்க்கம், உ௬ - ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. ஸ்வநிகர்ஷாநுஸந்தாநபூர்வகமாக நம்பக்கலிலே ஶரணம்புகுந்த இவன்பக்கலிலே தோஷத்தை நினைத்து ஆராய்கை நமக்குப் போருமோவென்னில்; ஶத்ருவானவன்நம்மை நலிகைக்காக ஶரணம்புகுந்தால், இவனை ஆராயாதே ஸ்வீகரித்தால் மஹாநர்த்தம் விளையுமென்கிறார் ப்ரவிஷ்ட: இத்யாதியாலே.

௨௬. ப்ரவிஷ்டஶ்ஶத்ருஸைந்யம் ஹி ப்ராஜ்ஞ ஶத்ரு: ரதர்கித: ।
நிஹந்யா தந்தரம் லப்த்வா உலூகாநிவ வாயஸ: ॥ ௩௦

அர்த்தம். அதர்கித: - பரிசீலிக்கப்படாத, ஶத்ரு: - த்வேஷியானவன், ஶத்ருஸைந்யம் - எதிரிஸேனையை, ப்ரவிஷ்டோ ஹி - நுழைந்தவனாய், ப்ராஜ்ஞ: - அந்தரங்கதையை யடைந்தவனாய், அந்தரம் - அவகாசத்தை, லப்த்வா - அடைந்து, வாயஸ: - காகம், உலூகாநிவ - கோட்டானைப்போலே, நிஹந்யாத் - கொல்லுவன்.

வ்யா. (அதர்கிதஶ்ஶத்ருஶ்ஶத்ருஸைந்யம்ப்ரவிஷ்டோஹி) இவன் அநுகூலனோ ப்ரதிகூலனோவென்று ஆராயாதே அநுகூல வேஷத்தாலே ஶத்ருஸைந்யத்தை ப்ரவிஷ்டனாய்க் கொல்லும். ஸஸைந்யனானவனை ஒருத்தனாய்க் கொல்லப்போமோவென்னில்; (ப்ராஜ்ஞ:) அந்தரங்கனாய் ப்ராஜ்ஞனான ஶத்ருவானவன் ஶத்ருஸைந்யத்தை நலியும். ஒருதிரளை யொருவனால் நலியப்போமோ வென்னில்; (அந்தரம்லப்த்வா நிஹந்யாத்) ஸ்வாபாதிகளுண்டானவள

விலே கொல்லும். ஸஹஜ ஶாத்ருவத்துக்கும், ஒன்றே கூநேகத்தை நலிப்பிக்குமென்னுமிடத்துக்கும் த்ருஷ்டாந்தஞ்சொல்லுகிறார். (உறுஒகாநிவவாயஸ:)காகமொன்றுமே தனக்கு ஸஹஜஶத்ருக்களான திவாபீதங்களைத் தனக்கவகாசமான சுஹஸ்ஸிலே நலியுமாப்போலே. ருo.

தாத்பர்யம்.—வந்தசத்ருவினுடைய குணாகுணங்களை ஆராயாவிடில், அவன் எதிரிஸேனையில் புகுந்து, அவர்களுக்கந்தரங்கன்போலிருந்து, தன்னிடத்தில் விச்வாஸத்தைச்செய்வித்துக்கொண்டு, எதிரிகள் பாராக்காயிருக்கும் ஸமயத்தில், காகமானது, பகலில் கண்தெரியாத கோட்டான்களை நலிவதுபோல், ஒருவனாயிருந்தே அந்த ஸேனையைக்கொல்லுவன்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம். கஎ - ம் ஸர்க்கம், உஎ - ம் ஶ்லோகம்

---

அவதாரிகை. இப்படி யிவனால் பஹுவிதமாக வருமநர்த்தத்தை விண்ணப்பஞ்செய்திருக்கச் செய்தேயும், பெருமாளுக்கவன்பக்கல் தண்ணளிமாறாதேயிருக்கையாலேவிபீஷணனைச் † சினந்தோற்றித் தாமே இவனுடையவதத்தை ஆஜ்ஞாபிக்கிறார், வய்யூதாமித்யாதியாலே.

உஎ. வய்யூதா மேஷ தீவ்ரேண தண்டேந ஸஸிவை ஸஹ |
ராவணஸ்ய ந்ருஶம்ஸஸ்ய ப்ராதாஹ்யேஷ விபீஷண: || ருக.

அர்த்தம். ஏஷ: இந்தவிபீஷணன், ஸஸிவைஸ்ஸஹ- மந்திரிகளோடுகூட, தீவ்ரேண - க்ரூரமான, தண்டேந - சிக்ஷையால், வய்யூதாம் - கொல்லப்படட்டும். ஹி - ஏனென்றால், ஏஷ:-இந்த, விபீஷண: - விபீஷணன், ந்ருஶம்ஸஸ்ய - கொடியவனான, ராவணஸ்ய - ராவணனுடைய, ப்ராதா - ஸஹோதரன்,

வ்யா. (ஏஷவய்யூதாம்) இவனைக்கட்டி யிட்டுவைத்தல், ஜாம்பவனைப்போலே மேலே ஓரநர்த்தத்தை விளைக்கும்படி தொடுத்த அம்போடேவிடுதல் செய்யக்கடவோமல்லோம்; கொன்றேவிடுவோம். (தீவ்ரேணதண்டேந) கொல்லுமிடத்திலும் ஓரம்பாலே ⊕ ஊதினாற்போலே கொல்லுகையன்றிக்கே, தலையிலே முடிவைத்தாற்போலே சிங்க விளக்கெரிக்கக்கடவோமென்கை. (ஸஸிவைஸ்ஸஹ) நம்மை

---

† சினம் - கோபம். ⊕ ஊதினாற்போலே- அறுத்தாற்போல்.

நலிகைக்குக் கூட்டுப்படையாய் வந்தவர்களைத் தலையறுத்து இவன் கையிலே கொடுத்துப் பின்பு இவனைக்கொல்லக்கடவோம். விபீஷணத்தாலே நலிகைக்கு ஹேதுசொல்லுகிறது மேல். (ஸஷ விபீஷண: ராவணஸ்ய ந்ருஶம்ஸஸ்ய ப்ராதா ஹி) இவன் நாயகனென்னுமிடம் விஹிதமாயிருக்க, க்ரூரகர்மாவான ராவணனுடைய ப்ராதா வென்னுமிடம் ஸம்ப்ரதிபந்நமிறே. * சுரிகுழற்கனிவாய்த்திருவினைப்பிரித்த க்ரூரகர்மாவிறே. அவன் பெற்ற தாயையும் தகப்பனையும் சேரவிருக்கப்பொறாதவனிறே. உடலையு முயிரையும் பிரித்தாற்போலே, நித்யாநபாயினியான பிராட்டியையும் பெருமாளையும், கடலொருபுறமும் மலையொருபுறமுமாகவு மாக்கினபையலுக்கு, "ப்ராதாஸ்வஸம்ப்ரதி ப்ராத்ருஜ:" என்கிறபடியே, ஸ்வபக்ஷமென்று சொல்லலாம்படி ப்ராத்ருஸம்பந்தமன்றோ? (ஹி) ஸம்ப்ரதிபத்தௌ. இது, ப்ரணயியென்றும் ஶத்ருவென்றுஞ் சொல்லுகிற பக்ஷத்துக்கு உபயோகி. ருக.

தாத்பர்யம்:—இந்த விபீஷணன், க்ரூரகர்மங்களைப் பண்ணி, லோகத்துக்குக்கண்டகனாயிருக்கிறராவணனுடையஸஹோதரனாகையாலே, நம்ஸேனையில் புகுவதற்கு முன்னமே, இவனோடு ஸஹாயமாய் வந்த ராக்ஷஸர்களை இவன் முன்னே சித்ரவதம் செய்து, பின்பு இவனையும் துண்டு துண்டாய் அறுத்துக்கொன்று விடுவோம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம். கஎ-ம் ஸர்க்கம், உஅ-ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. இப்படி பெருமாளைக்குறித்து விண்ணப்பஞ் செய்தவிடத்திலும் பெருமாளுக்கவன் பக்கலுண்டான வாத்ஸல்யத்தைக்கண்டு, இனி அவரருளிச்செய்யும் வார்த்தைக்கநுகூலமாக வார்த்தை சொல்லக்கடவோமென்று பேசாதே யிருந்தாரென்கிறது மேல்.

உ௫. ஏவமுக்த்வா து தம் ராமம் ஸம்ரப்தோ வாஹிநீபதி: ॥
வாக்யஜ்ஞோ வாக்யகுஶலம் ததோ மௌநமுபாகமத் ॥ ௫உ

அர்த்தம். தத: - அதுக்குப்பிற்பாடு, ஸம்ரப்த: -பரபரப்போடு கூடின, வாக்யஜ்ஞ:-வசனங்களை வ்யர்த்தமாகாதபடி சொல்லவறிந்த, வாஹிநீபதி: - ஸேனைக்கு நாயகனான ஸுக்ரீவன், வாக்யகுஶலம் - வசனத்தில் நிபுணரான, தம் - அந்த, ராமம் - ஸ்ரீராமனைக் குறித்து, ஏவம் - இப்படி, உக்த்வா - சொல்லி, மௌநம் - பேசாமலிருக்கையை, உபாகமத் - அடைந்தார்,

வ்யா. (ஏவமுக்த்வா து) துஶப்தத்தால், ஸ்வவாக்யாநாதரமும் விபீஷண பக்ஷபாதமும் பெருமாள் திருமுகத்தில் தோற்றினவாறே பயத்தாற்பிறந்த வேறுபாட்டைச் சொல்லுகிறது. (தம் ராமம்) ஸ்வவாக்யாநாதரமும் விபீஷண பக்ஷபாதமும் தோற்றவிருந்த பெருமாளை. (ஸம்ரப்த:) பெருமாள் திருவுள்ளத்தைப் பின்செல்லாதே வ்யவஸிதராய் ஹடாத்கரித்துச்சொன்ன. (வாஹிநீபதி:) பரிவில்வந்தால், அவர்களுக்கு நிர்வாஹகரென்றுசொல்லலாம்படி இருக்குமவர். இத்தால்இவர்வார்த்தை முதலிகளுக்கெல்லாமிஷ்டமென்று கருத்து. (வாக்யஜ்ஞ:) பெருமாளுக்கு மறுநாக்கெடுக்கவொண்ணாதபடி சொல்லும்வார்த்தைகளை யறியுமவர். (வாக்யகுஶலம்) வக்த்ருவிஜ்ஞாநத்தையறிந்து அத்தைப்புரட்டித் தன்னிணைவிலே விழும்படிவார்த்தைசொல்லவல்லவரை. (தத:) இனிஇவர்வார்த்தை சொல்லுமதொழியத் தாஞ்சொல்லும் வார்த்தையடையச் சொல்லுகையாலே. (மௌநமுபாகமத்) அருளிச்செய்யும் வார்த்தைக்கு அவஸரப்ரதாநம்பண்ணியிருந்தார், ௫உ.

தாத்பர்யம்:—பிறரால் மறுக்க வொண்ணாதபடி சொல்லவல்ல ஸுக்ரீவன், தன் ஸைந்யத்துக்கெல்லாமிஷ்டமான இந்த வார்த்தையைப்பரபரப்புடன், ஸ்வமதமேஸித்தாந்தமாம்படிசொல்ல ஸமர்த்தரான பெருமாளைக்குறித்துச்சொல்லி பின்பு அவருடைய அபிப்ராயத்தைக் கேட்போமென்று மௌநமாயிருந்தார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், கஎ - ம் ஸர்க்கம், உ௯ - ம் ச்லோகம்.

---

அவதாரிகை. மஹாராஜர் வ்யாமூடராகையாலே நம்வார்த்தை கேட்கமாட்டாரென்று, பெருமாள், திருவடி முதலானாரைக்குறித்து வார்த்தை யருளிச்செய்கிறார்.

உ௯. ஸுக்ரீவஸ்ய து தத்வாக்யம் ஶ்ருத்வா ராமோ மஹாயஶா: |
ஸமீபஸ்தாநுவாசேதம் ஹநுமத்ப்ரமுகாந் ஹரீந் || ௫௩.

அர்த்தம். மஹாயஶா:- அப்ரதிஹதமானபராக்ரமத்தையுடைய, ராம: - ஸ்ரீராமன், ஸுக்ரீவஸ்ய - ஸுக்ரீவனுடைய, தத் - அந்த, வாக்யம் - சொல்லை, ஶ்ருத்வா - கேட்டு, ஸமீபஸ்தாந் - பக்கத்திலிருக்கிற, ஹநுமத்ப்ரமுகாந் - ஆஞ்சனேயரைப்ரதானமாகவுடைய, ஹரீந் - வானரர்களைக்குறித்து, இதம் - இத்தை, உவாச - சொன்னார்.

வ்யா. (ஸுக்ரீவஸ்ய தத்வாக்யம்ஶ்ருத்வா து) விப்ரதிபந்நத்தைச் சொன்னாலு மிவர்வார்த்தையன்றோவென்று ஸ்வீகரிக்கவேண்டியிருக்குமவருடைய யுக்தியுக்தமான வார்த்தையைக்கேட்டு. து ஶப்தத்தாலே, இவர்வார்த்தை கேட்டபின்பு பெருமாள் திருவுள்ளத்திற்பிறந்த விசேஷத்தைச் சொல்லுகிறது. அதாகிறது - நாம்கைவிட்டார்க்கு மிவர் உளரென்றிருந்தோம்; இவருங் கைவிடும்படியான ஶோசநீயதசையை ப்ராப்தரான விபீஷணனுக்கு நாமல்லது இல்லையாகையாலே என்று திருவுள்ளத்திற்பிறந்த பக்ஷபாதம். (ராமோ மஹாயஶா:) மஹாராஜர்சொன்ன யுக்திகளாற்கலங்காத (*) திண்மையையுடையரானாரென்கை. (ஸமீபஸ்தாந்) மஹாராஜர்வார்த்தை கேட்டுநின்ற முதலிகளை. (ஹநுமத்ப்ரமுகாந்) மஹாராஜரோபாதி வ்யாமூடராயிருக்கச்செய்தேயும், கருத்தறிந்து கார்யம் செய்ய வல்லனான திருவடி முதலானாரை. (ஹரீநுவாச) "ப்ரியேண ஸேநாபதிநா" என்று-ஸேனை முதலியார், பெருமாள் திருவுள்ளம் ¥ மதித்துவிண்ணப்பஞ்செய்யத்திருக்கண்களாலே அநுமதிபண்ணிப்

---

(*) திண்மை - நிலை, உறுதி. ¥ மதித்து - நிச்சயித்து.

போருமது தவிர்ந்து, ராஜகார்யத்துக்குக் கடவராகில் குரங்குகளாக வும் அவர்களநுமதியை யபேக்ஷித்துத் தாம் வார்த்தைகேட்கவுமாய் விழுவதே! என்று ஜஷிகொண்டாடுகிறான். (ஐதமர்வரச) தங் கார்ய $ அறுதிக்குவேண்டும்வார்த்தையை ஸந்நிதாநம்கேட்க ப்ராப்த மாயிருக்க, மஹாராஜருடைய வைஹவ ப்ரகாசகமான வார்த்தை யைச் சொன்னார். ருங.

தாத்பர்யம்:—தன்னை யாச்ரயித்தவர்களுக்கு ஒரு குறைவும் வாராதபடி ரக்ஷிக்கத்தக்க த்ருடாத்ய வஸாயத்தையும் பலத்தையுமு டையவரான பெருமாள், ஸுக்ரீவனிப்படிசொன்னவார்த்தையைக் கேட்டு நாம்நேரில் சொல்லில் கேட்கமாட்டானென்றறிந்து அங்க ருகிருந்த ஆஞ்சநேயர் முதலானோரைக்குறித்து இதைச்சொன்னார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம். கஎ - ம் ஸர்க்கம், ருச - ம் ஶ்லோகம்.



அவதாரிகை. மஹாராஜர் தம்பக்கல் ப்ரேமாதிசயத்தாலே சொன்னவார்த்தையென்று திருவுள்ளம்பற்றி அதைக்கொண்டாடு கிறார்.

ருச. யதுக்தம் கபிராஜேந ராவணாவரஜம்ப்ரதி ।
வாக்யம்ஹேதுமதர்த்யஞ்ச பவத்பிரபி தச்ச்ருதம் ॥ ருச.

அர்த்தம். கபிராஜேந - வானரராஜனான ஸுக்ரீவனாலே, ராவணாவரஜம்ப்ரதி-ராவணன்தம்பியான விபீஷணனைக்குறித்து, ஹேதுமத்- உபபத்தியையுடைத்தான, அர்த்யம்-ப்ரயோஜநத்தில் நின்றும் போகாமலுமிருக்கிற, யத் - எந்த, வாக்யம்- வசநமானது, உக்தம் - சொல்லப்பட்டதோ, தத்-அது, பவத்பி:- உங்களாலும், ச்ருதம் - கேட்கப்பட்டது.

வ்யா. (யத்வாக்யமுக்தம்) மஹாராஜர்நமக்கு நல்லர்போலே நா மும் நல்லோமாகவேண்டாமோ அவ்வார்த்தைக்குப் * பாசுரமிடலாவது; யதுக்தம்-என்னு மித்தனை. (கபிராஜேந) குழைச்சரக்குடையார் இதுக்கு என் வருகிறதோவென்று அஞ்சி வார்த்தைசொல்ல ப்ராப் தமிறே. அதவா - (கபிராஜேந யதுக்தம்) தம்முடைய முதன் மை தோற்றச்சொல்லப்பட்ட வார்த்தை யாதொன்று; "ஸம்ரப்த மிதமப்ரவீத்" என்று-அடர்ந்து வார்த்தைசொல்லிற்று. (ராவ

---

$ அறுதிக்கு - நிர்ணயத்துக்கு. * பாசுரம் - வசனம்.

ணாநுஜம் ப்ரதி) ராவணஸம்பந்தத்தைப்பார்த்தால் இப்படி கலங்கி வார்த்தைசொல்லுகைக்குத் தட்டில்லை யென்று இவருடைய கலக்கத்துக்கு ஹேதுசொல்லுகிறார். (ஹேதுபி:) "வ்யக்தாம்" என்று ப்ரதிஜ்ஞாமாத்ரமாயிருக்கையன்றிக்கே, ராவணாநுஜத்வாதி உபபத்தியுக்தமாயிருக்கை. (அர்த்தவத்) ஒருத்தருடைய பரிஷிலே வார்த்தைசொன்ன ப்ரகாரமென்று கேட்டார்க்கெல்லாம் ப்ரத்யர்த்தமாயிருக்கை. (ச) ஶப்தத்தாலே, "அர்த்தவந்நயாநுரூபம்" என்றாற்போலே, மற்றுமுண்டான வாக்குணங்களை ஸமுச்சயிக்கிறது. (ஸம்ஸ்ரவிதபூர்வா:) கவி - ப்ரஶ்ந - முதலிகளால் கேட்கப்பட்டதில்லையோ? ஶ்ருதமாகில் ஒன்றை நியமியாதே அநாவிஷ்க்ருதராயிருக்கை ப்ராப்தமோவென்று கருத்து. ஸாநுநய ப்ரஶ்நமாய், ஸ்வபக்ஷத்துக்குக் கூட்டும்படி அநுநயஸஹிதமாய் ப்ரஶ்நம் பண்ணுகிறாரென்றுமாம். ௫௪.

தாத்பர்யம்:—விபீஷணன் நமக்கு சத்ருவான ராவணன் தம்பி என்று இவனை நம் கோஷ்டியில் சேர்க்காமைக்குத்தகுந்த யுக்தியுத்தமாயும் எல்லாரு மாசைப்படும்படியாயும் மதுரமாயும் சொன்ன ஸுக்ரீவன் வார்த்தைகளை நீங்களும் கேட்டீர்களன்றோ?

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம். ௧௭ - ம் ஸர்க்கம், ௫௫ - ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. ஸம்ஸ்ரவிதபூர்வா: - என்று நிர்ணயாபேக்ஷமான வார்த்தையைக்கேட்டு, உபயவாதஜ்ஞரான நாம் நிர்ணயிக்கை யுக்தமோ என்று முதலிகள் நினைவாக, இவ்வளவில், ஸுஹ்ருத்த்வத்தாலே உபதேசம் யுக்தமென்கிறார் ஸுஹ்ருதா இத்யாதியாலே.

௨௭. ஸுஹ்ருதா ஹ்யர்த்தக்ருச்ச்ரேஷு யுக்தம் புத்திமதா ஸதா |
ஸமர்த்தேநாபி ஸந்தேஷ்டும் ஶாஶ்வதீம் பூதிமிச்சதா || ௫௫

அர்த்தம். அர்த்தக்ருச்ச்ரேஷு-கார்யஸங்கடங்களில், புத்திமதா-தீவ்ரபுத்தியையுடைய, ஸதா - ச்ரேஷ்டனான, ஸமர்த்தேந - வல்லமையுடையனான, ஶாஶ்வதீம் - ஸ்திரமான, பூதிம் - செல்வத்தை, இச்சதா - ஆசைப்படுகிற, ஸுஹ்ருதா ஹி- நன்மனமுடைய ஸ்நேஹிதனாலே, ஸந்தேஷ்டும்-உபதேசிக்கைக்கும், யுக்தம்-யோக்யம்.

வ்யா. (ஸுஹ்ருதாஹி) "ஶோகநாஶம்ஸதீதி ஸுஹ்ருத்" அஸந்நிதாநத்திலும் ஶோகநத்தை ஆஶம்ஸிக்குமவனிறே ஸுஹ்ருத்தாவான். ஒருத்தனுடைய அநர்த்தத்தில் நெஞ்செரிவுடையனாயிருக்குமவனால், (க்ருத்யாக்ருத்யேஷு) கர்த்தவ்யாகர்த்தவ்ய நிர்ணய ஸங்கடங்களில். "ராகவம்ஶரணம்கத:" என்று வந்த விபீஷணாழ்வான், தன்னை ஸ்வீகரியாதொழியில்பிழையாதானாயிருந்தான்; "தவஸ்யாஹம்நிக்ரஹம்ஸேந்த்ர" என்கிற மஹாராஜர், ஹிம்ஸியாதொழியில் பிழையாதாராயிருந்தார்; இப்படியான ஸங்கடத்தில். (புத்திமதா) இதுகர்த்தவ்யம் இதுஅகர்த்தவ்யம். என்று நிர்ணயிக்க க்ஷமனாயிருந்துள்ளவனாலே. (ஸஶ்ரேயேந) நிர்ணயித்தபடியே எதிரியால் மறுநாக்கெடுக்கப்போகாமல் தள்ளிச்சொல்லஶக்தனானவனாலே. (ஶாஶ்வதீம் ஸம்ருத்திமீப்ஸதா) ஒருவனுக்கு நித்யஸித்தமான §விபூதியை ஆகாங்க்ஷித்திருந்தவனாலே. இப்போது இவர் ஶாஶ்வதியான ஸம்ருத்தியாக நினைத்திருக்கிறது, ஶரணாகதஸம்ரக்ஷண[illegible]நத்தை யஶஶ்ஶரீரத்தை ஶாஶ்வதியாக நினைத்திருக்கிறவராகையாலே, நம் ஶரீரத்துக்கு என் வருகிறதோவென்றிருக்கும் மஹாராஜர் அஶாஶ்வதியான ஸம்ருத்தியை ஈப்ஸிக்கிறாரென்று நினைக்கிறார். (ஸதா) ஸர்வைஶ்வர்யப்ரயோஜநனாயிருந்துள்ளவனாலே.(ஶாஶ்வதீம்ஸம்ருத்திமீப்ஸதாஸதா) ஶாஶ்வதியான ஸம்ருத்தியைஈப்ஸித்து, அதுஉண்டானால், அத்தால்தான்உளராயிருந்துள்ளவனாலேஎன்றுமாம். (அவிஸந்தேஷ்டும் யாத்ஸ்ய) அவிஶங்க: அவதாரணே-ஸம்விபனன ஸுஹ்ருத்தாலே, "ஆகேஶக்ரஹணாந்மித்ரம்" என்கிறபடியே, ஹிதஞ்சொல்லுகை யுக்தம். இஶ்லோகத்தால், ஆஶ்ரிதர் ஸ்வாநுவர்த்திகளன்றிக்கே க்ஷோபகராநாலும், அந்தக்ஷோபம் அவர்களாலே க்ஷமிக்கவேணுமென்கிற பெருமாளுடைய ஆஶ்ரிதவாத்ஸல்யஞ்சொல்லிற்று. ௫௫.

தாத்பர்யம்:—ஒவ்வொன்றுக்கொன்று விருத்தங்களாயும் அவை இரண்டும் செய்தேயாக வேண்டியுமிருக்கிற ஸங்கடமான கார்யகாலத்தில், யுக்தாயுக்த மறியத்தக்க புத்திமானையும் நினைத்தபடி நடத்த ஸமர்த்தனையும், நச்வரத்தில் கண்வையாமல் அழிவில்லாமலிருக்கிற ஸம்பத்தையே இச்சிக்கிறவனையும் நொந்தாரைக் கண்டால் பொறுக்கமாட்டாதமனமுடைய வனையுமிருக்கிற உத்தமனை ஸ்நேஹிதனுக்கு, வந்தஸங்கடம் நீங்கும்படிசெவ்வையாய் விசாரித்துச் சொல்லுகை யுக்தமன்றோ?

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

§ விபூதியை - ஸம்பத்தை, மேன்மையை.

யுத்தகாண்டம். ௧௭ - ம் ஸர்க்கம், ௩௨ - ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. இப்படி பெருமாளருளிச் செய்தவாறே முதலிகள் ஸோபசாரமாகத் தந்தாம் மதத்தை விண்ணப்பஞ்செய்தாரென்கிறது இத்யேவம் இத்யாதியாலே.

௨௯. இத்யேவம் பரிப்ருஷ்டாஸ்தே ஸ்வம் ஸ்வம் மதமதந்த்ரிதா: |
ஸோபசாரம் ததா ராமம் ஊசுர் ஹிதசிகீர்ஷவ: || ௫௬.

அர்த்தம். இதி - என்று, ஏவம் - இப்படி, பரிப்ருஷ்டா: - கேட்கப்பட்ட, தே - அந்த வானரர்கள், அதந்த்ரிதா: - ஜாக்ரதையுடையவர்களாய்க்கொண்டு, ஹிதசிகீர்ஷவ: - நன்மையைப்பண்ணவேணுமென்று இச்சித்தவர்களாய், ததா - அப்போது, ராமம் - ஸ்ரீராமனைக்குறித்து, ஸோபசாரம் - ஸ்தோத்ரத்தோடே கூடிக்கொண்டிருக்கும்படி, ஸ்வம் ஸ்வம் மதம் - தங்கள் தங்கள் மதத்தை, ஊசு: - சொன்னார்கள்.

வ்யா. (இத்யேவம்) ப்ரகாரவாசியான ஏவஶப்தத்தாலும், உக்தப்ரகாரத்தையும் அநுக்தப்ரகாரத்தையுஞ்சொல்லுகிறது. (பரிப்ருஷ்டாஸ்தே) பரிப்ரஶ்னமாவது - பரித: ப்ரஶ்னமாதல், பரிஶங்கா ப்ரஶ்னமாதல். பரித:ப்ரஶ்னமாவது-நேர் நேர் கேட்கையன்றிக்கே தன்னினைவிலேவிழும்படிகேட்கை. விபீஷணாங்கீகாரம் மஹாராஜரைப்போலே உங்களுக்கு இஷ்டமோ அநிஷ்டமோ என்று நேர் நேர் கேட்கையன்றிக்கே, "ஸுஹ்ருதாமர்த்தக்ருச்ச்ரேஷு யுக்தம்" என்று - ஸாமாந்யேந கேட்கை. பரிஶங்காப்ரஶ்னமாவது-அவிஶ்வாஸத்தாலேவந்த ஸாஶங்கப்ரஶ்னம். அதாகிறது- அநுஸரித்துக் கேட்கை. ஆகவித்தால், தம்மேன்மைதோற்ற ப்ரஶ்னம் பண்ணுகையன்றிக்கே, ஆசார்யனை ஶிஷ்யர்கள் கேட்குமாப்போலே கேட்கை. கேட்டத்துக்குக் கருத்து, அறிகையும்கார்யநிர்ணயத்துக்கு வேண்டுமளவுடைமையும். (ஸ்வம்ஸ்வம்மதம்) "தேஷ்வஜாதா ந விஶ்வஸேத்" என்று மஹாராஜர் மதத்தில் விழும்படியாக பரீக்ஷாஹேதூஹே உங்களாலே தந்தாமுடையமதத்தை. (அதந்த்ரிதா:) ராமகார்யத்திலே ஸாவதாநராயுள்ளார், (ஸோபசாரம்)பெருமாளுடைய பெருமையைப்புகழ்ந்துகொண்டு. (ததா) பெருமாளுக்குத் தாங்கள் ஹி

தஞ்சொல்லுகை அபேக்ஷிதமான உக்தியிலே. (ஹிதபிப்ஸவ:) பெருமாளுடைய ப்ரியமொருதலையாகவும், ஹிதத்தைப் ¶பேணுவார் ஐக்யமுடையராயிருக்குமவர்கள். (ராமஸ்யவ:) ௫௬.

தாத்பர்யம். இந்தப்படி ஸ்ரீராமன், வானரர்களை நயமாகக்கேட்க, அவர்களும் பெருமாளுக்கு ஹிதத்தையே நினைந்து, வேறிடத்தில் பராக்கைவிட்டு, ஸ்ரீராமனை ஸ்தோத்ரம்பண்ணிக்கொண்டு, தங்கள் தங்கள் மதத்தை யறிவித்தார்கள்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம். ௧௭ - ம் ஸர்க்கம், ௩௩ - ம் ச்லோகம்.

---

அவதாரிகை. தந்தாமுடைய மதத்தைச்சொல்லுவார்களாக நினைத்துக்கிழில் ஸோபசாரம் - என்று ப்ரஸ்துதமான ப்ரகாரத்தைச் சொல்லுகிறார்கள் மேல் இரண்டு ச்லோகத்தாலே. அதில் முதல் ச்லோகத்தால், தேவர்ஸர்வஜ்ஞராயிருக்கச்செய்தே எங்களைக் கேட்கிறது, ஆச்ரிதர் சொல்லிற்றல்லது செய்தருளாரொன்கிற ஏற்றம் தேவர்க்குண்டாகைக்காகவிறே என்கிறது.

௫௭. அஜ்ஞாதம் நாஸ்தி தே கிஞ்சித் த்ரிஷு லோகேஷு ராகவ ।

ஆத்மாநம் பூஜயந் ராம ப்ருச்சஸ்யஸ்மாந் ஸுஹ்ருத்தயா ॥ ௫௭.

அர்த்தம். ராகவ - ரகுகுலத்திற்பிறந்த ஸ்ரீராமனே! தே - உமக்கு, த்ரிஷு - மூன்றுவிதமாயிருக்கிற, லோகேஷு - ப்ராணிகளிடத்திலே, அஜ்ஞாதம் - தெரியாதவம்சம், கிஞ்சித் - கொஞ்சமும், நாஸ்தி - இல்லை. ராம - ஸ்ரீராமனே! ஆத்மாநம்-தன்னை, பூஜயந்-ப்ரகாசிப்பியாநின்று கொண்டு, ஸுஹ்ருத்தயா - ஸ்நேஹத்தாலே, அஸ்மாந் - எங்களை, ப்ருச்சஸி - கேட்கிறீர்,

வ்யா, (த்ரிஷுலோகேஷு தே அஜ்ஞாதம் கிஞ்சித் நாஸ்தி) அநந்த கல்யாணகுணபூர்ண கோடிகோடியாயிருந்துள்ள வேதங்கள் நிமித்தமாக ஸர்வஜ்ஞராயிருந்துள்ள தேவர்க்கு, அவர்களுடைய ஸாரஸாரங்களென்ன, உத்க்ருஷ்டாபக்ருஷ்டவிபாகமென்ன, த்யாஜ்யோபாதேய விபாகமென்ன, இவற்றில் அஜ்ஞாதமாயிருப்பதொன்றில்லை. அஜ்ஞாதம் நாஸ்தி - என்று வ்யதிரேகத்தாலே

¶ பேணுவார்- இச்சிக்கிறவர்கள்.

சொல்லிற்று, ஶத்ருஸைந்யத்துக்காக. (ஸர்வஜ்ஞ) இந்த ஸர்வஜ்ஞமென்ன, ஸத்யவ்ரதஸ்வபாவங்களென்ன, இவை யெல்லாம் ஸ்வரூபஜ்ஞானஸ்வபாவத்தால் வந்ததென்கை. "யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" என்னக்கடவதிறே. (ராம! ஸர்வஹ்ருதயாஷ்டானம் ஸம்ஜயந்நுஸந்த்ருஷ்ட்வஸி) ஸுக்ரீவர்க்கு நன்மையே எண்ணுந்திருவுள்ளத்தையுடையீரென்கிற இம்மஹாகுணத்தை ப்ரகாஶிப்பிக்கைக்காக ஆரம்பித்தீர். இத்தாலும் ஸுக்ரீவர்சொன்னபடி யல்லது செய்யாரென்று தேவர்க்கு வரும் ஏற்றத்தை லோகம் கொண்டாடுகைக்காக, ஸர்வஜ்ஞரானதேவரீர், ஜ்ஞானத்துக் ||கடைவில்லாததிரஶ்ஜாதியான எங்களைக் கேட்டருளுகிறதித்தனை.

தாத்பர்யம். ஸ்ரீராமனே! அனுகூலனென்றும் ப்ரதிகூலனென்றும் மத்யஸ்தனென்றும் மூன்றுவிதமான சேதனர்களில் அவரவர்கள் ஸ்வரூபஸ்வபாவங்களை நீர் நன்றாயறிந்திருந்தீர், உமக்கிவைகளில் தெரியாதது ஒன்றுமில்லை. ஆகிலும், ஆச்ரிதபாரதந்த்ர்யமென்னும் தம்முடைய மஹாகுணத்தை லோகத்தாருக்கறிவிக்கைக்காக எங்களை ஆலோசனை கேட்கிறீர்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், கஎ - ம் ஸர்க்கம், உச - ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. ஸுக்ரீவாதீனமாகச் செய்யவேண்டுமவை தேவர்க்கு ஒருத்தரைக்கேட்டுச் செய்யவேண்டாதேயிருக்க, எங்கள் பக்கலிப்படி ஸம்ப்ரமம் பண்ணிவைத்தீர்; இது என்ன ஸ்வபாவமென்று தங்கள் ப்ரீத்யதிஶயத்தாலே சொல்லுகிறார்கள், த்வம் ஹி இத்யாதினா.

உஎ. த்வம் ஹி ஸத்யவ்ரத: ஶூரோ தார்மிகோ த்ருடவிக்ரம: |
பரீக்ஷ்யகாரீ ஸ்ம்ருதிமாந் நிஸ்ருஷ்டாத்மா ஸுஹ்ருத்ஸு ச || ருஅ.

அர்த்தம் த்வம் ஹி - நீர்தான், ஸத்யவ்ரத: - ஸபலமான ஸங்கல்பத்தையுடையவர்; ஶூர: - பராக்ரமத்தை யுடையவர்; தார்மிக: - தர்மிஷ்டர்; த்ருடவிக்ரம: - சலிக்கத்தகாதவ்யாபாரத்தையுடையவர்; பரீக்ஷ்யகாரீ - ஆலோசித்துச்செய்யுமவர்; ஸ்ம்ருதிமாந் - முன்பறிந்தவற்றை மறவாதவர்; ஸுஹ்ருத்ஸு - மித்ரர்களிடத்தில், நிஸ்ருஷ்டாத்மா - வைக்கப்பட்ட கார்யங்களையுடையீராயிருந்தீர்.

|| அடைவுயோக்யதை.

வ்யா. (கலி) வக்ஷ்யமாண ராமாநுஜமான யதிபதியுடைய வைலக்ஷண்யஞ்சொல்லுகிறது. ஸாத்விகர்க்கு ராமாநுஜீநமிறே ஸர்வோத்கர்ஷமும்; இவ்விடத்திலே ராமாநுஜோத்கர்ஷமும் ஸாஸ்த்ரத்தைப்பற்றியிருக்குமென்கை. "ராமாநுஜம் ஶ்ரயோத்கே" என்றாரிறே ஆழ்வான். (ஹி) கீழுக்குமான ஸம்ஹ்ருத்தா ப்ரதிவாக்ய நவவசனம். (ஸத்வ்ருத்த:) அபோவ ஸத்வ:. அதாகிறது-"அஸ்ய ஸ்வஸம்பந்தேந்த்ரியார்த்தஸத்வம் ஈஸ" என்று - ஸுஶ்ரிதஸம்ரக்ஷணஸத்வம் அபோவமாயிருக்கை. (ஶமந:) அந்த ரக்ஷணத்துக்கு விஶேஷதம்வந்தால், அவற்றை யழியச்செய்யும் ஹிம்ஸாஸாதநமும், ஶமநமும். (யாதிக:) அதுதான் $செவ்வைப்பூசலாலே யாயிருக்கை. அபவா - அந்த ரக்ஷணமும் ஸ்வப்ரயோஜநத்துக் காயிருக்கை யன்றிக்கே, தத்ரக்ஷணைக ஸமமாயிருக்குமென்றுமாம். (த்யாகவிக்ர:) த்யாகவ்யாபார: - செய்ததொன்றை ஒருத்தராலு மழிக்கவொண்ணாமை. அதாகிறது - ஆஶ்ரிதர் தங்களாலும் பிறராலும் அழிக்கவொண்ணாதிருக்கை. (பரீக்ஷ்யகாரீ) ஆஶ்ரிதார்த்தமாக பராக்ரமிக்குமிடத்தில் பார்த்துச்செய்கை. அதாகிறது-பிறரால்வரும் விரோதத்தை விக்ரமத்தாலழிப்போம்; அவன் தன்னால்வரும் விரோதத்தைப் பொறையாலே அழிப்போமென்று பார்த்துச்செய்கை. "தாஸ்யமைஶ்வர்யவாதேந" "யஸ்யாம் த்யாகம் ஸமஶ்ரவணாமாஹ:". (ஸ்ம்ருதிமாந்) முன்புபிறந்த ஜ்ஞாநம் அவஸரே ஸ்ம்ருதிவிஷயமாகை. அதாகிறது - ஆஶ்ரிதர் பண்ணும் அபராதத்தைப் பொறுக்கைக்கடி, இவனடியிற் பண்ணின ஆநுகூல்யத்தையேநினைத்திருக்கை. (நிஸ்ருஷ்டாத்மா ஸுஹ்ருத்ஸு) ஆஶ்ரிதர் பக்கலிப்படி ஸர்வஸ்வங்காரரக்ஷகராயிருக்கச்செய்தே, தேவர் காரியம் ஆஶ்ரிதரிட்டவழக்காம்படி அவர்கள் பக்கலிலே ஸமர்ப்பித்து வைத்தீர். கீழுள்ள ராமணங்களை †உண்டறுக்கிலும் இம்மஹாராமணத்தை ஒருத்தராலு முண்டறுக்கப் போ

$ செவ்வைப்பூசலாலே-தர்மயுத்தத்தாலே. † உண்டறுக்கிலும்-கரைகண்டாலும்.

மோவென்று கருத்து. வ ஶஷத்தால், ஃநத்தமான ஶுணங்களை ஸ௨ூவயிக்கிறது. ருஅ.

தாத்பர்யம், தேவரீர், சரணாகதரக்ஷணமே பரமப்ரயோஜநமாகவெண்ணி, அது ஸபலமாம்படி ஸங்கல்பித்து, அதுக்குவந்தவிரோதங்களைத் தம் ஸாமர்த்யத்தால்போக்கி, அந்த வ்யாபாரம் ஒருவராலும் சலிப்பிக்கவொண்ணுதபடி செவ்வையா யாலோசித்துச் செய்து, தாம்முன்பு பண்ணின ப்ரதிஜ்ஞையை மறவாமல், தன்னை ஆச்ரிதர்களுக்குப் பரதந்த்ரராக்கியிருந்தீர்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.



யுஜகாண்டம், கஎ - ம் ஸமஃம் நரு - ம் ஶ்லோகம்.



ஃவதாரிகை. இப்படி ஜேவர்கார்யத்தை ஸுஸ்ரூதரிட்டவழக்காக்கிவைத்தீரென்பது யாதொன்று; அத்தாலே ஜேவருடைய ஸசிவராயிருந்துள்ள ஃஜுஃவர் நால்வருந் தனித்தனியே தங்கள் கருத்துக்களை விண்ணப்பஞ்செய்யக்கடவர்கள்; அது எங்களுக்கெல்லாங் கருத்தாகக்கடவது என்று, மேல் விண்ணப்பஞ்செய்யப்புகுகிற நாலு முதலிகளையு மொழிந்தார் ‡ ரடங்கச்சொல்லுகிறார்கள்.

௨௦. தஸா ஜே௦கை கஶ வ்ஷாவ ஊ வஜு ஸசிவா ஸவ ।
ஜேதுஃதோ௨திஸ௦ப நூா ஸ௨ந்த்ஃாஶு வ நஸயா ॥ ருகூ.

அர்த்தம். தஸாஃ-ஆகையால், ௨திஸ௦பநூஃ - புத்திமான்களாயும், வ நஸயா - அப்படியே, ஸ௨ந்த்ஃாஶு-சொல்ல நிபுணர்களுமான, தவ-உம்முடைய, ஸசிவாஸாவஃ-மந்திரிகள் எல்லாரும், ஜேதுஃ - காரணங்களோடு, வ௦கைகஶஃ - ஒவ்வொருவராய், வ்ஜு - சொல்லட்டும்.

வ்யா. (தஸாஃ) ஜேவரை ஸுஸ்ரூதவாதஞ்ராக்கி அடியோங்கள் சொன்னபடிசெய்யக்கடவதாக எங்களை வைத்தவைப்பாலே. (வ௦கைகஶஃ) தனித்தனியே தந்தாமுடைய கருத்துக்களை விண்ணப்பஞ் செய்யக்கடவர்கள். (தாவஃ வஜு) முந்துறமுன்னம்

‡ அடங்க - எல்லாரும்.

எல்லாரும் விண்ணப்பஞ்செய்யக்கடவர்கள்; காஶ்யவேளையிலே திருவுள்ளமானபடி செய்தருளுகிற தென்கை. (தவஸஷிவாஃ) ஞூஸிஂதாரக்ஷணஃஹாஉபூரத்திலே தீக்ஷிதராயிருக்கிற தேவர்க்கு ஞூஷிஜூம் பண்ணுகிறவர்கள். இப்படி தாங்கள் சொல்லுகிறது, பெருமாள், ஶரணாம தாரக்ஷணத்துக்கு ஸஹகாரியாகத் தங்களை நினைத்திருக்கையாலே. (ஹேதூஃ) வ்ரதிவநங்களென்று பெருமாளுக்கு உபேக்ஷிக்கவொண்ணாதபடி ஸஹேதுகமாக. (ஃதிஸ௰வநா௧) காஶ்யநிணயத்தில் தனித்தனியே நிவணரென்கை, (ஸஃதுயாஷ் வநஷயா) யாதொருபடி நிணயித்தார்கள்; அப்படியே பின்பு பெருமாள் திருவுள்ளத்திலேபடும்படி வ்ரதிவாஉநவஸஃயராயிருக்குமவர்கள். இப்படி முதலிகள், இவர்கள் நால்வர் வார்த்தையையும் பெருமாள் மளாரவிக்கைக்காக வ்ரஶ௰ஸித்து விண்ணப்பஞ்செய்தார்கள். ௫௬.

தாத்பர்யம், தேவரீர் ஆச்ரித பரதந்த்ரராகையாலே, தேவருக்காச்ரிதர்களான அங்கதன் முதலானோர், கார்யாகார்ய நிரூபணத்தில் குசலபுத்திகளுமாய், நிச்சயித்தபடி சொல்லவும் ஸமர்த்தர்களுமாகையாலே, இந்தகார்யத்தைத்தனித் தனியே தகுந்தகாரணங்களைக் கொண்டு நிர்ணயித்துச் சொல்லட்டும்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யூஸகாண்டம், ௧௭ - ம் ஸமுல்ம், ௫௭ - ம் ஶ்லோகம்.

அவதாரிகை. அநந்தரம் ஸவுவ்ரயாநராய் யுவராஜாவாயிருந்துள்ள அஜூபப்பெருமாள் தம்முடைய ஃதத்தை உபநூஸிக்கிறார் ஐதூ்ஹேூ ஐதூ்ஷியால்.

ஓ. ஐதூ்ஹேூ ராவவாயாஉய ஃதிஶா நஜ்ஷோஉமுதஃ ।
விஷீஷணவரீக்ஷாசுூ ஃவாவ வவநம் ஹரிஃ ॥ ௫௭.

அர்த்தம். சுய - அதுக்குப்பிற்பாடு, ஐதி - இந்தப்ரகாரம், உக்ஷே-சொல்லப்பட்டவளவில், அமுதஃ - முதலில், ஃதிஶா- புத்திமானான, அஜூஃ - அங்கதனென்கிற, ஹரிஃ-வானரமானவர், ராவவாய - ஸ்ரீராமன்பொருட்டு, விஷீஷணவரீக்ஷாசுூழ - விபீஷணனுடைய சோதனத்தையே ப்ரயோஜனமாகவுடைய, வவநழ - வார்த்தையை, உவாவ - சொன்னார்.

வ்யா- (உத்தரே) எல்லாருக்குமிவர்கள் நால்வருமே √கடவ ராக முதலிகள் விண்ணப்பஞ்செய்துள்ளவிடத்தில். (ராவணாவரஜ விபீஷணவிஷய) ரவணாணுத்தார் காரும் ஒருகுரங்கினுடைய வார்த்தைகொண்டு*ஈடறுக்கும்படியாவதே என்றுபெருமாளுடைய ஸுஶீலதவாரதத்தைத் ஜஷிகொண்டாடுகிறான் (ஸமாஉழுதை) என்கிறது-பரியட்டமுறையாலேஹோராஜர்க் கநஹரமவராகையா லும்,முதலிகளெல்லார்க்கும் வயாநராகையாலும். (ஹிதாநஜுஷ) பரியட்டமுறையொழியகாரநிணயத்துக்குப்பரிகரமான ஜாநாயிகூத்தையுடைய ஸுஜுப்பெருமாள். (விபீஷணபரீக்ஷாஸ்ய) வயுதாழ- என்றார் ஹோராஜர்: நதுஜெயழ - என்னு மளவாயிருந்தது பெருமாள் திருவுள்ளம்: இவையிரண்டும் ஆராயாமற்செய்கை யாக மல்லவென்று பரீக்ஷாஸ்யமாகவார்த்தையைச் சொல்லுகிறார். க௦.

தாத்பர்யம். இப்படிச்சொன்னவளவில், இளையராஜாவான அங்கதன் புத்திமானுகையாலே, எல்லாருக்கும்முன்னே, விபீஷணன் அபிப்ராயத்தை யாராய்ந்து பின்பு செய்யவேண்டுமத்தை நிச்சயிக்க வேணுமென்று பெருமாளைக்குறித்துச் சொல்லுகிறார்,

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

யுத்தகாண்டம் - கஎ - ம் ஸர்க்கம், சுஎ - ம் ஶ்லோகம்.

அவதாரிகை. ஶத்ருஸகாஶத்தினின்றும்வந்த விபீஷணன் ஸஹஸா விஶ்வாஸயோக்யனல்லன், ஶங்க்யனென்கிறார். ஶத்ரோ: இத்யாதியால்.

௬௭. ஶத்ரோ: ஸகாஶாத் ஸம்ப்ராப்த: ஸர்வதா ஶங்க்ய ஏவ ஹி |
விஶ்வாஸயோக்ய: ஸஹஸா ந கர்தவ்யோ விபீஷண: || சுக.

அர்த்தம். விபீஷண: - விபீஷணன், ஶத்ரோஸ்ஸகாஶாத். சத்ருவிடத்தில் நின்றும், ஸம்ப்ராப்த: - வந்தவன். ஸர்வதா - ஸர்வப்ரகாரத்தாலும், ஶங்க்ய ஏவ ஹி - ஸந்தேஹிக்கத்தக்கவனேயன்றோ? ஸஹஸா - சீக்கிரமாய், விஶ்வாஸயோக்ய:- நம்பத்தகுந்தவனாக, ந கர்தவ்ய: - பண்ணத்தகுந்தவனல்லன்.

√ கடவராக-ஸமர்த்தராக. * ஈடறுக்கும்படி-நிச்சயிக்கும்படி.

ப்த:. (ஶத்ரோஸ்ஸகாஶாத்ஸம்ப்ராப்த:) த்வேஷாதிரேகத்தாலே நாமக்ரஹணம்பண்ணாதே, ஶத்ரு:-என்கிறார். ஸர்வேஶ்வரனுடைய ஶத்ருக்களென்றிறே ததீயர் நினைத்திருப்பது. ததீயருடைய ஶத்ருக்களைத்தனக்கு ஶத்ருவாகவிறே அவன்தானும் நினைத்திருப்பது. இதிறே ஶேஷஶேஷிகளுக்கு அந்யோந்யம் பரிவு இருக்கும்படி. அல்லது, ஸ்வஶத்ருக்களென்று சிலரை மதியார்களிறே. (ஸகாஶாத்ஸம்ப்ராப்தோஹி) அவன் ஶத்ருவாகில் இவனுக்கென்னென்ன; அவனோலக்கத்தினின்றும் வந்தவனென்னுமிடம் தேவர்க்கும் ஸம்ப்ரதிபந்நமன்றோ? ஆனபின்பு, அவன் கார்யத்துக்கு வந்தானாகக்கூடாதோ? (ஸர்வதாஶங்க்யஏவ) ஆகையால் ஸர்வப்ரகாரத்தாலும் ஶங்க்யனே. வத்யன் என்னாதொழிந்தது, பெருமாள் திருமுகத்திலிவன் மேலுண்டான தண்ணளியாலே. அவன் ஸகாஶத்தில் நின்றும் வந்தபடியாலும், அவன் தம்பியென்று தானே சொல்லுகையாலும், ராக்ஷஸஜந்மமானபடியாலும், விஶ்வஸிக்கைக்கு ஒரு ஹேதுவில்லை. (விஶ்வாஸயோக்யஸ்ஸஹஸா நகர்தவ்ய:) ஶரணமென்று வந்தவன் விஶ்வாஸயோக்யனல்லனோவென்று பெருமாள பிப்ராயமாக, அப்படி தன்னாலும் சடக்கென விஶ்வஸிக்கைக்கு யோக்யனல்லன். அது எத்தாலே என்னில்; (விபீஷண:) பரஹிம்ஸையாலே ஸர்வலோகபயங்கரனானவன் பண்ணின ஶத்ருஶரணாகதியாகையாலே, நம்மை நலிகைக்கு இந்த கோஷ்டியிலே விலைச்செல்லும் வார்த்தையைச் சொல்லிவந்தானாக ஸம்பாவனையுண்டு. ஆகையால், ஸஹஸா விஶ்வஸிக்க வடுக்காது. ஶங்கிக்க வடுக்குமென்கை. ௬௧

தாத்பர்யம். இவன் எதிரியான ராவணனிடத்திலிருந்து வந்தவனாகையால் எவ்விதத்திலும் சங்கிக்கும்படியாயே இருக்கிறது. விசாரியாமல் இவனை நம்பக்கூடாது. ஏனென்றால், ஜனங்களை ஹிம்ஸித்து பயப்படுத்துகிறவனென்று ப்ரஸித்தமானபேரையுடையனாய் வந்தான்,

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.



யுத்தகாண்டம், ௧௭-ம் ஸர்க்கம், ௩௮-ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. ஆஸ்ரிதனாய் வந்து ஶரணம்புகுந்தவனை விஶ்வஸிக்கவேண்டாவோவென்று ராமாபிப்ராயமாக, ஶரணாகதனானாலும் ஸஹஸா விஶ்வாஸயோக்யனல்லனென்னு மிடத்தை ஸஹேதுகமாக ப்ரதிபாதித்து, விஶ்வஸித்தால்வரும் அநர்த்தத்தைச் சொல்லுகிறது.

௨௦. சாதயித்வாऽऽத்மபாவம் ஹி சரந்தி ஶடபுத்தய: |
ப்ரஹரந்தி ச ரந்த்ரேஷு ஸோऽநர்த்தஸ்தத்க்ருதோ பவேத் ||௩௨

அர்த்தம். ஶடபுத்தய:-துஷ்டபுத்தியுடையவர்கள், ஆத்மபாவம் - தம்முடைய அபிப்ராயத்தை, சாதயித்வா-மறைத்துவைத்து, சரந்திஹி - ஸஞ்சரிக்கிறார்களன்றோ? ரந்த்ரேஷு - கெட்டஸமயத்தில், ப்ரஹரந்தி ச - நன்றாய் மர்த்திக்கிறார்கள். ஸ: - அந்த, அநர்த்த: - கெடுதலை, தத்க்ருத:- அவனால்செய்யபட்டதாய், பவேத்- ஆகும்.

வ்யா. (ஶடபுத்தய:ஆத்மபாவம் சாதயித்வாசரந்தி) (ஶடபுத்தய:) துஷ்டபுத்தய: - ஜாதிஸ்வபாவங்களாகையாலே ராக்ஷஸர் துஷ்டபுத்திகளாயிறே யிருப்பது. (ஆத்மபாவம் சாதயித்வா) நலியக்கடவதாக நிஶ்சயித்து வருகிற தன்நினைவைமறைத்து. (சரந்தி) ஸாபராதவசரந்தி- தங்களுடைய ஸாவதோஷத்துக்கெதிர்த்தட்டான அநுகூலவேஷத்தைக்கொண்டு வ்யவஹரியாநிற்பர்கள். (ஹி)மாயகரான ராக்ஷஸர் அநுகூலவேஷத்தோடே ஸஞ்சரிப்பரென்னுமிடம், மாரீசன் பக்கலிலும் ராவணன் பக்கலிலும் நமக்கு அநுபூதமன்றோ? இவ்வளவால் ஸஹஸாவிஶ்வாஸ யோக்யனல்லனென்னுமிடத்தைச் சொல்லுகிறது. ஸ்வதோஷத்தை மறைத்து அநுகூலவேஷத்தோடே தான் வந்தால் அவன் நம்மைச் செய்வதென்னென்ன ; (ப்ரஹரந்திரந்த்ரேஷு) இடங்களிலே நலியாநிற்பர்கள். அதாகிறது - தனியிருப்பு, அந்யபரதை, தன்னோடே ஒரு நீராகக்கலக்கை, இவையிறே. (ஸோऽநர்த்தஸ்தத்க்ருதோ பவேத்) அநர்த்தம், ஸஹஸாவிஶ்வஸித்தவனுடைய தலையாகக் கடவது.

தாத்பர்யம்.—தாமஸ ஸ்வபாவமுடையவர்கள், பரஹிம்ஸை செய்வதிலுண்டான தங்கள் அபிப்ராயத்தை வெளியிடாமல் உள்ளே வைத்துக்கொண்டு ஸமயத்தை ஆராய்ந்து கொண்டிருப்பர்கள்; எதிரிக்குக்காலம் தாழ்ந்தபோது செவ்வையாய்ஹிம்ஸித்துத் தங்கள் நினைவை நிறைவேற்றிக்கொள்வர்கள். இப்படிப்பட்ட அநர்த்தம், யோசியாமல் உடனே நம்பினவனுடைய பலமாயிருக்கும்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

யாஜகாண்டம், கஎ-ம் ஸர்க்கம், ௩௩-ம் ஸ்லோகம்.

---

ஈவதாரிகை. இவனுடைய த்யாகோபாதாநத்துக்*குறுப்பான பரீக்ஷா ப்ரகாரத்தைச் சொல்லுகிறது.

௨௦. ஸஷயஷாகவிநிஸ்சித்ய வ்யவஸாயம்ஸஜேதஹி |
குணதஸ்ஸங்க்ரஹம் குர்யாத்தோஷதஸ்துவிஸர்ஜயேத் || ௩௩.

அர்த்தம்.—ஸஷயஷாக - குணதோஷங்களை, விநிஸ்சித்ய - நன்றாய் நிர்ணயித்து, வ்யவஸாயம் - உத்யோகத்தை, ஸஜேதஹி - அடையவேண்டியதன்றோ? குணத: -குணமிருந்தால், ஸங்க்ரஹம் - ஸ்வீகாரத்தை, குர்யாத்-பண்ணக்கடவன்; தோஷதஸ்து-தோஷமிருந்தாலோ, விஸர்ஜயேத் - விடக்கடவன்.

வ்யா. (ஸஷயஷாகவிநிஸ்சித்ய) இவனைப்பரிக்ரஹித்து ஒருகார்யத்திலே நியோகித்தால் இவனால்வரும் ப்ரயோஜனங்களை நிஸ்சயித்து. (வ்யவஸாயம்ஸஜேதஹி) த்யாகபரிக்ரஹ வ்யவஸாயத்தைப்பண்ணுவது. இப்படி பரீக்ஷியாதே ஸஹஸைவத்யாக பரிக்ரஹம் கார்யமல்ல. (ஹி) இது நீதிஸாஸ்த்ரஸித்தமன்றோ? நீர் அறியாததொன்றன்றே. (குணதஸ்ஸங்க்ரஹம் குர்யாத்தோஷதஸ்துவிஸர்ஜயேத்) நங் கார்யம் முற்றுச் செய்யுந்தனையும் குணவானாகில் பரிக்ரஹிப்பது; நங் கார்யத்தைக்கெடுக்குந்தனையும் குணஹீநனாகில் கடுகவிடுவது. குணங்கண்டு வைத்தே பரிக்ரஹியாதொழிந்தால், இவனாற் கொள்ளுங் கார்யம் இழக்கவருமிறே. தோஷங்கண்டு விட்டிலனாகில் ஸந்தாஸத்தோடே தலைக்கட்டுமிறே. ஆகையாலே, விஸர்ஜயேத்-என்கிறது. ௩௩.

---

* உறுப்பான - ஹேதுவான.

தாத்பர்யம்.—வந்தவன், நல்ல எண்ணமுடையவனோ? கெட்ட எண்ணமுடையவனோ? என்று ஆலோசித்துப் பிற்பாடு கார்யங்களில் யத்நிக்கவேண்டியது. அதாவது·நாம் செய்யுங்கார்யங்களில் அனுகூலனாகில் நம்மோடு சேர்த்துக்கொள்ளவேண்டியது. கெடுதி செய்வனாகில் விடவேண்டியது. இது தர்மசாஸ்த்ரத்தில் சொல்லப்படுகிறது. இதை தேவர் அறிவீரன்றோ?

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், ௧௭-ம் ஸர்கம், ௬௫-ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. *கட்டடங்க குணவானாயிருத்தல் தோஷனாயிருத்தல் செய்வாரொருத்தரில்லையாகையாலே, த்ராணவரிஷ்டர்களுக்கு இவை ஹேதுவாகமாட்டாதென்ன; தத்தாவகுணங்களைக் கொண்டு த்ராணோபாதானங்களைப்பண்ணத் தட்டில்லையென்கிறார்.

௬௫. யதி தோஷோ மஹாம் ஸ்தஸ்மிந் த்யஜ்யதாமவிஶங்கித: ।

குணாவாபி பஹவஸ் ஜ்ஞாத்வாஸங்க்ரஹ: க்ரியதாம் ந்ருப ॥

அர்த்தம்,—ந்ருப-ஜனங்களை ரக்ஷிக்கிற ராஜாவே! தஸ்மிந்-அவனிடத்தில், தோஷ: - கெட்டநடத்தை, மஹாந்யதி - அதிகமாயிருந்தால், அவிஶங்கித: - ஸம்சயிக்கப்படாதவனாய், த்யஜ்யதாம் - விடப்படட்டும், பஹவ:-அனேகங்களாயிருக்கிற, குணாவாபி-நன்னடத்தைகளையாவது, ஜ்ஞாத்வா - அறிந்து, ஸங்க்ரஹ: - அங்கீகாரம், க்ரியதாம் - பண்ணப்படட்டும்.

வ்யா. (ந்ருப) நாடாள இட்டுப்பிறந்த தேவர்க்கு இந்த நீதி நாங்களுபதேசிக்கவேணுமோ? தேவர்க்கு ஸர்வஜ்ஞமன்றோ? (தஸ்மிந் தோஷோமஹாந்யதி அவிஶங்கிதஸ்த்யஜ்யதாம்)தோஷம் மஹானாயிருக்குமாகில், அல்பமான குணம் அத்தாலே அபிபூதமாகையாலே அது ஜீவிக்கமாட்டாது. ஆகையாலே, அந்த குணலேசங்கொண்டு ஸ்வீகாரம் கர்தவ்யமன்று; ||கண்ணற்று விடப்படும். (குணாவாபி பஹவஸ் ஜ்ஞாத்வாஸங்க்ரஹ: க்ரியதாம்) அப்படியே, குணங்குவாலாயிருக்குமாகில், அத்தாலே அபிபூதமான அல்பதோஷந் தலையெடுக்கமாட்டாமையாலே, அந்த தோஷத்தைக்கொண்டு கைவிடக்கடவோமல்லோம்; ஸ்வீகாரங் கர்தவ்யம்.

---

* கட்டடங்க - பரிபூர்ணமாய். || கண்ணற்று-தயையில்லாமல்.

தாத்பர்யம். எல்லாரிடத்திலும் குணதோஷங்களிரண்டும் கலந்திருந்தாலும், எவனிடத்தில்தோஷமதிகமாயிருக்கிறதோ; அவனுடைய அல்பமானகுணம்ப்ரகாசியாதாகையால் அவனை யோசியாமல்விடவேணும். எவனிடத்தில் குணமதிகமாயிருக்கிறதோ;அவனுடைய அல்பதோஷம் கார்யகரமாகாதாகையால்,அவனைச் சேர்த்துக்கொள்ளவும். இந்தராஜநீதிகள் ராஜாவான தேவர்க்குத்தெரியாதா?

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யாஸகாண்டம், ௧எ - ம் ஸர்க்கம், ௬௧ - ம் ஶ்லோகம்.

அவதாரிகை. இப்படி ஸுக்ரீவப்பெருமாள் ஸ்வமதத்தை வ்யதிஷாதித்து நின்றவளவிலே, அந்த கோஷ்டியில் த்விதீயரான ஶரபர் ஸ்வமதத்தை உபபாதிக்கிறார்.

௩௬. ஶரபஸ்த்வத நிஶ்சித்ய ஸார்த்தம் வசனமப்ரவீத் |
க்ஷிப்ரமஸ்மிந்நரவ்யாக்ர சாரஃ ப்ரதிவிதீயதாம் ‖ ௬௫.

அர்த்தம்:—அத - அதுக்குப்பிறபாடு, ஶரபஃ-சரபர், ஸார்த்தம்-செய்யத்தகுந்ததை, நிஶ்சித்ய - நிர்ணயித்து, வசனம் - வார்த்தையை, அப்ரவீத் - சொன்னார். நரவ்யாக்ர - புருஷஶ்ரேஷ்டனே! அஸ்மிந் - இவனிடத்தில், க்ஷிப்ரம் - விளம்பியாதபடி, சாரஃ - தூதன், ப்ரதிவிதீயதாம் - விடப்படட்டும்.

வ்யா. (ஶரபஸ்த்வத) பரியட்டமுறையால் ஸுக்ரீவப்பெருமாளுக்கநந்தரம் வ்யாவராயிருந்துள்ள ஶரபர் மதம் கீழிற் பக்ஷத்தைக் காட்டில் ஸாமர்த்த்யத்தாலே வந்த விஶேஷத்தைச்சொல்லுகிறது, த்வாஸ்யத்தாலே. (ஸார்த்தம்வசநம் நிஶ்சித்யாப்ரவீத்) வசனத்துக்கு ஸார்த்தமாவது - அர்த்தத்தினுடைய அதிசயோக்தி. (ஸார்த்தம்நிஶ்சித்யவசநமப்ரவீத்)செய்யக்கடவபடியை நிஶ்சயித்து வார்த்தை சொன்னாரென்னவுமாம். (நரவ்யாக்ர) தேவர் ஆண்புலியன்றோ? வந்தவனுடைய*தண்மை பாராதே §நோக்கக்கடவதோ? ஆனால் செய்யக்கடவதென்னென்ன? (அஸ்மிந்சாரஃ ப்ரதிவிதீயதாம்) ஒருஷ்டனோ ஶோபனனோவென்று ஸம்ஶயாக்ராந்தனை யிவன் பக்கலிலே இவனுடைய ஸ்வபாவ நிர்ணயார்த்தமாக சாரன் விடப்படுவான். (க்ஷிப்ரம்) அங்ஙனன்றாகில் இவனுடைய பரிக்ரஹத்தில் விளம்பியாதபடி சடக்கென விடப்பார்ப்பது.௬௫.

---

* தண்மை - தாழ்மை. § நோக்கக்கடவதோ-கடாக்ஷிக்கலாமோ.

தாத்பர்யம். அங்கதப்பெருமாள் சொன்னபிற்பாடு சரபர், இன்னது செய்யவேண்டுவதென்று தான்முன்னம் நிச்சயித்துக்கொண்டு பெருமாளைப்பார்த்துச்சொன்னார். என்னவென்றால்; இவன் நடத்தை நமக்குத்தெரியாதாகையால் அதை யறிகைக்காக முந்துறத்தூதுவிடவேணும். தேவர் புருஷஶ்ரேஷ்டராகையால் இவன் தாழ்மை பாராமல்ப்ரவர்த்திக்கக்கூடாது.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், கஎ - ம் ஸர்க்கம், சஉ - ம் ஶ்லோகம்.

---

௪௨. ப்ரணிதாய ஹி சாரேண யதாவத் ஸூக்ஷ்மபுத்திநா ।
பரீக்ஷ்ய ச தத: கார்யோ யதாந்யாயம் பரிக்ரஹ: ॥

அர்த்தம்.—ப்ரணிதாய-அனுப்பி, ஸூக்ஷ்மபுத்திநா-கூர்மையான புத்தியையுடைய, சாரேண - தூதனாலே, யதாவத்-க்ரமமாக, பரீக்ஷ்ய - சோதித்தும், தத: - அதுக்குப்பிற்பாடு, யதாந்யாயம் - க்ரமத்தை அதிக்ரமியாமல், பரிக்ரஹ: - அங்கீகாரம், கார்ய:-பண்ணத்தக்கது. (ஹி) இதுப்ரஸித்தந்தான்.

வ்யா. (ப்ரணிதாய) இவன் சென்று அவன் வ்ருத்தபரீக்ஷணம் பண்ணலாம்படி அவனோடே ஸஜாதனாய் பரீக்ஷிக்கக்கடவன். "ப்ரணிதாநம் சாராநாம் சாரயிஷ்ய சாரஸூத்ர:" என்னக்கடவதிறே. (ஸூக்ஷ்மபுத்திநாசாரேண யதாவத்பரீக்ஷ்ய) இங்கித நிமித்தங்களாலே அவனுடைய குணதோஷங்களை அறியவல்ல புத்திமானான சாரனாலே அவனுடைய குணதோஷங்களை நிஶ்சயிப்பதுஞ்செய்து, (ஹி) கண்ணிட்டுக்கண்டாற்போலே சாரசக்ஷுஸ்ஸாலே அறிய வேணுமென்னுமிடம் ராஜாவான உமக்குத்தெரியாதோ? "ராஜாநஶ்சாரசக்ஷுஷ:" என்னக்கடவதிறே. (யதாந்யாயம் பரிக்ரஹஸ்தத: கார்ய:) ந்யாயமாகில் ஶரணாகதனை அங்கீகரிக்கும் ப்ரகாரத்தாலே இவனை பரிக்ரஹிக்கை பின்பு கார்யம். ஸஹஸாகார்யமன்றென்று கருத்து. "குணதஸ்ஸங்க்ரஹம் குர்யாத்தோஷதஸ்து விஸர்ஜயேத்" என்று விகல்பியாதே, "பரிக்ரஹ: கர்தவ்ய:" என்றது, அவன் பக்கல் பெருமாளுக்குண்டான தண்ணளியைப்பற்ற.

தாத்பர்யம்:—நா மனுப்பினதூதன் எதிரியோடு கலந்திருந்து, இங்கிதங்களாலும் வேறு சேஷ்டைகளாலும் அவனுடைய நடத்தையறிந்துவந்தால், பின்பு நாமாலோசித்து, அநுகூலனாகில் இவனை ந்யாயமாய் அங்கீகரிப்பது யோக்யம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



• யுத்தகாண்டம், ௧௭ - ம் ஸர்க்கம், ௬௩ - ம் ச்லோகம்.



அவதாரிகை. இக்கோஷ்டியில் த்ருதீயரான ஜாம்பவ மஹாராஜர் ஸ்வமதத்தை உபந்யஸிக்கிறார்.

௨௭. ஜாம்பவாம்ஸ்த்வத ஸம்ப்ரேக்ஷ்ய ஶாஸ்த்ரபுத்த்யா விசக்ஷண: ।
வாக்யம் விஜ்ஞாபயாமாஸ குணவத்தோஷவர்ஜிதம் ॥ ௧௭.

அர்த்தம்.—அத - அதுக்குப்பிற்பாடு, விசக்ஷண:-புத்திமானான, ஜாம்பவாந்து-ஜாம்பவானென்பவர், ஶாஸ்த்ரபுத்த்யா - சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டபுத்தியாலே, ஸம்ப்ரேக்ஷ்ய - செவ்வையாய் நிரூபித்து, தோஷவர்ஜிதம் -தோஷத்தால்விடப்பட்ட, குணவத்-குணத்தையுடைய, வாக்யம் . வசனத்தை, விஜ்ஞாபயாமாஸ - சொன்னார்.

வ்யா. (ஜாம்பவாம்ஸ்த்வத) அத- என்கிறஇது, முன்புபோலே. து - என்கிறது - முன்புத்தைப்பக்ஷங்கள் போலன்றிக்கே, அவஶ்யம் பரிக்ரஹணீய னென்கிற விஶேஷத்தைச் சொல்லுகிறது. (விசக்ஷண:) அங்கதஶரபாதிகளும் நீதிஶாஸ்த்ரஜ்ஞராயிருக்க, விசக்ஷண: - என்கிறது, இவருக்கு நீதிஶாஸ்த்ரத்திலுண்டான அவகாஹநாதிஶயத்தாலே, (ஶாஸ்த்ரபுத்த்யாஸம்ப்ரேக்ஷ்ய) பெருமாள் திருவுள்ளத்தைப்பாராதே ஶாஸ்த்ரபுத்தியினாலே அழகிதாகநிரூபித்து. (குணவத்தோஷவர்ஜிதம்வாக்யம்) வாக்யத்துக்கு குணவத்தையாவது-ஸ்வாயத்தத்தில் பெருமாளுக்கும் ஸந்தேஹமற்றிருக்கை. தோஷவர்ஜிதமாகையாவது -ஒருபக்ஷத்தை அநுவதித்துச் சொல்லாதொழிகை. (விஜ்ஞாபயாமாஸ). ௧௭.

தாத்பர்யம்:—சரபர் சொன்ன வநந்தரம், ஜாம்பவானென்பவர், நீதிசாஸ்த்ரத்தில் நிபுணராகையால், சாஸ்த்ரவச்யமான தன் புத்தியைக்கொண்டு செய்யவேண்டுமதை நிச்சயித்து, இரண்டுபக்ஷத்துக்கும் பொதுவாய் ஸந்தேஹமில்லாமலிருக்கும்படி சொன்னார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.



யுத்தகாண்டம், ௧௭ - ம் ஸர்க்கம், ௨௪ - ம் ச்லோகம்.

அவதாரிகை. அவ்வாக்ய மின்னதென்கிறது மேல்.

௨௯. பத்தவைராச்ச பாபாச்ச ராக்ஷஸேந்த்ராத் விபீஷண: |
அதேசகாலே ஸம்ப்ராப்த: ஸர்வதா சங்க்யதாமயம் || ௬௮.

அர்த்தம்:—விபீஷண: - விபீஷணன், பத்தவைராத்- கட்டப்பட்டத்வேஷத்தையுடையனுமாய், பாபாத்-கபடியுமாய், ராக்ஷஸேந்த்ராத் - அஸுரராஜாவான ராவணனிடத்தினின்றும், அதேசகாலே - வரத்தகாததேசத்தில் வரத்தகாதகாலத்தில், ஸம்ப்ராப்த: - வந்தான். அயம்-இவன், ஸர்வதா-எல்லாப்படியாலும், சங்க்யதாம் - யோசிக்கப்படட்டும்,

வ்யா. (பத்தவைராச்சபாபாச்ச) சத்ருவின்பாடு நின்றும். அதாவது-ஸர்வலோகசரண்யரான பெருமாளுடையதிருவுள்ளம் புண்படும்படி தானே சூழ்த்துக்கொண்டவனென்கை. சத்ருக்கள் இரண்டு படிப்பட்டிருப்பர்கள், "ஸஹஜ: கார்யஜச்சைவ த்விவிதச்சத்ருரிஷ்யதே | ஸஹஜஸ்ஸ்வகுலோத்பந்ந இதர: கார்யஜஸ்ஸ்ம்ருத:" என்று. இவன் கார்யசத்ருவாகையாலே துஷ்ப்ரஸஹனென்று கருத்து. ஸஹஜசத்ரு செய்யுமவற்றுக்கு சத்ருபாதி உண்டாகையாலே, *ஏற்கக்கோலி பரிஹரிக்கலாம். (ப்ராப்த:) என்று - வஞ்சகனென்றுமாம், (ராக்ஷஸேந்த்ராத்) ஹிம்ஸகஜாதிக்கு நிர்வாஹகனாயிருக்குமவன் பக்கல் நின்றும். (விபீஷண: அதேச காலே ஸம்ப்ராப்த:) அவனப்படியானால், இவன் நிர்தோஷனாகத்தட்டென்னென்னில்; ராமன்வரும் தேசமுமன்று, காலமுமன்று. எங்ஙனேயென்னில்; இவன் ராமனில் பிராட்டியைப் பிரிந்த துக்கதசையிலே வரவேணும். இவன் வருங்காலமும துவே. அங்ஙனன்றிக்கே, ஸேநைக்கு ப்ரஸ்தாநஸந்நமான கடற்

* ஏற்கக்கோலி - முன்பே ஆலோசித்து.

கரையிலே வந்தான். ஸகாலே வருகையாவது - *அடைமதிட்பட்ட
ஒமெயிலே நம்மை நலிகைக்கு விரகுபார்த்துவந்தான். பகலிலே
வரலாயிருக்க ராத்ரியிலே வந்தானென்றுமாம். (ஸர்வதாசங்க்ய
தாம்) ஆகையால், உக்தஸர்வப்ரகாரத்தாலும் இவன் ஸாதுவதகுய்வந்தாலும் ஸங்கிக்கப்படுவானொருவனென்று கருத்து. ௬௮.

தாத்பர்யம்:—வந்த விபீஷணன், நமக்குக்கார்யசத்ருவும் வஞ்சகனுமான ராவணன் பக்கத்திலிருந்துவந்தான்; அதுவுமன்றிக்கே, இவன் வருகைக்கு யோக்யமான தேசகாலங்கள் தப்பி, லங்கைக்கு ஸமீபமான இடைவெளியிலே நாமிருக்க இப்போது வந்தான். ஆகையால் இவன் விஷயத்தில் நன்ருய் யோசிக்கவேணும்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.



யுத்தகாண்டம், ௧௭ - ம் ஸர்க்கம், ௬௯ - ம் ஸ்லோகம்.



அவதாரிகை. அநந்தரம் ஹநூமான் ஸ்வமதத்தை உபந்யஸிக்கிருர்.

௫௦. ததோ ஹநூமாந் ஸம்ப்ரேக்ஷ்ய ந்யாயாந்யாயகோவித: |
வாக்யம் வசநஸம்பந்நோ பபாஷே ஹேதுமத்தரம் || ௬௯

அர்த்தம்.—தத: - அதுக்குப்பின்பு, ந்யாயாந்யாயகோவித:- ந்யாயாந்யாய நிர்ணயத்தில் பண்டிதனை, வசநஸம்பந்ந:-சொல்லுகையில் ஸமர்த்தனை, ஹநூமாந் - மைந்தரென்பவர், ஸம்ப்ரேக்ஷ்ய - நிச்சயித்து, ஹேதுமத்தரம்-யுக்தியுடையவைகளில் ஸ்ரேஷ்டமான, வாக்யம் - உக்தியை, பபாஷே - சொன்ஞர்.

வ்யா. (ததோஹநூமாந்) ததுஸப்தத்தாலே, "ஸர்வதாசங்க்யதாம்" என்று விடுமளவன்றிக்கே, அனுகூலராகக் கூட்டிக்கொண்டு ஆராயக்கடவதான விஸேஷத்தைச்சொல்லுகிறது. (ந்யாயாந்யாயகோவித:) ந்யாயாந்யாயநிஸ்சயத்தில் வஸிஷ்டனுயிருந்துள்ளவன். (வசநஸம்பந்ந:) கேட்டாரெல்லார்க்கும் செவிச்செல்லவும் நெஞ்சிலேபடும்படியாகவும் நிஸ்சயித்தப்படியே வாய்விடவல்லனுகை. (ஹேதுமத்தரம்):"ஹேதுமதர்த்தஞ"என்கிற மஹாராஜர் வார்த்தையிற்காட்டில்உத்க்ருஷ்டமாயிருக்கை. (ஸம்ப்ரேக்ஷ்யவாக்யம் பபாஷே)ஸங்கநீயனென்றும் ஆராயும்படிஇன்னதென்றும் நிஸ்சயித்து வார்த்தைவிண்ணப்பஞ்செய்தார். ௬௯

* அடைமதிட்பட்ட-முற்றுகைபோட்ட.

தாத்பர்யம்:—ஜாம்பவான் சொன்னபின்பு, ந்யாயமிது, இது அந்யாயமென்று நிரூபிக்கையில் குசலரும் நிரூபித்தபடி எல்லாருக்கும் செவியிலும் மனஸ்ஸிலும் படும்படிசொல்ல சக்தருமான மைந்தர், இவனை ஆராயும் விதமின்னதென்று நிச்சயித்து, மிகவும் யுக்தியுக்தமான வார்த்தையைச்சொன்னார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், ௧௭-ம் ஸர்க்கம், ௪௬-ம் ஶ்லோகம்.



அவதாரிகை. அதில் ஆராய்ந்து கைக்கொள்ளவேணுமென்னுமிடத்தை ஸம்ப்ரதிபத்திபண்ணி, ஸர்வஜ்ஞதாயாம்- என்னாதே ஆராயும்படி சொல்லுகிறார்.

உ௯. வசநம் நாமதஸ்யைஷ ராவணஸ்ய விபீஷண: |
ஶ்ரூயதாம் ப்ரியரூபேணாऽயம் ஶனைர்நரபதீஶ்வர ॥ ௭௦

அர்த்தம்.—நரபதீஶ்வர - ராஜாக்களுக்கு ராஜாவானவரே! ஏஷ: - எதிரிலிருக்கிற, அயம் - ப்ரஸ்துதனான, விபீஷண: - விபீஷணன், தஸ்ய - அந்த, ராவணஸ்ய - ராவணனுடைய, வசநம் - வாக்யத்தை, ஶனை: - மெள்ள, ப்ரியரூபேண - இனியசொல்லால், ஶ்ரூயதாம் நாம - கேட்கப்படட்டும்.

வ்யா. அதில் அநுகூலனாகக்கூட்டிக்கொண்டு நம்மிலொருத்தனுக்கி வார்த்தை கேட்கவடுக்கும். கேட்கும்படி என்னென்னில்; (ஏஷ விபீஷண: தஸ்ய ராவணஸ்ய வசநம் நாம ஶ்ரூயதாம்) நமக்கு ஶத்ருவான ராவணன் நம்பக்கலிலே என்ன சொல்லியிருக்கிறானென்று கேட்பது. (ஶனைர் ப்ரியரூபேணாயம் ஶ்ரூயதாம்) கேட்கும்போது இவன் நம்மை *அசிராதபடிபதறாதே ஆறி இனியபேச்சாலே கேட்கப்படும். (நரபதீஶ்வர) ஶ்லோகத்தில் ராஜாக்களுக்கு நிர்வாஹகரான தேவர்க்கிதே இவ்வ்யாபாரத்தாலே கேட்குமிடம் நீதியென்னுமிடந்தெரிவது. ௭௦

தாத்பர்யம்:—இந்த விபீஷணனை நம்மோடு சேர்த்துக்கொண்டு நம்மை ஸந்தேஹியாதபடி பொறுத்திருந்து, இனிமையான சொல்லாலே, நம் சத்ருவானராவணன் நம்மைக்குறித்து என்சொல்லிக்கொண்டிருக்கிறான் என்று கேட்கவேணும். ராஜாதிராஜனான தேவர்க்கு இப்படி கேட்டறிவதே ந்யாயம்.



---

*அசிராதபடி - ஸந்தேஹியாதபடி.

யுத்தகாண்டம், கஎ - ம் ஸர்க்கம், சஎ - ம் ஶ்லோகம்.

அவதாரிகை. இப்படியாலே ஆராய்ந்து கைக்கொள்ளவேணுமென்கிறது மேல்.

உ௦. ஶாவ ஹேவு தத விஜ்ஞாய தத்வத ஸ்வம் கரிஷ்யஸி ।
யதிநாதுஷ்டோ நநாதுஷ்டோ வா பாஸிதவத்வம் நரஷர்ஷபாஎக

• அர்த்தம் — நரர்ஷப - நரச்ரேஷ்டனே! துஷ்டோயதி-கெட்டவனாகிலுமாம்; நதுஷ்டோவா - யோக்யனாகிலுமாம்; அஸ்ய இவனுடைய - ஶாவம் - நினைவை, தத்வத: - உள்ளபடி, விஜ்ஞாய - அறிந்து, ஸ்வம்-நீர், பாஸிதவத்வம் - திருவுள்ளத்திற்றோன்றபடி, கரிஷ்யஸி - செய்வீர்.

வ்யா. (யதிதுஷ்டோ நதுஷ்டோவா அஸ்யஶாவஹோ தத்வதோ விஜ்ஞாயத்வம் பாஸிதவத்வம் கரிஷ்யஸி) மஹாராஜர் நினைவின்படியே துஷ்டனாகவுமாம்; தேவர் நினைவின்படியே அதுஷ்டனாகவுமாம்; இருவர் நினைவும் அப்ரயோஜகம்; நான் சொன்னப்ரகாரத்தாலே இவனுடையநினைவை உள்ளபடியறிந்து கைக்கொள்ளவேணும்; உக்திமாத்ரமேபோராது. இவனை இன்னனென்றறிந்தால், பிறர்கருத்தோடே கூட்டிச்செய்தருளவேண்டா; தேவர் திருவுள்ளத்தின்படியே செய்தருளுகிறது. உக்திமாத்ரமேகொண்டு ஸ்வீகரிக்கை கர்த்தவ்யமன்றென்று கருத்து. (நரஷர்ஷப) எதிர்த்தலையினுக்தியின் சீர்மையைப்பார்க்க அமையுமோ? தேவருடைய சீர்மையைப்பாராதொழிகிறது என்னென்று கருத்து. எக.

தாத்பர்யம்:—இவன் யோக்யனுமாகலாம்; அயோக்யனுமாகலாம்; அதை இருந்தபடி அறியமுடியாது. ஆகையால், நான் சொன்னபடி இவன் மனஸ்ஸையதார்த்தமாயறிந்து, பின்பு தேவரீர் திருவுள்ளத்தில் எப்படி தோற்றுகிறதோ; அப்படி செய்யலாம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

யுத்தகாண்டம், கஎ - ம் ஸர்க்கம், சஅ - ம் ஶ்லோகம்.

அவதாரிகை. இவர்கள் நால்வருடைய கருத்தும் எல்லார்க்கு மிஷ்டமாகையாலே எல்லாரும் பேசாதிருந்தார்களாகையாலே, வயுதாஜ - என்றவரோடே, ஆராயவேணுமென்றவரோடு வாசியற, இவர்கள் வார்த்தை கேட்ட பெருமாள் திருவுள்ளந்தளர்ந்து திருமே

ணி வெளுக்கிறபடியையுங்கண்டு, திருவடி, நாயகார்த்தமான பெருமாள் உளராகவேணுமென்று முன்புள்ள வார்த்தைகளை பூர்வபக்ஷித்து விசாரத்தை விண்ணப்பஞ்செய்கிறான். பெருமாள் திருவுள்ளத்துக்கு அபிமதனாகையாலே திருவடிவார்த்தையைக் கொண்டாடுகிறான் ருஷி, முதல் ச்லோகத்தாலே.

௫௰. அத ஸம்ஸ்காரஸம்பந்நோ ஹநூமாந் ஸசிவோத்தம: ।
உவாச வசநம் ச்லக்ஷ்ணம் அர்த்தவந் மதுரம் லகு ॥ ௭௨.

அர்த்தம்,—அத - அதுக்குப் பின்பு, ஸம்ஸ்காரஸம்பந்ந: - ஞானவாஸனையால் பரிபூர்ணரான, ஸசிவோத்தம:-இதரமந்திரிகளைக் காட்டிலும் ச்ரேஷ்டரான, ஹநூமாந் - ஆஞ்சனேயர், ச்லக்ஷ்ணம் - இணைந்திருக்கிற, அர்த்தவத் -ப்ரயோஜநத்தை யுடைத்தாயிருக்கிற, மதுரம் - இனிமையாயிருக்கிற, லகு-ஸங்க்ரகமாயிருக்கிற, வசநம் - வாக்யத்தை, உவாச - சொன்னார்-

வ்யா. (அத) பூர்வபக்ஷோபந்யாஸாநந்தரமென்னுதல்; விசாரோபக்ரமமென்னுதல். (ஸம்ஸ்காரஸம்பந்ந:) சாஸ்த்ரங்களிலும் ராஜகார்யங்களிலுமுண்டான பரிசயத்தாலே ப்ரக்ருத்யாதிகளிலும் ஸந்திவிக்ரஹாதிகளிலுமுண்டான ஜ்ஞானவாஸனையால் குறைவற்றவன். (ஹநூமாந் ஸசிவோத்தம:) பெருமாளுக்கு அதிசயத்தை விளைக்கப்புகுகிறவனாகையாலே ராஜகார்யநிர்வாஹகரில் உத்க்ருஷ்டதமன். (ச்லக்ஷ்ணம்) பதபதார்த்தங்கள் ஸம்ஹிதமாயிருக்கை. சப்தத்துக்கு அர்த்தத்துக்குமுண்டான ஸங்கதியைச் சொல்லிற்றாகவுமாம். (அர்த்தவத்) சப்தத்தளவன்றிக்கே அர்த்தமிருக்கை. விலக்ஷணமான அர்த்தத்தை யுடையதென்றுமாம், ப்ரயோஜநவத்தரமா யிருக்குமென்னவுமாம். அதாவது - பெருமாளைப் பெறுகையும், ஸ்ரீவிபீஷணாழ்வானைப் பெறுகையும், மஹாராஜர் ப்ரப்ருதிகள் கலக்கந்தீருகையும். (மதுரம்) நிரர்த்தகமாயிருந்ததே யாகிலும் பாசுரம் இனிதாயிருக்கை. (லகு) அர்த்தம் ஸங்க்ரஹமாம்படி பாசுரம் பரப்பற்றிருக்கை. (வசநமுவாச) இவனுடைய வார்த்தை அநுஷ்டாநபர்யந்தமாகாதபோது அநர்த்தமாகையாலே, "மநோவசநம்" என்றாற்போலே யிருக்கிற வார்த்தையைச் சொன்னான். எல்லா விடத்திலும் இப்படியேயிறே இவனுடைய உக்திசாதுர்யம். "ஸம்ஸ்காரக்ரமஸம்பந்நாம் அத்ருதாம் அவிலம்பிதாம் । உச்சாரயதி கல்யாணீம் வாசம் ஹ்ருதயஹர்ஷிணீம்" என்று. ௭௨

தாத்பர்யம். இப்படி நால்வரும் சொன்ன பிற்பாடு, ராஜதந்த்ரங்களுக்கு நிர்வாஹகராயும், சாஸ்த்ரங்களிலும் ராஜகுலத்திலும் பரிசயம் பண்ணினவராகையால் லௌகிகவைதிக கார்யங்களிலுண்டான நைபுண்யத்தையுடையருமான திருவடி, முன்பின்னுக்கு விரோதமில்லாமலும், கார்யஸாதகமாயும், செவிக்கினிமையாயும், நெஞ்சில்படும்படி ஸங்க்ஷேப மாயுமுள்ள வாக்யத்தைச்சொன்னார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்

---

யுத்தகாண்டம், ௧௭-ம் ஸர்க்கம், ௬௨-ம் ச்லோகம்.

---

அவதாரிகை. திருவடி, பெருமாளுடைய நினைவே தனக்கு விஷயமாகையாலே, உம்முடைய நினைவை ஒருவராலும் நிர்ணயிக்கவொண்ணாதென்று பெருமாளைக்கொண்டாடுகிறான்.

௨௰. ந பவந்தம் மதிச்ரேஷ்டம் ஸமர்த்தம் வததாம் வரம் |
அதிசாயயிதும் சக்தோ ப்ருஹஸ்பதிரபி ப்ருவந் || ௭௩

அர்த்தம்:—மதிச்ரேஷ்ட - புத்தியினால் உத்க்ருஷ்டராய், ஸமர்த்த-வல்லமையுடையருமாய், வததாம்-வாக்மிகளுக்குள்ளே, வர-ச்ரேஷ்டருமான, பவந்த - உம்மை, ப்ருஹஸ்பதி - குருவும், ப்ருவந் - சொல்லாநின்றுகொண்டு, அதிசாயயிது-மேலிடுகைக்கு-ந சக்த: - ஸமர்த்தனல்லன்.

வ்யா. எதுக்காகவென்னில்; நம் நினைவேற்குங் கருத்தனைப் பெற்றோமாகாதேயென்று பெருமாள் ப்ரீதராகைக்காக. (மதிச்ரேஷ்ட) த்யாஜ்யோபாதேயங்களென்ன, க்ருத்யாக்ருத்யங்களென்ன, இவற்றினுடைய நிஷ்கர்ஷத்தில் ப்ரஸக்தராயிருக்கை. (ஸமர்த்த) நிர்ணயித்தபடியே செய்து தலைக்கட்டும் ஸாமர்த்யத்தையுடையராயிருக்கை. (வததாம்வர) செய்யுமிடத்தில் இசையாதாருமிசையும்படி நெஞ்சில்பட வார்த்தை சொல்ல வல்லவர்களில் தலைவராயிருக்கை. (பவந்த) அவ்வளவேயோ; ப்ரக்ருதமான ஸமர்த்தங்களுக்கு உபயோகியாய் அநுக்தமாயிருந்துள்ள கல்யாணகுணங்களால் பரிபூர்ணரல்லீரோ? (அதிசாயயிதும் ந சக்த: ப்ருஹஸ்பதிரபி ப்ருவந்) அமரஜாதத்தை வசீகரமாய்ச்சொல்லுகிற ப்ருஹஸ்பதியும் தேவரை அதிசயிக்கும்படி வார்த்தை சொல்லுவானொரு சக்தனல்லன். அதிசயிக்கையாவது-நின்றநிலையைப்போக்கை. ஸர்வஜ்ஞகல்பர் அசக்தரென்னுமிடம் கிம்புநர் ந்யாயஸித்தமென்று கருத்து.

எ௩

தாத்பர்யம். தேவரீர், கார்யங்களைப்பரிசீலித்து நல்லது தீயது இது வென்று நிர்ணயிக்கையில் ப்ரசஸ்த புத்தியுடையவர். நிர்ணயித் தவர்த்தத்துக்கு விக்நங்கள் நேரிடிலும் அவற்றைப் போக்கி நிறை வேற்றும்படியான வல்லமை யுடையவர். தான்செய்தவைகளை எல் லாருடைய நெஞ்சில் படும்படி உரைக்கவல்லவர். இப்படிப்பட்ட தேவரீருடைய நினைவை அநுவாதம்செய்ய, வக்தாவான ப்ருஹஸ்பதியா லும் முடியாது. என்று ஸ்ரீராமனைக்குறித்துச்சொன்னார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்

---

யுத்தகாண்டம், ௧௭ - ம் ஸர்க்கம், ௬௨ - ம் ஶ்லோகம்.

அவதாரிகை. ஸம்பாஷணமான விபீஷணஸங்கியை வ்யுத் திவாதிக்கைக்காக ஸர்வோத்தவக்ஷேஷணத்துக்குக் காரணத் தை மஹாராஜரைக்குறித்துச் சொல்லுகிறான்.

௬௨. ந வாதாந் நாபி ஸௌஹார்த்தாந் நாபி ஸம்ஸ்க்ருதாந் நச காரணத: |
வக்ஷ்யாமி வசநம் ராஜந் யதார்த்தம் ராமவாக்யாத் || ௭௪,

அர்த்தம்:—ராஜந் - ஸ்வாமியே! வாதாத் -விஜிகீஷைசொல் லும் வாக்யத்தால், நவக்ஷ்யாமி - சொல்லப்போகிறேனில்லை. ஸௌஹார்த்தாத் - அஸூயையால், நவக்ஷ்யாமி-சொல்லப்போகிறேனில்லை, ஸம்ஸ்க்ருதாத் - பெரியதனத்தால், நவக்ஷ்யாமி - சொல்லப்போகிறே னில்லை. காரணதஶ்ச - பக்ஷபாதத்தினாலும், நவக்ஷ்யாமி - சொல்லப் போகிறேனில்லை. ராமவாக்யாத் - பெருமாளிடத்தி லுண்டான மேன்மையால், யதார்த்தம் - எப்படியிருக்கிறதோ அதை அதிக்ர மியாமல், வசநம் - வாக்யத்தை, வக்ஷ்யாமி-சொல்லப்போகிறேன்.

வ்யா. (நவாதாத்) என்னுடைய வாதஸாமர்த்த்யம் ப்ரகாஶநார்த்தமாக விஜிகீஷையா சொல்லுகிறேனல்லேன். (நாபிஸௌஹார்த் தாத்) நம்ஸமாஜத்தில் சிலர் வார்த்தை சொல்லுகையாவதென் னென்கிறபொறுமையாலே சொல்லுகிறேனல்லேன். (நாபிஸம்ஸ்க்ருதாத்) நான்எல்லாரிலும் ஸம்ஸ்க்ருதனாய், என்வார்த்தையாலே கார்யாந்தலைக் கட்டவேணுமென்று சொல்லுகிறேனல்லேன். (நசகாரணத:) வருகி றவன்பக்கல் ஸ்நேஹத்தினாலே சொல்லுகிறேனல்லேன். விபீஷண ன்பக்கல் எனக்கொரு பக்ஷபாதமுண்டாய், அத்தாலே இது செய் தருளவேணுமென்று சொல்லுகிறேனல்லேன். அவன்பக்கல் ஒரு ப்ரயோஜனத்தைக்கணிசித்துச் சொல்லுகிறேனல்லேன். தோன்

மிற்றுச்சொல்லுகிறேனல்லே னென்னவுமாம். தான் இத்தனைவமி ஹரித்துச்சொல்லவேண்டுகிறதற்கு ஹேதுசொல்லுகிறது. (ராஜநு) ராஜஹ்யத்துக்கு விருத்தமான கார்யம்சொல்லுமிடத்தில் இத்தனை வமிஹரித்துச்சொல்லவேணுமிறே. (யயாயத்வவநம் வக்ஷ்யாமி) யயாவஸ்திதாயமான வார்த்தையைச்சொல்லுகிறேன். முதலிகளுடைய மதங்கள் தோஷயுக்தமாகையாலே, அதிருந்தபடி சொல்லுகிறேனென்னுதல்; விபீஷணாழ்வான் பக்ஷமிருக்கையாலே, பக்ஷியை உள்ளபடி சொல்லுகிறேனென்னுதல். ஸ்வாமிஹ்ய த்துக்கு வ்யதிகூலமாகில் யயாயத்தான்சொல்லக்கடவதோவென்னில்; (ராமமௌரவாசு) பெருமாளுடைய சீர்மையாலே சொல்லுகிறேன். நான் யதாயமிருந்தபடி சொல்லிற்றிலேனாகில் பெருமாளை உமக்குக் கிடையாதென்னு மத்தாலே சொல்லுகிறேனென்று கருத்து. எச.

தாத்பர்யம். எங்களுக்குஸ்வாமியான மஹாராஜரே! நான், ஒருவரைஜயிக்கவேணுமென்றுவது, ஒருவரிடத்திலஸூயையினாலாவது, நான் பெரியனென்ற அபிமானத்தாலாவது, ஒருப்ரயோஜனத்தையபேக்ஷித்து பக்ஷபாதத்தினால் தனக்குத்தோற்றின படியாவது சொல்லப்போகிறேனில்லை. பெருமாளுடைய குணங்களைப்பார்த்து முன் சொன்ன பக்ஷங்களிலுள்ள குணதோஷங்களை உள்ளபடி சொல்லுகிறேன். என்று ஹநூமான் ஸுக்ரீவமஹாராஜனைக்குறித்துச் சொல்லுகிறார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்

---

யுத்தகாண்டம், கஎ - ம் ஸர்கம், ருக - ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. வ்யவஸிதமான அர்த்தப்பெருமாள் மதத்துக்கு தோஷத்தைச்சொல்லுகிறான், அயதாஉ நயத் ஐத்யாதியாலே.

உல. அயதாஉ நயத்நிமித்தம் ஹி யதுக்தம் ஸசிவைஸ் தவ ।
தத்ர தோஷம் வ்யவஸ்யாமி க்ரியா ந ஹ்யுபபத்யதே ॥எரு

அர்த்தம்:—தவ-உம்முடைய, ஸசிவை: - மந்திரிகளாலே, அயதாஉ நயத்நிமித்தம் - லாபநஷ்டங்களை ஹேதுவாகவுடைய, யத்- எந்த வாக்யமானது, உக்தம் - சொல்லப்பட்டதோ; தத்ர - அந்தபக்ஷத்தில், தோஷம் - தோஷத்தை, வ்யவஸ்யாமி- நன்றாய்ப்பார்க்கிறேன். (ஏனென்றால்)க்ரியா-பரீக்ஷைபண்ணுகை, நோபபத்யதேஹி - ஹேதுவையுடையதன்றன்றோ?

வ்யா. (கயோராதநயோ நிமித்தம்ஹியதுக்தூ) ப்ரயோஜநாஉ ப்ரயோஜனங்களே இவனுடைய ஸ்வீகாரங்களுக்கு ஹேது வென்று யாதொன்று சொல்லப்பட்டது. (தவஸவிதெளஃ) தேவருடைய ப்ரக்ருதியறியாதே ஶாஸ்த்ரத்தைப்பார்த்துச் சொன்னுரென்கை. பஹுவசநத்தாலே ஸுக்ரீவப்பெருமாள் பக்ஷத்தாரெல்லார்க்கும் அவருடைய வாக்யமேகமென்று சொல்லுகிறது. அவர்பக்கல் ஸௌஹார்த்தமெயாலென்றுமாம், கார்யமல்லாமையால் நிஷேதிக்கிறுனித்தனே; அவர்பக்கல் ஸௌஹார்த்தமெயிற் குறையில்லையென்கை. (தத்ர தோஷம் ப்ரபஸ்யாமி) ஸஹிதமாகச் சொன்ன ஊக்கத்திலே தோஷந்தோற்றுநின்றது. அந்த தோஷமேதென்னச் சொல்லுகிறுன்; (க்ரியா நஹ்யுபபத்யதே) க்ரியா-பரீக்ஷா க்ரியா. அந்த பரீக்ஷாக்ரியை கூடாதென்கிறது. ௭௫

தாத்பர்யம். விபீஷணனிடத்தில் குண குணங்களைப்பார்த்துப் பின்பவனைச் சேர்த்துக்கொள்ளுகையாவது விட்டு விடுகையாவது செய்யலாமென்று சொன்ன அங்கதப்பெருமாள் மதம், குணகுணங்கள் பரீக்ஷிக்க முடியாதாகையால், சரியன்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யாஜகாண்டம், ௧௭ - ம் ஸர்க்கம், ௫௨ - ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. கூடாதென்று என்னுமிடத்தை உபபாதிக்கிறதுமேல்.

௫௭. ஐந்தெ நியோமா ஜாஜடிஸ்ய ஶவெபாஷ்டும் ந ஶக்யதே |
ஸஹஸா விநியோமோ ஹி தோஷவாந் ப்ரதிபாதி மா ||

அர்த்தம்.—நியோஜ்யதே-(ஒருகார்யத்தில்) ஏவுகையாலேயல்லது, ஸாமர்த்யம்-ப்ரயோஜநத்தையுடைத்தா யிருக்கையானது, அவபோத்தும் - அறிகைக்கு, நஶக்யதே-முடியாது. ஸஹஸா - சீக்கிரத்தில், விநியோகோஹி -ஏவுகையோவென்ருல், மா-என்னைக்குறித்து, தோஷவாந் - தோஷத்தையுடையதாக, ப்ரதிபாதி - தோற்றுகிறது.

வ்யா. (நியோஜ்யதே ஸாமர்த்யம் அவபோத்தும் நஶக்யதே) ஸாமர்த்யமாவது-ஸஹ்ருதி ப்ரயோஜநஹாவஃ. அந்த ப்ரயோஜந ஜ்ஞாநார்த்தமாக நியோகிக்கத்தட்டென்னெனில்; (ஸஹ

ஸாவிநியோமோஹி ஷோஷவாநுவ்ருத்திஸாதிரா) இவனால் ப்ரயோ ஜநமுண்டென்றறியாதே சடக்கென ஏவுதோமாகில் காரியத்துக்கு கநயமாமென்று தோற்றுநின்றது. ப்ரயோஜநமுண்டென்ற றிந்தாலல்லது ஏவவொண்ணாது; ஏவினாலல்லது ப்ரயோஜநமறிய வொண்ணாது. ஆக, ஊதரேதராஸ்ரய தூஷமாகையாலே பரீ க்ஷாக்ரியை கநவவநெ. எசு.

* தாத்பர்யம். ஏனென்றால், இவனை நம்கார்யத்திலேவினாலல்ல துஇவன் நன்மை தெரியாது; நன்மையை யறியாமல் கார்யத்திலேவ க்கூடாது. ஆகையால் பரீக்ஷை செய்யக்கடவதல்ல.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், கஎ - ம் ஸர்க்கம், ௫௬ - ம் ஸ்லோகம்.

---

சுவதாரிநெ. கநஷாரம் ஶரஹர் உதத்தை உஷிக்கிறான்.

உ௭. வாரவ்யணிஹிதம் யாக்ஷம் யதாக்ஷம் ஸவிவை ஷவ |
சுயஷ்வாஉஸம்ஹவா தத காரணம் நோவவஷ்தே. ௭௭

அர்த்தம்:—வாரவ்யணிஹிதழ - தூதுவிடுகை, யாக்ஷழ-யோக்யம் (என்று) தவ - உம்முடைய, ஸவிவைஃ - மந்திரிகளாலே, யசு - எதுவானது, உக்ஷழ - சொல்லப்பட்டதோ ; தத் - அந்த மதத்தில், சுயஷ்ய - ப்ரயோஜனத்தினுடைய, சுஸம்ஹவாசு - இல்லாமையாலே, காரணழ - ஹேதுவானது, நோவவஷ்தே - யோக்யமாயில்லை.

வ்யா. (வாரவ்யணிஹிதம்யாக்ஷம் யதாக்ஷம் தவஸவிவைஃ) வ்யணியாநழ-ஸாவேநிஷா. (தகாரணம் நோவவஷ்தேஃ) அந்த உதத்தில் காரணஉவவநமன்று. ஹேதுஶஸ்நமெ ன்கை. (சுயஷ்வாஉஸம்ஹவாசு) இவன் வ்ருத்தஷித்து நிற்கை யாலே இவன் பக்கல் வாரனுக்கு கதஷ்வ்மில்லாமையாலே. *சுயவா,(சுயஷ்வாஉஸம்ஹவாசு வாரணம்நோவவஷ்தே)சுயஷ ஶவத்தாலே ஸாஉஷாஉஷஃ வாரஸாஜாதிகள் சொல்லப்பட்டன. (வாரணம்) வாரவ்யாவாரஃ-அதாகிறது-"வணிக் க்ருஷிவவோஷி க்ஷாகஃ" உத்யாதிகள். எஎ.

---

* இது பாடாந்தரத்தைப்பற்றி

தாத்பர்யம். தூதனைவிட்டு இவன் நன்மை தீமைகளை யறிந்து பின்பு யுக்தமானபடி செய்யலாமென்று சரபர்சொன்னதும், இவன் எதிரேநிற்கையாலே, தூதன் போய் செய்யவேண்டும்வ்யாபார மொன்றுமில்லாமையாலே, யுக்திமத்து அன்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், ௧௭ - ம் ஸர்க்கம், ௬௪ - ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. ஸ்ரீஜாம்பவந்மஹாராஜர்பக்ஷத்தை தூஷிக்கிறான்.

௬௪. அதேஶகாலே ஸம்ப்ராப்த இத்யயம் யத்விபீஷண: |
விவக்ஷா சாத்ர மேऽஸ்தீயம் தாம் நிபோத யதாமதி || ௭௮.

அர்த்தம்:—அயம்-இந்த, விபீஷண: விபீஷணன், அதேஶகாலே - வருகைக்கு யோக்யமில்லாத நிலத்திலே அப்படிப்பட்ட காலத்திலே, ஸம்ப்ராப்த: - வந்தான்; இதி - என்று யத்-எது சொல்லப்பட்டதோ; அத்ர - இந்த மதத்தில், மே - எனக்கு, இயம் - இந்த, விவக்ஷா - சொல்லவேணுமென்கிற இச்சை, அஸ்தி - இருக்கிறது. தாம் - அதை, யதாமதி - அறிந்தபடி, நிபோத - கேளும்.

வ்யா. (அயம்விபீஷண:) "ஆகாஶஸ்தோऽம்பரவாம்ஸநம்" "தாஸவச்சாவமாநித:" என்று-ராவணனாலே அவமானிதனாய், "தஸ்யாஹமநுஜோ ப்ராதா விபீஷண இதி ஶ்ருத:" என்று - ஸம்பந்தத்தை முன்னிட்டுக்கொண்டு, "ராகவம்ஶரணம்கத:" என்று - தேவர்திருவடிகளிலே ஶரணம்புகுந்து நிற்கிற விபீஷணன். (அதேஶகாலேஸம்ப்ராப்த இதி தவஸசிவைர் த்ருஷ்டம், அத்ர மே இயம் விவக்ஷா சாஸ்தி,யதாமதி தாம் நிபோத) இப்பக்ஷத்தில் எனக்கு இந்த விவக்ஷை உண்டாகாநின்றது; நானறிந்தபடி சொல்ல அவற்றைக் கேட்டருளவேணும். சஶப்த:-துஶப்தார்த்தம். முன்புள்ள பக்ஷத்திற்காட்டி லிப்பக்ஷத்துக்குண்டான தூஷணவிஶேஷத்தைச்சொல்லுகிறது. ௭௮

தாத்பர்யம். இந்த விபீஷணன், வரவேண்டுமிடம் தவிர்ந்து. லங்கைக்கு ஸமீபத்தில் மைதானத்தில் நாமிருக்க இப்போது வந்தவனுகையால் விச்வஸநீயனல்லனென்று சொன்ன ஜாம்பவமஹாராஜர் மதத்திலும் எனக்கு ஒரு விஷயம் சொல்லவேணுமென்று தோற்றுகிறது; எனக்குத்தெரிந்தவரையில் சொல்லுகிறேன்; அதைக்கேட்கவேணும்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், ௧௭ - ம் ஸர்க்கம், ௫௫ - ம் ஶ்லோகம்.

அவதாரிகை- அந்த விவக்ஷை இன்னதென்கிறது மேல்.

௬௬.—ஸ ஏஷ தேஶ: காலஶ்ச பவதீஹ யதா ததா |
புருஷாத் புருஷம் ப்ராப்ய ததா தோஷ குணாவபி ||

அர்த்தம். இஹ- இங்கே, ஸ: - இவன் வரவுக்கு யோக்யமான, தேஶ: - தேசமும், ஸ: - அப்படிப்பட்ட, காலஶ்ச - ஸமயமும், ஏஷ: - இதுவே. யதா - எப்படி, பவதி - ஆகிறதோ ; ததா - அப்படிப்பட்ட, (விவக்ஷையைக்கேளும்). புருஷாத்- அதமபுருஷனைக்காட்டிலும், புருஷம்-உத்தமனான புருஷனை, ப்ராப்ய - அறிந்து, ததா - அப்படியே, தோஷ குணாவபி - கெடுதியையும் நன்மையையும், ப்ராப்ய - அறிந்து, (வருகையுக்தம்.)

வ்யா. (இஹ ஸ ஏஷ தேஶ: காலஶ்ச யதா பவதி ததா தாம் நிபோத) இத்யுத்தரேணாந்வய:. யாதொருகாலத்திலே யாதொரு தேஶத்திலேவந்தான்; இவன் வரவுக்கு இதுவே தேஶமும், இதுவே காலமும், யாதொருபடியாம்; அப்படிப்பட்ட விவக்ஷை கேட்டருளவேணும். எங்ஙனேயென்னில்; (புருஷாத் புருஷம் ப்ராப்ய ததா தோஷ குணாவபி) தத்வ்யக்ருதியாகையாலே ஹிம்ஸையே யாத்ரையான ராவணனைக்காட்டில், ஸர்வோத்தரராகையாலே பரரக்ஷணமே யாத்ரையாயிருக்கிற தேவரை ப்ராப்ய ராகபுத்திபண்ணி. ப்ராப்ய-புத்வா. (ததா தோஷ குணாவபி) அவனை அவ்வளவிலேவிட்டுப் போராதொழிந்தால் வரும் தோஷத்தையும் தேவரீரைப்பற்றினால்வரும் நன்மையையும் புத்திபண்ணி. தோஷமாவது-அவனுடைய க்ருத்யத்துக்கு ஸஹகாரியாய், அந்த ப்ராதிகூல்யத்தோடே முடிந்து போகை. நன்மையாவது- யாஜ்ஞிகரோடே கூடப்பெறுகையும், அதின் பலமான தேவர் திருவடிகளில் கைங்கர்யமும். இந்த வைஶிஷ்ட்யஜ்ஞாநமுடையவனுக்கு வருகை யுக்தம். ௭௬.

தாத்பர்யம்:—நீசனான ராவணனைக்காட்டிலும் தேவர் உத்தமனென்றும், ராவணன் ஸஹவாஸத்தால்வரும் கெடுதியையும் தேவர் ஸம்பந்தத்தால்நேரிடும் நன்மையையும் அறிந்தவனுக்கு இத்தேசத்தில் இக்காலத்தில் வருகையே யுக்தம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்

யுத்தகாண்டம், ௧௭-ம் ஸர்க்கம், ௬௪-ம் ஶ்லோகம்.

அவதாரிகை. கீழ்.

ஶ்லோ.—தௌராத்ம்யம் ராவணே த்ருஷ்ட்வா விக்ரமம் ச ததா த்வயி।
யுக்தமாகமனம் தஸ்ய ஸத்ருஶம் தஸ்ய புத்தித꞉॥ ௭௦.

அர்த்தம். ராவணே - ராவணனிடத்தில், தௌராத்ம்யம்-கெட்ட நடத்தையையும், ததா- அப்படியே, த்வயி-உம்மிடத்தில், விக்ரமம்-பராக்ரமத்தையும், த்ருஷ்ட்வா - பார்த்து, தஸ்ய - அந்தவிபீஷணனுடைய, புத்தித꞉ - புத்திக்கு, ஸத்ருஶம் - தகுந்த, தஸ்ய - அவனுடைய, ஆகமனம் - வரவு, யுக்தம் - யோக்யம்.

வ்யா. (ராவணே தௌராத்ம்யம் ததா த்வயிவிக்ரமம் ச த்ருஷ்ட்வா, தஸ்யாகமனம் யுக்தம்) தேவர் திருவுள்ளத்திலே புண்படும்படி ராவணன்பண்ணின தண்மையைக்கண்டு, தௌராத்மாக்களை அநாயாஸேந கொல்லவல்ல ஆண்பிள்ளைத்தனத்தை தேவரீர்பக்கலிலே கண்டு வருகை யுக்தம். (தஸ்யபுத்தித꞉ஸத்ருஶம்) ந்யாயத்திலே ஸஞ்சரிக்குமவன்புத்திக்கும் ஸத்ருஶம். ராவணன்தன்னைக் கொல்லப்புக, உபேக்ஷிக்கை யுக்தமல்லவென்றவனுகையாலே கைக்கொண்டானிறே. ௭௦.

தாத்பர்யம்:—ராவணன் செய்யும் நீசக்ருத்யத்தையும், தேவரிடத்தில் துஷ்டநிக்ரஹஸாமர்த்யத்தையும் கண்டு ந்யாயாந்யாயங்களில் யோசனையுள்ள, விபீஷணன், இப்போதுராவணனைவிட்டு இங்கேவருகையுக்தம்தான்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

யுத்தகாண்டம், ௧௭-ம் ஸர்க்கம், ௬௭-ம் ஶ்லோகம்.

அவதாரிகை. அநந்தரம் மைந்தபக்ஷத்தை உபேக்ஷிக்கிறான்.

ஶ்லோ.—அஜ்ஞாதசீலைஃ புருஷைஃஸராஜந் ப்ருச்சயதாமிதி।
யதுக்தம் தத்ர மே ப்ரேக்ஷா காசித் அஸ்தி ஸமீக்ஷிதா॥ ௭௧.

அர்த்தம். ராஜந்-ஸ்வாமியே! அஜ்ஞாதசீலைஃ-அறியத்தகாத அபிப்ராயத்தையுடைய, புருஷை꞉ - புருஷர்களால், ஸ꞉-அந்த விபீஷணன், ப்ருச்சயதாம் - கேட்கப்படட்டும்; இதி - என்று, தவ - உம்முடைய, ஸசிவை꞉ - மந்திரிகளாலே, யத்-எந்தவசநம், உக்தம்-சொல்லப்பட்டதோ? தத்ர - அந்தபக்ஷத்தில், மே - எனக்கு, ஸமீக்ஷிதா - நன்றாய்ப்பரிசீலநம்பண்ணப்பட்ட, காசித்-ஒரு, ப்ரேக்ஷா-யுக்தி, அஸ்தி - இருக்கிறது.

வ்யா. (ஸுஜ்ஞாதஸம்பந்தை: பரஸம்பந்தை:) ஸுஜ்ஞாதாபி ப்ரா
ஜ்ஞை:. தந்தாம் நினைவை எதிரிகள் அறியாதபடி மறைத்துச்சொன்ன
புருஷர்களாலே. (ப்ரச்நோ ஜ்ஞாதவிதி தவஸம்பந்தை: யதஸம்பந்தாய
ஜநு) தேவர் ராஜாக்களாகுல், வக்தாக்கள் ஸம்பந்தாக்களென்றால்
ந்யாயபஹிஷ்மான வார்த்தையைக் கேட்கக்கடவதோ வென்கை.
(தத்ரஸம்ஜீக்ஷிதா வேக்ஷாகாரிஜ்ஞஸி) இம்மதத்திலே நீதிவிரோ
யத்தைப்பற்றி என்னுல் நிரூபிக்கையா யிருப்பதொரு பாஸி
யுண்டு. அக.

தாத்பர்யம். தன்னபிப்ராயத்தை மறைத்து எதிரியினபிப்ராயத்
தையறியவல்ல புருஷர்களை அனுப்பி இவனபிப்ராயத்தை யறியவே
ணுமென்ற மதத்திலும் எனக்குச்சொல்லவேண்டிய ஒரு அபாதித
மான யுக்தியுண்டு.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், கள - ம் ஸர்க்கம், ருஅ - ம் ஶ்லோகம்.

---

ஸுக்ரீவர் அது என்னென்ன இன்னதென்கிறுன்.

ரு௦ — ப்ரச்நோ விஸ்ருஜேத ஸஹஸா புத்திமா நவ: |
தத்ர ஸித்ரம் ப்ரதுஷ்யேத மித்யாப்ருஷ்டா ஸுவாமத: ||

அர்த்தம். புத்திமாநு-பூர்வோத்தரங்களை யறியவல்ல புத்தியுடை
யவன், ப்ரச்நோ.நஃ-கேட்கப்பட்டவனுக்கொண்டு, வவ: - ப்ரதிவ
சநத்தைக்குறித்து, ஸஹஸா-சீக்கிரமாய், விஸ்ருஜேத - மிகவும் ஸங்
தேஹிப்பன். தத்ர-அவ்வளவில், மித்யாப்ருஷ்டா: - பொய்யேகேட்
கிறவனுக்கு, ஸுவாமத: - ஶ்ரமமின்றிக்கேவந்த, ஸித்ர: - ஸ்நே
ஹிதன், ப்ரதுஷ்யேத-தூஷிதனுவான்.

வ்யா. (ஸஹஸாவச: ப்ரச்நோ நபுத்திமாநு விஸ்ருஜேத)
தன்னை ஸ்வீகரிப்பதற்கு முன்னே ராவணன் வசநத்தை ப்ரச்நம்
பண்ணினுல், இது ஸ்வீகாரத்துக்குப்பின்பு கார்யவிசாரஸமயத்
திலே கேட்குமதுவென்று அறியும் புத்தியோகத்தை யுடையவன்,
ஸநிகர்ஷத்தை முன்னிட்டுசரணம்புக்க நம்பக்கலிலே ஶத்ருபா
ஸியைப்பண்ணினுரோவென்று மிகவும் ஶங்கிக்கும். ஶங்கையில்
வரும் அநர்த்தத்தைச்சொல்லுகிறது மேல் ஸூத்தாலே. (தத்ர)
ஶங்கித்தவளவிலே. (மித்யாப்ருஷ்டா:) ஒன்றை நினைத்து ஒன்றைக்
கேட்குமவனுக்கு. (ஸுவாமதம்ஸித்ரம் ப்ரதுஷ்யேத) இருங்க

மூடவன் தலையிலே மஹோ குதித்தாற்போலே, அநாயாஸேந வந்த மித்ரம் இழக்கவரும். (மித்ராவ்ருஷ்டி) என்று பாரமமானபோது மித்ரவிசேஷணமாய், பொய்யே சிலவற்றைக் கேட்கிற மித்ரமென்றுமாம். அஉ.

தாத்பர்யம்:— வசந ஸந்தர்ப்பங்களை அறியவல்ல புத்திமானை ஸ்வீகரிக்கைக்குமுன்பே ராவணன்வ்ருத்தத்தைக்கேட்டால், நம்மை இவர்கள் சத்ருவாகவெண்ணினார்களென்று ஸந்தேஹிப்பன், அவனப்படி ஸந்தேஹித்தால், நமக்கு ஸுலபமாய் வந்தமித்ரனைநாமிழப்போம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

யுத்தகாண்டம், கஎ - ம் ஸர்க்கம், ருக - ம் ச்லோகம்.

---

அவதாரிகை. மித்ரத்தை இழக்குமளவேயன்று; அவன் நினைவு அறியவுமொண்ணாதென்கிறான்.

௬௬.— அசக்ய ஸஹஸா ராஜந் பாவோ வேத்தும் பரஸ்ய வை |
அந்தஸ்ஸ்வபாவைர் கீதைஸ்தைர் நைபுண்யம் பச்யதா ப்ருசம் ||

அர்த்தம். ராஜந் - ஸ்வாமியே! ப்ருசம் - மிகவும், நைபுண்யம் - ஸமர்த்தனாயிருக்கையை, பச்யதா-பார்க்கிற, பரஸ்ய-எதிரியினுடைய, அந்தஸ்ஸ்வபாவை: - உள்ளேமறைந்திருக்கிற அபிப்ராயத்தையுடைய, தை: - அந்த, கீதை:-சொற்களாலே, பாவ:-அபிப்ராயம், ஸஹஸா - சீக்கிரத்தில், வேத்தும் - அறிகைக்கு, அசக்ய: - சாத்யமன்று.

வ்யா. (பரஸ்ய வை பாவ ஸஹஸா வேத்துமசக்ய:) சிரபரிசயத்தாலே அந்யனுடைய ஹ்ருதயத்தையறியுமதொழிய, சடக்கென அறியப்போகாது. எங்ஙனேயென்னில்; (ப்ருசம் நைபுண்யம் பச்யதா பரஸ்ய அந்தஸ்ஸ்வபாவைர்கீதைஸ்தை: பாவ: வேத்துமசக்ய:) துஷ்டஸ்வபாவனாய் ஸாமர்த்யத்தை நிபுணமாகப்பார்க்கிறவனுடைய மர்மாபிப்ராயமான உத்தரவசநங்களாலே பாவம் அறியப்போகாது. (அந்தஸ்ஸ்வபாவை:) தன்னுடைய பாவம் வசநத்திலே தோற்றாதே நெஞ்சிலேகிடக்கை. (ராஜந்) நீதிஜ்ஞரான தேவர்க்கு அஜ்ஞாதமுண்டோவென்கை. நீ உன்னுடைய பாவத்தை மறைத்து ப்ரச்நம் பண்ணினவோபாதி, அவனுந்தன்னுடைய பாவத்தை மறைத்துத்தான் உத்தரம்சொன்னால் அறியப்போமோ அவனுடைய பாவமென்கை. அசு.

தாத்பர்யம்:—எதிரி, தன்கார்யத்தில் ஸமர்த்தனானால், தன்னினைவை வெளியிடாதபடி நாம்கேட்டதற்கு உத்தரம் சொல்லுவன்; ஆகையால் சீக்கிரத்திலவன்னினைவறிய முடியாது.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

யுத்தகாண்டம், ௧௭ - ம் ஸர்க்கம், ௬௦ - ம் ஸ்லோகம்.



அவதாரிகை. இப்படி வாநரமதத்தை நிரஸநம்பண்ணி ஸ்வஸித்தாந்தத்தை உபந்யஸிக்கிறான்.

ஸ்லோ.— ந சாஸ்ய ப்ருவதோ ஜாது லக்ஷ்யதே துஷ்டபாவதா ।
ப்ரஸந்நம் வதநம் சாபி தஸ்மாந்மே நாஸ்தி ஸம்ஶய: ॥ ௬௬

அர்த்தம். அஸ்ய-இவன், ப்ருவத:-சொல்லுகிறவளவிலும், ஜாது - ஒருகாலும், துஷ்டபாவதா - கெட்டநினைவை யுடைத்தாயிருக்கை, நலக்ஷ்யதே - காணப்படுகிறதில்லை. வதநம் - முகமும், ப்ரஸந்நம் - கலக்கமின்றிக்கே இருக்கிறது. தஸ்மாத் - ஆகையால், மே - எனக்கு, ஸம்ஶய: - ஸந்தேஹம், நாஸ்தி - இல்லை.

வ்யா. (அஸ்ய ப்ருவத: துஷ்டபாவதா ஜாது நலக்ஷ்யதே) இவன்வார்த்தை சொல்லுகிற விடத்தில் துஷ்டபாவமென்பதை ஒருகாலுங்காணப்படுகிறதில்லை. அநாதரேஷஷ்டீ. (ஜாது) துஷ்டபாவனாகில் தன்தோஷத்தைமறைத்தாலும் ஓரளவுகளிலே ப்ரகாஶிக்கும்; இவன்பக்கல் ஸர்வகாலமுந் தோற்றுகிறதில்லை. துஷ்டபாவமாவது-துஷ்டனுடைய சேஷ்டை. அதாவது-பாவவிகாரம்; ஸ்வேதகம்பாதி:, கதி:, நிரீக்ஷணம், ஆலோகநம், இவை தொடக்கமானவை துஷ்டசேஷ்டிதங்களாக ஶாஸ்த்ரங்களிலே ப்ரஸித்தம். ததாஹ யாஜ்ஞவல்க்ய: - "தேஶாத்தேஶாந்தரம் யாதி ஸ்ருக்விணீ பரிலேடிச । லலாடம் ஸ்வித்யதே சாஸ்ய முகம் வைவர்ண்யமேதிச ॥ பரிஶுஷ்ய ஸ்கலத்வாக்யோ விருத்தம் பஹுபாஷதே । ஸ்வபாவாத்விக்ருதிம் கச்சேந் மநோவாக்காய கர்மபி:" இத்யாதி:, மநுரபி - "பாஹ்யைர்விபாவயேல்லிங்கை: பாவமந்தர்கதம் ந்ருணாம் । ஸ்வரவர்ணேங்கிதாகாரை: சக்ஷுஷா சேஷ்டிதேந ச ॥ ஆகாரைரிங்கிதைர்கத்யாசேஷ்டயா பாஷிதேநவா । நேத்ரவக்த்ரவிகாரைஶ்ச க்ருஹ்யதேऽந்தர்

த்தந:" இத்யாதி:. இவன்பக்கல் து:ஷ்டசிஹ்நங்களில்லாமையேயன்று; ஶோபநனென்னுமிடத்துக்கு சிஹ்நமுண்டென்கிறான், (ப்ரஸந்நம் வதநஞ்சாபி) என்கிற வாக்யத்தாலே. இவனுடைய முகம் ப்ரஸந்நமாயே இராநின்றது. வழியடியுண்டவன் தாய் முகத்திலே விழித்தாற்போலே; இவன் முகம் குளிர்ந்தன்றோ இருக்கிறது. முகப்ரஸாதம் ஶோபநசிஹ்நமாக ப்ரஸித்தம். யதா ஸ்ரீதக்ஷிணாகாண்டே- "நமேவேநேத்ரயோர்வாபி ஶராதேவஹரேவோர்த்தயா । கர்ணேந்த்ரவிவஸந்த்ரேஷு தோஷஸ்ஸம்விதித: க்வசித்" இதி. (தஸ்மாந்நாஸ்தீஹ ஸம்ஶய:) இவன்பக்கத்தில் தோஷராஹித்யத்தாலும், முகவைஷம்ய வெம்ருக்ஷண்யத்தாலும், "ஸர்வதா ஶங்க்யவஹி" "ஸர்வதா ஶங்க்யதாமயம்" என்று-முதலிகளுக்குண்டான ஸம்ஶயம் எனக்கு இல்லையென்கிறான். அச.

தார்பர்யம்:—இந்த விபீஷணன் சொல்லும்போது இவனிடத்தில் துஷ்டசேஷ்டைகள் கொஞ்சமும் தெரிகிறதில்லை-முகமும்ப்ரஸந்நமாயே யிருக்கிறது. மனஸ்ஸில்கௌடில்ய மிருந்தால் முகத்தில் தோற்றுமலிராது; ஆகையால் இவனிடத்திலெனக்கு ஒரு ஸம்சயமும் கிடையாது.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

யுத்தகாண்டம், ௧௭ - ம் ஸர்க்கம், ௬௪ - ம் ஶ்லோகம்.



அவதாரிகை. இவன் வந்தபடியாலும் வார்த்தை சொன்னபடியாலும் எனக்கேயல்ல,இவனளவில் ஸர்வர்க்கும் ஶங்கிக்க இடமில்லையென்கிறான்.

ஶ்லோ.— அஶங்கிதமதி ஸ்வஸ்தோ ந ஶட: பரிஸர்ப்பதி ।
நசாஸ்ய து:ஷ்டா வாகஸ்தி தஸ்மாந்நாஸ்தீஹ ஸம்ஶய:॥ அஉ

அர்த்தம். ஶட:-துஷ்டனாகாத இந்த விபீஷணன், அஶங்கிதமதி: - ஸந்தேஹிக்கப்படாத புத்தியையுடையவனாய், ஸ்வஸ்த: - பயமில்லாதவனாய், பரிஸர்ப்பதி - ஸமீபத்தில்வருகிறான். அஸ்ய - இவனுக்கு, து:ஷ்டா வாக் -தோஷத்தையுடைய வசநம், நாஸ்தி-இல்லை. தஸ்மாத் - ஆகையால், இஹ - இவன்விஷயத்தில், ஸம்ஶய: - ஸந்தேஹம், நாஸ்தி - இல்லை.

வ்யா. (அஶங்கிதமதிஸ்ஸ்வஸ்த²:) முதலிகள், "ஸாமாத்யோ வத்⁴யதாமேஷ மாம்ஸ" என்று - தன்னைக்குறித்துக் கல்லுந்தடியுமான வளவிலும், பீ⁴தியில் இவர்கள்பக்கல் ப்ரதிகூலஶங்கையின்றிக்கே வந்தான். (ந ஶட²: பரிஸர்பதி) பரிஸர்பணமாவது-பரிஸ்தம்ப⁴நம். தனக்குஒர் அபாஶ்ரயந்தேடி வருவாரைப்போலே கிட்டவந்தான். (ராக்ஷஸோபஸ்தி²தி) என்று-நம்மைமதியாதே மேலிட்டுவந்தானென்று முதலிகளும் ஶங்கிக்கும்படியிறே கிட்டிக்கொண்டு நின்றது. இப்படியோ து³ஷ்டபா⁴வனுடையபடி யிருப்பது. (நசாஸ்ய து³ஷ்டா வாக³ஸ்தி) இவன்வாக்³வ்யாபாரத்தில் தளப்பமில்லை. து³ஷ்டருடையவாக்³வ்யாபாரம் ஸ்வநாஶஸூசிதமாயிறே யிருப்பது. (தஸ்மாத், ந ஹி, நாஸ்தி ஸம்ஶய:) எனக்கேயல்ல, அத்யந்தப⁴யஶங்கிகளுக்கும் இவன் விஷயத்தில் ஶங்கைவேண்டா. ௮௫.

தாத்பர்யம். இவன் துஷ்டனாகில், இவனுக்குப்ப்ராதிகூலத்தைப் பண்ணயத்நித்த நம்ஸைந்யத்தில் ப்ரதிகூலபுத்தியில்லாமலும் பயமில்லாமலும் வரமாட்டான்; சொல்லும்போது தழதழத்தல்லதுசொல்லான்; இவனிடத்தில் இக்குணங்களில்லாமையால் இவனை ஸந்தேஹிக்கவேண்டுவதில்லை.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்³த⁴காண்ட³ம், ௧௭-ம் ஸர்க³ம், ௬௨-ம் ஶ்லோகம்.

அவதாரிகை. அவன் விப்ரலம்ப⁴த்தை மெய்யாக நினைத்துச் சொல்லுகிறாயென்று முதலிகளுடைய நினைவாகச்சொல்லுகிறான்.

ஶ்லோ.— ஆகாரஶ்சா²த்³யமாநோऽபி ந ஶக்யோ விநிகூ³ஹிதும் |
ப³லாத்³தி⁴ விவ்ருணோத்யேவ பா⁴வமந்தர்க³தம் ந்ருணாம் ॥ ௮௬.

அர்த்தம். ஆகார:-சரீரவிகாரம், சா²த்³யமாநோऽபி-மறைக்கப்பட்டாலும், ந்ருணாம் - மனுஷ்யர்களுடைய, அந்தர்க³தம்-உள்ளிருக்கிற, பா⁴வம் - அபிப்ராயத்தை, ப³லாத் - பலத்தினாலே, விவ்ருணோத்யேவ-ப்ரகாசிப்பித்தேநிற்கும். ஹி-ஆகையால், விநிகூ³ஹிதும் - மறைக்க, ந ஶக்ய: - ஸாத்யமன்று.

வ்யா. (ஆகார:) ஶரீரவிகார:, (சா²த்³யமாநோऽபி) சா²தி³க்கக்கடவதாக இவன் ப்ரவர்த்தித்தாலும். (ந ஶக்யோ விநிகூ³ஹிதும்) தந்ஸ்வ அந்யாகாரித்திருக்கையாலே இவனால்மறைக்கப்போகாது.

ஸாஹஸேதேந" என்று - அவன் துடித்துவந்த வரவுக்கு ஸத்ருஶமாம்படி சடக்கென வேணும். (கார்யவிதாம்வர) கார்யாணாமுசிதமாகவும் கர்த்தவ்யங்களை யறியுமவர்களுக்குவரணீயரன்றோ தேவர். அதவா (தேஶகாலோபபந்நஞ்ச கார்யம் க்ஷிப்ரம் ப்ரயோகேணாபி ஸம்ஹிதம் ஸபலம் கரோதி) கர்த்தவ்யஜ்ஞாநமுடைய புருஷன், தேஶகாலங்களுக்கு உசிதமான கர்த்தவ்யங்களை ப்ரயோகேண அபிஸம்ஹிதமாக்கி ஸபலமாகப்பண்ணுகிற்குமிறே யென்றுமாம். (கார்யவிதாம்வர) கர்த்தவ்யஜ்ஞாநமுடையார்படி. இதுவாறுல் அவர்களுக்கு வரணீயரான தேவர்க்கு அநுஷ்டாநமின்றிக்கே யொழியக்கடவதோ. ௮௭.

தாத்பர்யம்:—கார்யவிமர்சையுள்ளவன், தேசகாலங்களுக்குசிதமாகக்கார்யத்தை யனுஷ்டித்து அதின் பலத்தையடைவன்; கார்யவிமர்சிகளில் தலைவரானதேவர் அதை உபேக்ஷிக்கலாமோ?

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

யுத்தகாண்டம், ௧௭-ம் ஸர்க்கம், ௬௪, ௬௫-ம் ஶ்லோகங்கள்.

---

அவதாரிகை. பந்துக்களையும் ஐஶ்வர்யத்தையும் விட்டு வெறுமனே நம்பக்கல் மித்ரதையே ப்ரயோஜநமாக வரக்கூடுமோ வென்னில்; அது கூடாதென்றிருந்தீராகிலும் ஶாத்ரவநிரஸநபூர்வகமாக நம்பக்கலிலே ராஜ்யத்தை யபேக்ஷித்துவரக்கூடும்; அப்போதும் பரிக்ராஹ்யனென்கிறான் உத்யோகமித்யாதியால்.

௬௪. உத்யோகம் தவ ஸம்ப்ரேக்ஷ்ய மித்யாவ்ருத்தஞ்ச ராவணம்।
வாலிநஞ்ச ஹதம் ஶ்ருத்வா ஸுக்ரீவஞ்சாபிஷேசிதம்॥ ௮௮.
ராஜ்யம் ப்ரார்த்தயமாநஸ்து புத்திபூர்வமிஹாகத:।
ஏதாவத்து புரஸ்க்ருத்ய வித்யதே தஸ்ய ஸங்க்ரஹ:॥ ௮௯.

அர்த்தம்.—தவ - உம்முடைய, உத்யோகம் - யத்நத்தையும், மித்யாவ்ருத்தம் - கெட்டசர்யையையுடைய, ராவணஞ்ச - ராவணனையும், ஸம்ப்ரேக்ஷ்ய - பார்த்து, ஹதம் - அடிக்கப்பட்ட, வாலிநஞ்ச - வாலியையும், அபிஷேசிதம் - பட்டாபிஷேகம் பண்ணப்பட்ட, ஸுக்ரீவஞ்ச - ஸுக்ரீவனையும், ஶ்ருத்வா - கேட்டு, ராஜ்யம் - தேசத்தை, ப்ரார்த்தயமாநஸ்து - அபேக்ஷித்தவனாய், புத்திபூர்வம் - அறிவை முன்னிட்டு, இஹ - இங்கே, ஆகத: - வந்தான், ஏதாவத்து - இவ்வளவையே, புரஸ்க்ருத்ய - முன்னிட்டு, தஸ்ய - இவனுடைய, ஸங்க்ரஹ: - ஸ்வீகாரம், வித்யதே - செய்யத்தக்கதாயேயிருக்கிறது.

௨௫ம் ஹநுமத்வாக்ய ஸாரம் — உத்யோகம் தவஸம்ப்ரேக்ஷ்ய.

வ்யா. அவன் - ராஜ்யாஶை பண்ணிவருகைக்கு ஹேது சொல்லுகிறது. (தவ உத்யோகம் ஸம்ப்ரேக்ஷ்ய) கரதூஷணத்ரிஶிராக்கள் முதலான பதினாலாயிரம் ராக்ஷஸரையும் மூன்றேமுக்கால் நாழிகையிலே தனியே அழியச்செய்த தேவர், வெளிநிலமான கடற்கரையிலே ஸந்நிவேசமாக இட்டுக்கொண்டிருக்கிற ஒருபாட்டைக் கண்டு. (மித்யாவ்ருத்தம் ச ராவணம், வாலிநஶ்ச வதம் த்ருஷ்ட்வா ஸுக்ரீவம் சாபிஷேசிதம் ராஜ்யம் ப்ரார்த்தயமாநஶ்ச புத்திபூர்வமிஹாகத:) தேவர்க்கு எதிரியான ராவணனுடைய மாயா வ்யாபாரத்தையும், ராவணனிலும் அதிப்ரபலனான வாலியை ஓரம்பாலே உம்மை யாஶ்ரயித்த தம்பிக்காக அழியச்செய்த படியைக்கேட்கையாலும், வாலியினுடைய ராஜ்யத்தில் உமக்கு நசையின்றிக்கே தம்பிக்கே கொடுத்தபடியாலும், ராவணனை யழியச்செய்து ராஜ்யத்தைத்தருவாரென்று ராஜ்யகாங்க்ஷியாய்க்கொண்டு வருகையாலே ப்ராஜ்ஞனல்லன்; ஸங்க்ராஹ்யன். (யதாவத்த்வ பரீக்ஷ்யதாம் ஶக்யஸ்ஸ ஜ்ஞாதும் விதீயதே) நமக்கு அப்படியே பந்துவாய் வந்தானென்னுமிடம் உம்முடைய பரீக்ஷத்துக்கு ப்ரஜ்ஞநீயமானாலும், யதாவஜ்ஞாத்ரத்தை முன்னிட்டாகிலும் இவனுடைய ஸங்க்ரஹம் கார்யமே. ப்ரயோகத்தில் தாத்பர்யம் ஸம்ப்ரதாயம், வாக்யத்தில் தாத்பர்யம் ஸாதாரணமாயும். அஅ, அகூ.

தாத்பர்யம்:—பிறர்க்குச் செய்யவரிதான தேவர் யத்நத்தையும், ராவணன் மாயையையும் பார்த்து, தேவர் துஷ்டனானவாலியைக்கொன்று அவன் ராஜ்யத்தை ஆஶ்ரிதரான மஹாராஜர்க்குக்கொடுத்தீரென்று கேட்டு, அப்படியே தன் தமையனைக் கொன்று தனக்கு ராஜ்யத்தைக்கொடுப்பீரென்றெண்ணி இங்கேவந்தான்; இவ்வளவை முன்னிட்டாவது இவனை யங்கீகரிக்கவேணும்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

யுத்தகாண்டம், கஎ - ம் ஸர்க்கம், சுகூ - ம் ஶ்லோகம்.



அவதாரிகை. ஆக இப்படி லோகவ்யவஸ்தையாலும் இவன் ஸங்க்ராஹ்யனென்னுமிடத்தைச் சொல்லி, மேல் இவனுடைய ஹ்ருதயத்தை உபபாதித்துக்கொண்டு உக்தத்தை நிகமிக்கிறான்.

௬௭. யதாசக்தி மயோக்தம் து ராக்ஷஸஸ்யார்ஜவம் ப்ரதி ।
ப்ரமாணம் த்வம் ஹி ஸர்வஸ்ய ச்ருத்வா புத்திமதாம்வர ॥

அர்த்தம்.—ராக்ஷஸஸ்ய - ராக்ஷஸ ஜாதியானவிபீஷணனுடைய, ஆர்ஜவம் ப்ரதி - குடிலமில்லாமையைக்குறித்து, மயா - என்னாலே, யதாசக்தி - புத்திபலத்தை அதிக்ரமியாமல், உக்தம் - சொல்லப்பட்டது. புத்திமதாம் - புத்திமான்களுக்கு, வர - ஸ்ரேஷ்டரே! த்வம் - நீர், ச்ருத்வா - கேட்டு, ஸர்வஸ்ய - ஸமஸ்தத்துக்கும், ப்ரமாணம் ஹி - நிர்ணயிக்கத்தகுந்தவரன்றோ?

வ்யா. (ராக்ஷஸஸ்ய ஆர்ஜவம்ப்ரதி) முதலிகள் ஜாதிதோஷத்தைப்பற்றி சங்கிக்கிற இவனுடைய ஆர்ஜவத்தைக்குறித்து. (மயா) வாநரஜாதீயனான என்னாலே. (யதாசக்தி உக்தம்) யதாமதி சொல்லப்பட்டது. (புத்திமதாம்வர) ஸர்வஜ்ஞரும் ஸர்வசக்தியும் ஸகலவேதசாஸ்த்ரங்களையும் ஸ்வதஸ்ஸித்த ஆறியும் தேவரீரேயிறே இவனுடைய புத்தியறிகைக்கு சக்தர். (ச்ருத்வா ஸர்வஸ்ய ப்ரமாணம் த்வம் ஹி) இவனுடைய மாநாயிக்யமென்ன, ஸாரஸ்யமென்ன, ஸ்வீகாரமென்ன, இவை நான் விண்ணப்பஞ்செய்யக்கேட்டாலும் அவையெல்லாவற்றுக்கும் நிர்ணாயகர் தேவரீரேயிறே. ச்ருதியை ஸ்ம்ருதி பின்செல்லுமாப்போலே, அடியோங்கள் தேவரீர் திருவுள்ளத்தைப் பின் செல்லுமித்தனையென்று கருத்து. ௬௭.

தாத்பர்யம்:—வானரர்கள், இவன் ஜாதியைப்பார்த்து இவனை துஷ்டனென்கிறார்கள்; நான், ஸ்வபாவத்தினால் இவன் துஷ்டனல்லன் அநுகூலனென்று என்புத்தியுள்ளவரையில் யோசித்துச்சொன்னேன்; இவைகளையறிய தேவர் ஸமர்த்தராகையால் இவைஎல்லாவற்றையும் தேவரீரே நிச்சயிப்பீரன்றோ?

இதி ஸ்ரீமத்ராமாயணே யுத்தகாண்டே ஸப்ததச: ஸர்க்க:.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், ௧௮-ம் ஸர்க்கம், ௧-ம் ச்லோகம்.

---

அவதாரிகை. முற்பட மஹாராஜர் வார்த்தையாலே க்ருத்தைத்தாவரான பெருமாள், இப்போது திருவடிவார்த்தையாலே ப்ரஸந்நராய், முதலிகளைக்குறித்து ஒருவார்த்தைசொன்னாரென்கிறது முதல் ச்லோகம்.

௨௦. ஸ ராம: ப்ரஸந்நாத்மா ச்ருத்வா வாயுஸுதஸ்ய ஹ |
ப்ரத்யபாஷத து3ராத4ர்ஷ: ச்ருதவாநாத்மநி ஸ்தி2தம் || ௯௧.

அர்த்தம் —ஸ - அதுக்குப்பிற்பாடு, து3ராத4ர்ஷ: - ஸ்வமதத்தில் நின்றும் சலிப்பிக்கத்தகாதவராய், ச்ருதவாந்-கேட்கப்பட்ட உபாக்யானங்களையுடையரான, ராம: -ஸ்ரீராமன், வாயுஸுதஸ்ய-வாயுவின் பிள்ளையான ஹநுமானுடைய, (சொல்லை), ச்ருத்வா-கேட்டு, ப்ரஸந்நாத்மா - நிர்மலமானமநஸ்ஸையுடையராய், ஆத்மநி - தன்மநஸ்ஸில், ஸ்தி2தம் - இருந்ததை, ப்ரத்யபாஷத - பதில்சொன்னார்.

வ்யா. (ஸ ராம:) ஸநாதநம் பெருமாள்உளராானார். அதாகிறது-ரக்ஷகத்வமே ஸ்வரூபமாகையாலே, சரணமென்றபோதே ரக்ஷிக்கப்பெறாத ஸ்வரூபஹாநிபோகை. ஸம்ஸாரிசேதநனுக்கு ஸம்ருத்3தி4 ஜ்ஞாநாஜ்ஞாநங்களாலே ஸத்தாஸத்தாவங்கள்போலேயிறே, ரக்ஷகனுக்கு ரக்ஷகத்வஸித்3தி4யாலே ஸத்தாவமும், தத3பா4வத்தாலே அஸத்தாவமும். ஸர்வப்ரத்யக்ஷணத்துக்கு வகாஹமாக வக்ரவதித்திருமகனாய்வந்து அவதரித்த தாம் ஆச்ரயணோந்முகனாய்வந்தவனை விஷயீகரியாமையாலே இலராய், திருவடி வார்த்தையாலே யுளரானாரென்றுமாம். (ப்ரஸந்நாத்மா) ப்ரஸந்நமநா: - மதியுண்டானவாறே மநஸ்ஸுமுண்டாயிற்று. அதாவது-ஸுக்3ரீவர்ஜர் வார்த்தையாலே கலங்கின திருவுள்ளம் ப்ரஸந்நமாய், "நிலைபெற்றென் னெஞ்சம்பெற்றதுநீடுயிர்" என்கிறபடியே, ஸமுத்3ரத்தில்ஆஸ்ரிதரைப்போலே யானொன்கை. (வாயுஸுதஸ்ய ஆத்மநிஸ்தி2தம். ச்ருத்வா) ஸர்வப்ராணிப்ராணநஹேதுவான வாயுவினுடைய தநூஜனோவேதநஸ்நேஹத்தாலே யதாஹமநநின வத்ஸலனுடைய நெஞ்சிற் கிடந்ததைக்கேட்டு.(ஸ்வாத்மநிஸ்தி2தம் வாயுஸுதஸ்ய ச்ருத்வா) தம்முடைய திருவுள்ளத்திற்கிடந்தபடியே திருவடிசொல்லக்கேட்டு என்றுமாம். (ஹ) ஒருவன், ஸர்வரக்ஷகனுக்குத் தன்வார்த்தையாலே ரக்ஷகனாவதே! என்று ஐவ்ஷி கொண்டாடுகிறான். (து3ராத4ர்ஷ:) ஸர்வவஸ்துக்களாலே அப்ரத்4ருஷ்யராய் ஸ்வஸித்3தா4ந்த ஸஞ்சயராானார். (ச்ருதவாந்) வஸிஷ்டா2திகள் பக்கல் தமக்குண்டான ச்ருதங்கள் உதவிற்று. அதாவது-கபோதகண்வோபாக்யாநாதிகள்.(ப்ரத்யபா4ஷத) முதலிகளைக்குறித்து ப்ரதிவசநஞ்சொரானார். (ஆத்மநிஸ்தி2தம் ப்ரத்யபா4ஷத) என்றுமாம். தம்முடைய திருவுள்ளத்திற்கிடந்த அர்த்தத்தை முதலிகளுக்கு அருளிச்செய்தார்,

தாத்பர்யம்:—அங்கதன் முதலானோர் ஸ்வமதத்துக்கு விருத்தமாக உபந்யஸித்த யுக்திகளுக்குக் கலங்காமல் ஸ்வமதத்தில் உறுதியையுடையராய், வஸிஷ்டாதிபெரியோர்களிடத்தில் சரணாகத ஸம்ரக்ஷணம் பரமதர்மமென்று உபாக்யான முகங்களால் கேட்டறிந்தவருமான ஸ்ரீராமன், ஹநுமான் சொன்ன வார்த்தையைக் கேட்டுப்பின்பு ப்ரஸந்நஹ்ருதயராய்த், தந்திருவுள்ளத்திலிருந்த வார்த்தையை முதலிகளுக்கு உத்தரமாகச்சொல்லியருளினார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

யுத்தகாண்டம், ௧௭-ம் ஸர்க்கம், ௨-ம் ஶ்லோகம்.



அவதாரிகை. உங்கள் வாக்யத்தை நான் கேட்டவோபாதி இவன் விஷயமாக நான் சொல்ல நினைக்கிற வாக்யத்தையுங் கேட்டுத்தரவேணுமென்று முதலிகளை இரக்கிறார்.

௨௦. மமாபி து விவக்ஷாஸ்தி காசித்ப்ரதி விபீஷணம் |
ஶ்ருதமிச்சாமி தத்ஸர்வம் பவத்பி: ஶ்ரேயஸி ஸ்திதை: || ௬௨.

அர்த்தம்.—விபீஷணம்ப்ரதி - விபீஷணனைக்குறித்து, மமாபி - எனக்கும், காசித் - ஒரு, விவக்ஷா - சொல்லவேணுமென்கிற இச்சை, அஸ்தி - இருக்கிறது. ஶ்ரேயஸி-யசஸ்ஸிலே, ஸ்திதை:- நிலைநின்ற, பவத்பி: -உங்களாலே, தத் - அந்த, ஸர்வம் - எல்லாவற்றையும், ஶ்ருதம்-கேட்கப்பட்டதாக, இச்சாமி-ஆசைப்படுகிறேன்.

வ்யா. (மமாபி து) எல்லாரினுந் தம்முடைய மதத்துக்குண்டான விஶேஷத்தைச் சொல்லுகிறார். (காசித்விவக்ஷாஸ்தி) ஒரு விவக்ஷை யுண்டாகாநின்றது. (விபீஷணம்ப்ரதி)-விபீஷணனைக் குறித்து ஒரு விவக்ஷை யுண்டாகாநின்றதென்கை. (தத்ஸர்வம்ஶ்ருதமிச்சாமி) விவக்ஷாமதமாய், "மித்ரபாவேந" என்று தொடங்கி, அவஶ்யவர்ஜ்ஜமான அம்ஸஜாதத்தை இதுவே அம்ஸமென்று ஸ்வீகரித்திலீகோளாகிலுஞ் செவிதாழ்க்க வமையுமென்று இரக்கிறார். (ஶ்ரேயஸிஸ்திதைர்பவத்பி:) என்னுடைய ஶ்ரேயஸ்ஸிலேநிலைநின்றத்தாலே ஸத்தை யுண்டாகாநின்றுள்ள உங்களாலேயென்றுமாம்.

தாத்பர்யம்:—விபீஷணன் விஷயமாக எனக்கும் ஒன்று சொல்லவேணுமென்று தோற்றுகிறது. நீங்கள் என்னபிவ்ருத்தியைக்கோருகிறவர்களாகையால், உங்களுடன்யோசித்துச் செய்யவேணுமென்று இச்சிக்கிறேன். இதை நீங்கள் கேட்கவேணும்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

யுத்தகாண்டம், ௧௮-ம் ஸர்க்கம், ௩-ம் ச்லோகம்.

---

அவதாரிகை. அநந்தரம் கடற்கரையிலே வாநரஸைந்யத்திலே ஸர்வப்ராணி ப்ராணநிர்ஹேதுகமான தன் ப்ரக்ருதியை ப்ரகாசிகமாக வெளியிடுகிறார்.

௩. மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந ।
தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அகர்ஹிதம் ॥

அர்த்தம். மித்ரபாவேந- விச்வாஸ யோக்யனுடையவ்யாபாரத்தாலே, ஸம்ப்ராப்தம் - நெருங்கிவந்தவிவனை, கதஞ்சந - ஒருபடியாலும், ந த்யஜேயம் - விட ஊஹைகூட எனக்கில்லை, தோஷோ யத்யபி - தோஷமிருந்தாலும், தஸ்ய - அவனுக்கு, ஸ்யாத் - கார்யஸாதகமாகும்; ஏதத் - இவன்பரிக்ரஹம், ஸதாம் - ஸத்புருஷர்களுக்கு, அகர்ஹிதம் - நிந்த்யமாகமாட்டாது.

வ்யா. (மித்ரபாவேந). "மிதாத் த்ராயத இதி மித்ரம்" என்று வ்யுத்பத்தியானபோது, ஸர்வேச்வரன் பண்ணின உபகாரத்தை ஸ்மரித்து, அதுக்கு ஸத்ருசமான ப்ரத்யுபகாரம் பண்ணமுடியாமையாலே இம் மித்ரசப்தத்துக்கு அதுபொருளன்று. மித்ரமாவது- விச்வஸநீயஸ்ஸும். "ந மித்ரே யத்ர விச்வாஸ:" என்னக்கடவதிறே. அதாவது- ஸந்நிகர்ஷப்ராப்தி ஹேதுகமாக, "ராகவம் சரணம் கத:" என்கை. அது விபீஷணர்க்கும் பொதுவன்றோவென்னில்; (பாவேந) பாவ:- க்ரியா. விச்வஸநீயருடைய உக்திவ்யாபாரமே அமையும். (ஸம்ப்ராப்தம்) இந்த உக்திமாத்ரத்திலேயானால், அரைகுலையத் தலைகுலைய மடுக்கரையிலே சென்றாற்போலே நமக்குச்செல்லவேண்டியிருக்க, இங்கேவந்து சொன்ன விடம் நம்கார்யமன்றோ செய்தது. (ந த்யஜேயம்) இவன்வந்த வரவுதன்னையே ச்லாகிக்கவேண்டியிருக்க விட ஸம்பாவநையில்லை. ஸம்பாவநாயாம் லிங். விடஸம்பாவநையுண்டாகிலன்றோ ஆராய வடுப்பது. விட ஸம்பாவநையின்றிக்கே யொழிகிறதென்னென்னில்; இவனைவிட்டால் உளராவார்க்கன்றோ ஆராயஸம்பாவநை யுள்ளது. பரீக்ஷியாதே ஸ்வீகரிக்குமவர்கள் தந்தாமை உபேக்ஷித்து ஸ்வீகரிக்கிறார்களன்றோ? உம்மை உபேக்ஷித்து அவனை ஸ்வீகரிக்கப்பார்த்தீராகில், உம்மைவிட்டு பரிக்கமாட்டாத எங்களை விடுகையன்றோ? அதாவது ஏதென்னில்; (கதஞ்சந) அப்படி ரூக்ஷணங்களைச்செய்யவும் இவனை விடேனென்கிறார். ராவணஹ்ருதா, ராக்ஷஸன் ச்லோகஹயக்ஷரனென்னுமிடம் ஸம்ப்ரதிப

ஷம்; அஸ்வயதோஹநாஶி கர்த்தாவாகவுங் கூடும்; இப்படிதோஷயு க்தனாயிருக்கிற இவனை ஸ்வீகாரத்தாலும் விடோமென்கிறதெ ன்னென்னில்; (தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்) தோஷங்களிவனு க்குண்டேயாகிலும், ஶரணாகதிக்கு ஜநவ்ருத்த நியதியில்லாமையா லே ப்ரவ்ருத்திபண்ணின இவன்பக்கல் என்பக்ஷத்தால் தோஷமில்லை. (தஸ்ய யத்யபி தோஷ:, ததாபி ந த்யஜேயம்) ஸ்வயதோஹநாஶிகர்த்தா வென்று உங்கள் பக்ஷத்தாலே தோஷமுண்டேயாகிலும், நான் அவ னைவிடேன். இவனை துஷ்டனென்றறிந்திருக்கச்செய்தே ஸ்வீகரித்தா ல்நாட்டார் கர்ஹியார்களோவென்னில்; (ஸதாமேதத் அகர்ஹிதம் ஸ்யாத்) அஸாதுஜநஸ்பர்ஶிகளான உங்களுக்கு கர்ஹிதா விஷயமேயா கிலும், ஸத்துக்களுக்கு இவன் ஸ்வீகாரம் அகர்ஹிதமாகக்கடவது. அதவா, (தோஷோயத்யபி) தோஷமுண்டாகில் அவனுடைய தோஷ மன்றோ (ஸ்யாத்) ப்ராமாணிகநாயாம்ஶிகீ-நாம் ப்ராப்தித்திருக்குமத ன்றோ. ராவணனை ரக்ஷித்தால் அது ராவணத்துக்கு விலையாய், து ஷ்டனை ரக்ஷித்தோமென்கிற ஏற்றம் நமக்குக்கிட்டுமோ? நிரூபி த்து, "ஸ்யாத்"-என்கிறீரே ராஜனென்கிறீரே. அதவா, (தோ ஷோயத்யபி) நம்மை நலியநினைத்து நாம் ஸ்வீகரிக்கைக்காக, "ரா வணம் ஶரணம் கத:" என்றானாகில், (தஸ்ய ஸ்யாத்) அவன் நினைத்த கார்யந்தலைக்கட்டிற்றாகிறது. மேல் அவோதாவ்யாக்யானமாகை யாலே இதுவே பொருளாக உசிதமென்று பட்டரருளிச்செய்வர். அஸ்மிந்நர்த்தே, "தஸ்யாபிவத்யஸ்ய ப்ரபந்நம் ப்ரதிபத்ய யூதி" இதி. இப்படி துஷ்டனாயிருக்கிறவனை விடாதொழிகிறது-விடில்ப்ரத்யவா யமுண்டென்றோ; பராபராஷாஸஹிஷ்ணுக்காகவோ; பாவக்ஷபா ஸஹமாகவோ வென்னில் ; (ஸதாமேதத் அகர்ஹிதம்) இவையொன் றுமல்ல. ஸந்தோஷத்தில் நம்மை சீச்சீ யென்னுமைக்காக. ஸத்து க்களாகிறார், தந்தாமையழிய மாறியாகிலும் பிறரைநோக்கும் அபோ த விஶ்வாமித்ராதிகள்.

### இதற்கு தனிஶ்லோக வ்யாக்யானம்



அவதாரிகை.

பெருமாள் தர்ஶநவிருந்தாரென்று ஆழியிருக்கை யன்றிக்கே படைகூட்டிக் கடற்கரையிலே குறுகவிட்ட வநஜ்ரம், ராவண

னும், தன் பாஹுக்களையும் ஸஹிவ ஸாமந்தவர்ரோஹித வஸ்த்ரத்தையும் திரட்டிக் குறுகவிருந்து காரியவிசாரம் பண்ணுகிறவளவிலே, ப்ரஹஸ்தமஹாபார்ஶ்வேந்த்ரஜித் ப்ரமுகவரானவர்கள், அவன்சோற்றையுண்டு அவனுக்கு கஹிதங்களைச்சொல்ல, இதுக்கு ராவணனும் மேலெழுத்திட்டு, தோளும் மார்பும் பார்த்து $இறுமாந்திருக்க, “நிஶாசரேந்த்ரஸ்ய நிஶம்ய வாக்யம் ஸகும்பகர்ணஸ்ய ச கர்ஜிதாநி | விபீஷணோராக்ஷஸராஜ முக்யமுவாசவாக்யம் ஹிதமர்த்தயுக்தம்” என்று-விடவொண்ணாக் §குடற்றுடக்கைப்பார்த்து, இவனுடைய வசநத்தைம் தன்னுடையதாகக்கருதிச் சடக்கென இத்தை வ்யவஹரிக்கவேணுமென்கிற பாரியாலே, “யாவந்நக்ருஹ்ணந்தி ஶிராம்ஸிபாணா:” என்று-சடக்கென இவனிசையும்படி ப்ரத்யாய ப்ரஸாரமாக, “ப்ரதீயதாம் தாஶரதாய மைதிலீ” என்று-ஸ்ரீயஃபதியாய் ஸர்வஸ்வாமியானவர்க்கு †எலிஎலும்பனை நீ கொடுக்க வேண்டுவதில்லை, அவர்தம்முடைய உடைமையை அவரதாக இசையவமையும்; என்று வார்த்தை சொல்ல, இத்தைக்கேட்ட இந்த்ரஜித்தானவன், “கிந்நாம தே தாத கநிஷ்டவாக்யம் அநர்த்தகஞ்சைவ ஸுபீதவச்ச | அஸ்மிந் குலேயோபி பவேந்நஜாத ஸோபீத்ருஶம் நைவ வதேந்நகுர்யாத்” இளையவர் சொன்ன வார்த்தை யிருந்தபடியென்; காரியத்திலும் இளமை தோற்றியிருந்தது; இக்குலத்திற் புகுந்தவர்களு மிவ்வார்த்தை சொல்லுவார்களோ என்று நெகிழவார்த்தைசொல்ல, “பாத்ரவ்ருவாதே நஹி ராவணஸ்ய ஶக்ரஜித்நித்ரமேவோடவிஶத்ரு:” என்று-வாடா! ராவணனுக்குப் பெருமாளோ ஶத்ரு; ஶோணித வ்யவாயம்போலே மகனென்று பேரையிட்டு உள்ளேநின்று கழுத்தறுக்கிற நீயன்றோ ஶத்ரு; “ஸ்வஸ்ய வஸ்யஶ்ச ஸர்வநாஶாய திஶ்ய” என்று-ஶத்ருக்களைத் தலையறுக்கப்பார்க்கி லுன்னையல்லவோ தலையறுக்க வடுப்பது; என்றாற்போலே சிலவார்த்தைகளைச்சொல்ல, “ஸுப்ரவீதம் வாக்யம் ராவண: காலசோதித:” என்று தொடங்கி, ராவணன், கூவிதனாய் மகனுக்குப்பரிந்து, “ஜாநாமிஶீலம் ஜ்ஞாதீநாம் ஸர்வலோகேஷு ராக்ஷஸ | ஹ்ருஷ்யந்தி வ்யஸநேஷ்வேதே ஜ்ஞாதீநாம் ஜ்ஞாதய ஸதா || ப்ரதாநம் ஸாதநம் வைத்யம் தர்மஶீலஞ்ச ராக்ஷஸ |

---

$ மிகவும்ஸந்தோஷித்திருக்க. §குடற்றுடக்கை-சரீரஸம்பந்தத்தை,
† எலிஎலும்பனை - துர்ப்பலனை.

ஜ்ஞாதயோ ஹ்யவமந்யந்தே ஶூரம் பரிபவந்தி ச ॥ நித்யமந்யோந்ய ஸம்ஹ்ருஷ்டா வ்யஸநேஷ்வாததாயிந: | ப்ரச்சந்நஹ்ருதயா கோரா ஜ்ஞாதயஸ்து பயாவஹா:" என்று-ஜ்ஞாதிகளுடைய ஸ்வபாவமறியோமோ? "ஶ்ரூயந்தே ஹஸ்திபி: கீதாஶ்லோகா: பத்மவநே க்வசித்" இதுக்குச்சில உவமையெகளையும் சொல்லி, "யோऽந்ய ஸ்த்வேவம்விதம் ப்ரூயாத்வாக்யமேதந்நிஶாசர । அஸ்மிந்முஹூர்தே ந பவேத்த்வாம் து திக்குலபாம்ஸந" என்று-உன்னையொழியவேறொருத்தனிந்த வார்த்தை சொன்னானாகில், இப்போதே வேலின் முனையிலே யாதல், ஆனையின் கொம்பிலேயாதல், கழுவின் தலையிலே யாதலாயொழிக்தானிறே; "நதாராக்ஷஸ வேஷ்டித:" என்னும்படி இக்குலத்துக்கு † இழுக்காய்ப்பிறந்தாய்; உன்னை நாம்வேண்டோம்; என்கண் முகப்பில்நின்றும் ஓடிப்போவென்ன; இவரும், ஜ்யேஷ்ட வசநாதிக்ரமம்பண்ணலாகாதென்று, "உத்பபாத கதாபாணிஶ்சதுர்பி: ஸஹராக்ஷஸை:" என்று-ஸம்ஸாரஸாகரத்தைக் கடக்கைக்கு ஒருதெப்பம்போலே யிருக்கிற கதையும் தாமுமாய், சரவரணாத்யவயவங்கள்போலே யிருக்கும் நாலு ராக்ஷஸரும் தானுமாய் ராவணனைவிட்டபோதே எல்லாருக்கும் மேலானானென்றுதோற்றும்படி கிளம்பி, "அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந்" என்கிறபடியே, மேல்பெறப்புகுகிற கைங்கர்யஸ்ரீக்கடியுண்டாம்படி § விஷ்ணுபதத்தைப்பற்றி "ஆஜகாம முஹூர்தேந" என்றும்-"வரம்பொழிவந்தொல்லைக் கூடுமினோ" என்றும்-"ஒல்லை நீபோதாய்" என்றும்-பிறருபதேஶிக்கவேண்டாதபடி தானே சடக்கெனவந்து, "யத்ர ராமஸ்ஸலக்ஷ்மண:" என்று - விஶேஷணமாத்ரான இளையபெருமாள் திருமேனியிலே சாய்ந்து பெருமாளிருக்கிறவிடத்திலே, "நாகணைமிசை நம்பிரான் சரணே சரணமக்கு" என்றும் - "மம ப்ராணா ஹி பாண்டவா:" என்றும்-தலைக்காவலிலிருக்கிறவர்கள் காவல்துடிப்பாலே ஆகாஶத்திலே தோற்றினபோதே கண்டு, மஹாராஜருங்கூடியோடே, "ஹந்யதாமேஷ" என்று-கல்லுந்தடியுங் கொள்ள, "உவாச வசநம் ராஜா ஸுக்ரீவம் மஹாமதி:" என்

† இழுக்காய்-நீசனாய்.
§ விஷ்ணுபதத்தை-ஆகாசத்தை. பகவச்சரணத்தை.

ளும்-"மரங்களு மிரங்கும்வகை மணிவண்ணா ஓவென்று கூவுமால்" என்றுஞ் சொல்லுகிறபடியே, "ஸாலா நாஶ்ரு" என்று-இவர்களெடுத்தமரத்தோடு, "வாஸுதேவதரு" என்றும்-"ப்ருஹத்தரு" என்றும்-"நிவாஸவ்ருக்ஷ:" என்றுஞ் சொல்லுகிற பெரியமரத்தோடு வாசியற நெஞ்சிலே இரக்கம்பிறக்கும்படி பெருமிடறுசெய்து கூப்பிட்டு, "ராவணோ நாம துர்வ்ருத்தோ ராக்ஷஸோ ராக்ஷஸேஶ்வர:। தஸ்யாஹமநுஜோ ப்ராதா விபீஷண இதி ஶ்ருத:" என்று-ஸ்வதோஷத்தை முன்னிட்டு, "நிவேதயத மாம் க்ஷிப்ரம் ராகவாய" என்று-ராக்ஷஸர் நிமித்தமாக அஞ்சினார்க்குப்§ புகலிடமான குடிப்பிறப்புள்ள பெருமாளுக்கு, "ஸுமஹாத்மநே" என்றும்-"நின்றவா நில்லாநெஞ்சு" என்றுஞ் சொல்லுகிறபடியே, நெஞ்சிலாநுகூல்யம் பிரிவதற்குமுன்னே அறிவியுங்கோள்; "விபீஷணமுபஸ்திதம்" "அன்றேவந்தடைந்தேன்" என்கிறபடியே, நெஞ்சிலீரமில்லையாகிலும் கையிலீரமுலருவதற்குமுன்னே வந்தேனென்று வார்த்தை சொல்ல, "ஏதத்து வசநம் ஶ்ருத்வா ஸுக்ரீவோ லக்ஷ்மணாக்ரஜம்। க்ருத்தஸ்ய ராகவம் ஸம்ப்ருச்ச வாக்யமப்ரவீத்" மஹாராஜரும், "ஸஸ்வரேண மஹதா" என்று-அவன் கூப்பிட்டகுரல் பெருமாள் செவியில் படுவதற்குமுன்னேசென்று விலக்கவேணுமென்று கடுநடையிட்டோடி, ராவணாநுஜனுயிருப்பானொரு ராக்ஷஸன்வந்தான், வருகிறவிடந்தன்னில், "ஶரணம்" என்று- வ்யாஸமஹத்தைப்பண்ணினான்; இப்படிக்குவந்து தோற்றி சுகுணோத்கர்ஷம் பண்ணுதல் நலிதல் செய்யவந்தான், "தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே க்ஷமம்" என்று-கழுத்திலும் காலிலும் கோக்க வடுக்குமென்பது; அதுபெருமாள் பொறுத்தவாறே, "வத்யதாமேஷ தீவ்ரேண தண்டேந ஸசிவைஸ்ஸஹ" என்று-இவனைக்கொன்று பொகடவமையுமென்ன, இத்தைக்கேட்ட பெருமாள், "யதுக்தம் கபிராஜேந ராவணாவரஜம் ப்ரதி। வாக்யம் ஹேதுமதர்த்யம் ச ஸுக்ரீவ பரிஷஸ்தவம்" என்று- ‡வ்யாக்ரவாந

§ புகலிடமான - ரக்ஷகமான.

‡ ஒருபுலி, காட்டில் ஒருமனுஷ்யனைத்துரத்த, அவனோடி ஒருமரத்தின்மேலேற, அம்மரத்தின்மேலொருவாநரத்தைக்கண்டு பயப்பட, வாநரம் நீபயப்படவேண்டாவென்று அபயதாநம்பண்ண, பின்புஇவனிளைப்பால் அங்கு நித்ரைபோகையில், புலி, இவனிடத்திலநேகதோஷங்களைச் சொல்லி ‡மித்ரபேதம் பண்ணியும் வாநரமிவனை விடாமலிருக்க, பின்புவாநரம் நித்ரைபோகும்போது புலி இவனைமித்ரபேதம்பண்ண, இவனதைக்கேட்டுவாநரத்தைக்கீழேதள்ள, அதுகீழேவிழாமல் கொம்பைப்பிடித்து நிற்க, அப்பொழுது இவன்பயப்பட, இவனுக்கு அபயதாநம் பண்ணி ரக்ஷித்தது.

ரஸம்வாதத்திலே ஶரணாகதஸம்ரக்ஷணம் பண்ணின நீங்களும் ஶ ரணாகதவய நிமித்தமாக உங்கள் நாயனார் சொன்னவார்த்தைகளைக் கேட்டிகோளோ? "யதீஷ்டம்கபிராஜேந" நெருப்பென்ன வாய் வேமென்று ஐயப்படுவாரைப்போலே மஹாராஜர்சொன்ன பாசு ரம் தம்மாலநுஸந்திக்கவும் போகாமையாலே "யத" என்கிறார். "உக்தம்" தோழனுரித்தை நினைப்பது மன்றிக்கே சொல்லுவதுஞ் செய்வதே! "கபிராஜேந" செல்வர் சொல்ல வஞ்சாரென்றுண் டிறே. "கபிராஜேந" இவர் ரக்ஷகராக நன்றாக வுண்ணவிருந் தீர்கோள். "கபிராஜேந" ஜாதிப்ரயுக்தமான அறிவு கேடும், வைஷம்யத்தால்வந்த அறிவுகேடும், இரண்டுமுண்டிறே. "கபி ராஜேந ராவணாவரஜம்ப்ரதி" தந்தமயனைக்கொன்று முடிசூ டினதாம் கிடீர் இப்படிக்குவந்த ராவணன்தம்பியைச் சொல்லுகிறார் என்றருளிச்செய்ய, "ஊசுர்வம் ப்ரிப்ரகாஸ்தே ஸம் ஸம் தத்த நிஶ்சிதா:" என்று-முதலிகளும் தந்தாம் நினைவுகளைச்சொல்ல, இவை பெருமாள் திருவுள்ளத்துக்கு அஸஹ்யமாக, இத்தையறிந்த திருவடி யும் இப்பக்ஷங்களையெல்லாம் அநுவபத்திகளாலே உபேக்ஷித்து, "விபீ ஷணன் நிர்தோஷன் ஸ்வீகார்யன்" என்று ஸமர்த்திக்க, இத்தாலே வசநஸந்ததியாலே ஶ்ரமஸத்தாகரானபெருமாள், "அத விஷ்டு விவக்ஷாம்வித்தி கார்யஸ்த்ரிவிபீஷணம் । ஶ்ருதிமாஶ்ரித்ய தத்த்வஞ்ச ஸுவிச்ரேயஸி ஸ்திதை:" என்று-நாமும் சிலவார்த்தைசொல்லப்பா ராநின்றோம்; முதலிகளித்தைக்கேட்டுத் தரவேணுமென்று நீர்மை யாலே அபேக்ஷித்து, ஸதோஷனுகிலுமாம் நிர்தோஷனுகிலுமாம்; ஶரணாகதனானவனை ஒருகாலும் விடுவதில்லையென்று ஸ்வஸித்தா ந்தத்தை யருளிச்செய்கிறார்.

இவ்விபீஷண ஶரணாகதி தனக்கு, "அநந்யஸாத்யே ஸ்வாபீஷ்டே மஹாவிஶ்வாஸபூர்வகம் । ததேகோபாயதா யாச்ஞா ப்ரபத்தி: ஶரணாகதி:" என்கிற ஶரணாகதிலக்ஷணமுண்டோவென்னில்; லக்ஷணம் நேராக உண்டு. "ராவணோ நாம துர்வ்ருத்தோ ராக்ஷஸோ ராக்ஷஸேஶ்வர:। தஸ்யாஹமநுஜோ ப்ராதா விபீஷண இதி ஶ்ருத:" என்று-ஸ்வயமாஜிதமாயும் ராவ ணஸம்பந்தத்தாலும் தனக்குண்டானதோஷமுமயத்தையைச்சொ

ன்னபடியாலே, "ஸஹஸ்ரப்ராப்யா நாமாஶய:" என்னுமர்த்தமும் சொல்லுகிறது. பெருமாள் தமக்கு யுத்தஸாஹாய்யத்துக்காக அழைத்துவிட வந்தவனன்றிக்கே, "ராஜ்யம் ப்ரார்த்தயமாநஸ்ச புத்திபூர்வமிஹாகத:" என்று - தான் ராஜ்யம்வேண்டியவனாய், இங்குத்தைக்கொரு உபகாரமில்லாமையாலே, "அகிஞ்சந:" என்னுமர்த்தமுஞ் சொல்லுகிறது. "ஸோஹம் பருஷிதஸ்தேந தாஸவச்சாவமாநித:" என்றும் - "த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச" என்றும் - ப்ராதாவான ராவணனாலே நிரஸிக்கப்பட அநந்யகதியாய்ப்போந்தபடியாலே, அநந்யகதித்வமும் சொல்லுகிறது. "ராகவம் ஶரணம் கத:" என்று - பெருமாளையே உபாயமாகப்பற்றினபடியாலே "த்வமேவோபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதி: | ஶரணாகதி:" என்னுமர்த்தத்தைச்சொல்லுகிறது. ஆகையாலே லக்ஷணம் புஷ்கலம்.

மஹாபாரதத்திலே க்ருஷ்ண சரம ஶ்லோகம்போலே, ஸ்ரீராமாயணத்துக்கு இதொரு சரமஶ்லோகமாய் முடிவாகையாலே சரமமாகிறது. ஆகையாலே, சரமஶ்லோகமாகிறது. இங்கு ஸமுதாயத்திலே சரமமாம்படி யென்னென்னில்; ஸூத்ரங்களல்ல இவ்விடத்தில் சரமத்வத்துக்கு ப்ரயோஜகம்; அங்கு கர்மஜ்ஞாநாத்யுபாயங்களைப் பரக்க முன்னே விதித்து, பின்பு சரமோபாயமாக ப்ரபத்தியை விதிக்கையாலே சரமமாகவிருந்தது. இங்கும் ஸுக்ரீவ ஶரப ப்ரஹஸ்தாதிகள் விபீஷணஸ்வீகாரத்தைத் தனித்தனியேசொல்ல, அவற்றை யெல்லாமேகீகரித்து சரமமாக ஸித்தாந்தித்த ஶ்லோகமாகையாலே சரமமாகிறது. அங்கும் ஸௌஶீல்யம் ஐஶ்வர்யத்தை யறுக்கிறது; இங்கும் ஸௌஶீல்யம் ஐஶ்வர்யத்தை யறுக்கிறது, அங்கும் ஸேனைக்கு நடுவேநின்று சொன்னவார்த்தை; இங்கும் ஸேனைக்கு நடுவேநின்று சொல்லுகிறவார்த்தை; அங்கும் ஶோகநிவ்ருத்திக்காகச்சொன்னவார்த்தை. இங்கும்ஶோகநிவ்ருத்திக்காகச்சொல்லுகிறவார்த்தை. அங்குமொரு கோபாலவாக்யம்; இங்குமொரு§ கோபாலவாக்யம். அங்கும், "யச்ச்ரேயஸ்ஸ்யாந்நிஶ்சிதம் ப்ரூஹி தந்மே" என்று - ஶ்ரேயஸ்ஸைக்கேட்கச் சொன்னவார்த்தை; இங்கும், "ஶ்ரோதுமிச்சாமி தத்ஸர்வம் பவத்பி: ஶ்ரேயஸி ஸ்திதை:" என்று - ஶ்ரேயஸ்ஸைக் கேட்கச்சொல்லுகிறவார்த்தை.

---

§ கோபாலன் - பூமியைப்பாலநம்பண்ணுகிறராஜா.

அங்கு சரமச்லோகத்தில் இங்கு சரமச்லோகத்துக்கு வாசியுண்டு. அங்கு கேட்கிறவனுக்குத் தேர்மேலெழுநின்று சொன்னவார்த்தை; இங்குநிலத்திலேயிருந்து ப்ரதிஜ்ஞை தராய்ச் சொல்லுகிறவார்த்தை. அங்கு, "மாம் வ்ரஜ" என்று-தன்னைப்பற்றென்று ஶரண்யனாசைபட்டபடி சொல்லிற்று; இங்கு, "ப்ரபந்நாய" என்று-எதிரி*யுடன் பட்டுப்பற்றினபடி சொல்லுகிறது. அங்கு, "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்று-ஸர்வத்யாகம் பண்ணிற்று; இங்கு, "பரித்யக்தா மயா லங்கா மித்ராணி ச தநாநி ச" என்று-ஸர்வத்யாகம் பண்ணுகிறது. அங்கு, "ஷோடஶஸ்த்ரீஸஹஸ்ராணி" என்று-பஹுதார ஸங்க்ரஹம் பண்ணினவன் வார்த்தை; இங்கு, "ந ராமஃ பரதாராம்ஶ்ச சக்ஷுர்ப்யாமபி பஶ்யதி" என்று - ஏகதாரவ்ரதன் வார்த்தை. அங்கு, "பேதைக்குப்பொய்குறித்து" என்றும்-"ஒருவர்க்கும் மெய்யனல்லை" என்றும்-அஸத்யனான க்ருஷ்ணன் வாக்யம்; இங்கு, "ஸத்யவாக்யஃ" என்றும்-"ராமோ த்விர்நாபிபாஷதே" என்றும்-ஸத்யனான ராமன் வாக்யம். அங்குக் கையுமுழவுகோலுமான ஸாரதிவாக்யம்; இங்குக்கையும் வில்லுமான தாஶரதிவாக்யம், அங்கு ஶரணாகதாத்யவஸாயம் சொல்லிற்று; இங்கு ஶரண்யாத்யவஸாயம் சொல்லுகிறது. அங்கு, "ஶரணாகதனை பாபங்களில் நின்றும் விடுவிப்பேன்" என்றது; இங்கு, "நான்விடேன்" என்கிறது. அங்கு "ஸதோஷனை விடுவிப்பேன்" என்றது. இங்கு, "தோஷவானானாலும் விடேன்" என்கிறது. அங்கு, கார்யாதுரஸாரதியான க்ருஷ்ணஹ்ருதயஞ்சொல்லிற்று; இங்கு, ஸத்யஃஸத்யமான த்ருஷ்டஹ்ருதயஞ்சொல்லுகிறது. அங்கு, ப்ரதிபந்தகரின்றிக்கே இருக்க ரக்ஷித்தபடி சொல்லிற்று, இங்கு, ப்ரதிபந்தகருண்டாயிருக்கச் செய்தேயும் ரக்ஷித்தபடி சொல்லுகிறது.

இனி இஶ்லோகத்தால், பக்திவ்யவஸாயமாகிலுமாம், அபக்திவ்யவஸாயமாகிலுமாம்; நம்மைப்பற்றினவர்களை தோஷமுண்டேயாகிலும் விடுவதில்லையென்கிறார். இதெல்லாம்நீர்செய்யவேண்டுவது உம்மைப்ராப்யப்ராபகம் பண்ணிவந்துபற்றினாலன்றோவென்ன; *க.(ஸக்ருதேவ ப்ரபந்நாய) ஸோதரப்ராதாவான ராவணனையும்விட்டு நம்மையே ப்ராப்யமாகவந்துபற்றிநிற்கிற நிலைகண்டீரோயென்கிறார்.

* உடன்பட்டு-ஸம்மதித்து.

*௨. (ஶத்ருஹாவேந ஸம்வாதம்) நதஶத்ருஹாவேந. "வ்யா வஸத்ருதகித:" என்று·தோழனுர் ஶத்ரு வென்று சொல்லாதாகச்சொன்னுர்; ஶத்ருனேயேவந்தான்காணும். * ௩. (ஶத்ருஹாவேந) ⊕ ஒற்றனுய்வந்தானல்லகாணும்; ஶத்ருனுய்வந்தான். * ௪. (ஶத்ருஹாவேந) "ஶத்ராதாபத இதி ஶத்ரு:" என்று-பண்ணினவுபகாரத்தையளவிட்டு அதுக்கு ஸத்ருஶமான ப்ரத்யுபகாரம் பண்ணுகையிறே ஶத்ருஸ்வபாவமாகிறது; அப்படிக்குத்தாடகா தாடகேய விராத வாநக்ஷண கபந்த ப்ரப்ருதிகளைக்கொன்று கூறையாடி ப்ராதிகூல்யம்பண்ணி ஒரு உபகாரம் பண்ணுமையாலே ப்ரத்யுபகாரம் பண்ணவேண்டுவதில்லை. தேவரீர் தா ஸவகூரிக்கப் பார்த்தீராகில், "ஸஷ ஸபுஸஹஶதஸ்வஸர்வஶ:" என்றும் - "போகம் நீ யெய்திப்பின்னும் நம்மிடைக்கேபோதுவாயென்றபொன்னருள்" என்றுஞ்சொல்லுகிறபடியே, கொடுத்தருளுவது உஹயவிஶ்ருதியாதல், விஶ்ருதிரோனை தேவரையாதலாயிருக்கு மிதுக்கு ஸத்ருஶமாகப் பண்ணலாவதொரு ப்ரத்யுபகாரமில்லாமையாலே, ஶத்ருவமிவனுக்குண்டானபடியென்னென்ன; அது கேளீர் - சைத்யமாவது - பரஸம்ருத்திஸஹமான சித்தவ்ருத்திகூம்; ஆனபின்பு, நம்முடையபக்கலிலே இத்தனை ௐ உந்மேஷங்களைக்கண்டால் பொறுமை பண்ணுகையன்றிக்கே இசைந்திருந்த விததான்காணும் ஶத்ருவமாவது. அன்றிக்கே, * ௫. (ஶத்ருஹாவேந) என்று - "ஜிகிஷாநுஸஹநே" என்கிற யாதுவிலேயாய், ஸஹியாமையாலே ரக்ஷிக்கவந்தானென்றுமாம். * ௬. (ஶத்ருஹாவேந) இதுதானவன் பஶ்யா சொன்னமைத்தனைபோக்கி, நம் பக்ஷியைப்பார்த்தால் இத்தனையகவாய் வேண்டாகாணும். "ஸாவோஶீலாக்ரியாவேஷாஸம்த்ஸ்வப்ராயஶ்சேஷ" என்கிறவசநங்களிலேஸாவஶப்தமாய், *௭ (ஶத்ருஹாவேந) என்றது ஶீலமாய், ஶீலமாவதுதான் ஸ்வரூப யோக்ய வேஷாவிசேஷமிறே. இவன் ராஜாவின் தம்பியாய்ச்செருக்கின் மிகுதியாலே, ஶத்ருமானுர்வேஷ பரிக்ரஹம் பண்ணி எழுதியணிந்து வரவுமாம். அன்றிக்கே, *௮. (ஶத்ருஹாவேந) என்கிறது - க்ரியையாய், பக்ஷிபக்ஷமின்றியி

⊕ ஒற்றனுய்-தூதனுய். ௐ உந்மேஷங்களை-அதிசயங்களை.

லே வாயஸவிகாரிப்ரவ்ருத்தரைப் போலே ‡கோல்விழுக்காட்டிலே ஶ்ரீமானார் செய்யுஞ்செயலைச்செய்தாரென்றாகவுமாம். அன்றியிலே, * கூ. (ஶ்ரீஸாஹாவேந) என்று வேஷமாய், ஸ்நேஹமில்லையாகிலும், "ராஜ்யகாங்க்ஷீ" என்று-ஒரு வ்யாபோஜநோத்தேஶ்யவாகிலுமித்தனை வேஷம்பண்ணினானென்றாகவுமாம். அன்றியிலே, ஸாவஶ்யம் ஸம்ருத்தியாய், ஸம்ருத்திஶ்யம் ஸம்பந்தவியானபோது, * கo. (ஶ்ரீஸாஹாவேந) என்று-தன் வ்யாஜியாலே நம்மை ஶ்ரீமாக வறுதியிட்டு, நமக்கெல்லாநன்மையு முண்டாகவேணுமென்று வந்தானாகவுமாம். அன்றிக்கே, * கக. ஸம்ருத்திஶ்யம் ஸவநவாவியானபோது, ஶ்ரீஸாஹவத்தோடே வந்தானாகவுமாம். அன்றிக்கே, *கஉ. (ஶ்ரீஸாஹாவேந) என்று-ஸாவஶ்யம் ஸத்தாவாவியாய், ஶ்ரீமான நம்ஸத்தை கிடைக்கைக்காக வந்தானாகவுமாம். அன்றிக்கே, * கங. (ஶ்ரீஸாஹாவேந) என்று - ஸாவஶ்யம் ஸவிவ்யாபவாவியாய், போக்கற்று ராஜ்யகாங்க்ஷியாய் வந்தவனன்றியே, "வநிதாந்தாயாவஜ்ஞாஶ்ரீரணிவயநாநிவ | ஸவம்தத்ஸோராஜ்யஞ்ச ஜீவிதஞ்ச ஸம்வாநிவெ" என்று புறம்புள்ளவை யெல்லாவற்றையும் கைவிட்டு நாமே உத்தேஶ்யமென்கிற நினைவோடே வந்தானென்றாகவுமாம். அன்றியிலே, * கச. (ஶ்ரீஸாஹாவேந) என்று - ஸாவஶ்யம் ஜநார்த்தவாவியாய், "வதாஸிஸ்ஸஹரக்ஷாஸிஸவஞ்ஶரணமதஃ" என்று-தானேவருகையன்றிக்கே பஞ்சஜநத்தோடே வந்தானென்றாகவுமாம். இத்தால், ஒற்றனாய் நலியவந்தானாகில்இத்தனை பேரோடே வரக்கூடாதிறே யென்கை. அன்றிக்கே, *கரு. (ஶ்ரீஸாஹாவேந)என்று - வருகிற விடந்தன்னில் ராவணனோடே ராஷ்டிரனாய் வ்யராஷஞ் சொல்லிப்போருகை யன்றிக்கே, "ஸக்வம்ஹ்யாதாவிஶோராஜநுவ்யம் ஹிஶம்யதஶ்விஹஸி। ஜ்யேஷ்டோஶா ந்ய: விதாஸஶோநவயஉவயே ஷ்டிதஃ" என்று-உன்னோட்டைக் * குடற்று டக்காலும், நீமௌரவ்யனைகயாலும், நீவாய்க்குத்தோற்றினதெல்லாம் சொல்லக்கடவை; நானிதுக்கு வெறுக்கிலேன்; நீ யாஶ்ரிகனல்லாமையாலே, யவ்ராதாவான வெனக்குச்சேராமையாலே போகிறேனித்தனை; "ஸூதாநவஸ

‡ கோல்விழுக்காடு - அளவுகோலாலளக்க லக்கிஷ்டமான இடத்தில் அக்கோல்விழுவது.

* குடற்றுடக்காலும்-ஶரீரஸம்பந்தத்தாலும்.

ப்ரயாணரக்ஷ" "ஸம்ஸித்தோதஸ்ம்யஹிஷ்ப்ராஸித்யஸ்வீ ஸவ்யாவிநா" என்று- இனிமையோடேவந்தானென்று மாம். "ராகவம்ஶரணம்க:" என்றான்; ஶரணாமதஹாவேந என்னாதே, "ஶீக்ரஹாவேந" என்பானென்னென்னில்; பிறரைத்தாழவிட்டுத் தந்தாமையுயரவைத்துப்போரும்‡புல்லியர்களல்லாமையாலேசிறிதாகவருளிச்செய்கிறார். வேடரான ஸ்ரீமஹாஹப்பெருமாளையகப்பட, "உகந்ததோழனீ" என்னக்கடவவிவர், இவனைப்பெற்றால் விடுகிறாரோ? இதுதன்னை, "ஸுத்ஜ ஸஹ்ஸவா" என்று - பிறருஞ் சொல்லி, "ஸோஉஹம்ப்ரியஸ்வா ராஜ:" என்று-அவர்தாமும் சொல்லும்படியிறே †புரையற நடத்தினபடி. "தேநமைத்ரீப்ரவத்தே" "ஶீக்ரளவயிகங்கதழ்ழ்" என்றருளிச்செய்தாரிறே.

ஶீக்ரஹாவம் பண்ணினவித்தால் ப்ரயோஜநமென்ன? அவன் ஸமுத்ரத்திலேயன்றோ இருக்கிறதென்ன; * க. (ஸம்ப்ராப்த:) அக்÷ கண்ணழிவுதீர்த்தானென்கிறார். *உ. (ஸம்ப்ராப்த:) "ஸூஜமாஶஹே தேஷ" என்று- ஸமுத்ரத்துக்குமேலே கிளம்பக்கண்டோம்; இக்கரையிலே நிற்கக்கண்டோம்; வந்தபடிக்குகாணும். * ந. (ஸம்ப்ராப்த:) அக்கரையிலே ஶரணமென்றானாகில், மடுவின் கரைபட்டதுபட்டு அரைகுலையத் தலைகுலைய நமக்குச்செல்லவேண்டியிருக்கும்; இன்னுடியும் வந்து நமக்குபகரித்தான் காணும். * ச. (ஸம்ப்ராப்த:) "வஷ்ட்ராஶஹிமஶாரெவ்வ" என்றும் - 'சிற்றஞ்சிறுகாலே வந்து" என்றும்-போதல்லாப்போதிலே வழியில்லாவழியிலே வந்த வரத்து காணுமென்று நெஞ்சாறப்படுகிறார். * ரு. (ஸம்ப்ராப்த:) நாமிங்குவருகிற விடத்தில் ஶ்ருங்கிபேரபரத்வாஜாஶ்ரம சித்ரகூடதண்டகாரண்யஸ்வமான எத்தனை யிடத்திலேதங்கித்⊛தாழ்த்து வந்தோம், இவனங்ஙனன்றியிலே, வழியிலேஒருதங்கு * தாவடியற ஒரு ஸஹஸத்திலே வந்த படிகாணும். * சு. (ஸம்ப்ராப்த:) வருகிற விடந்தன்னிலழகியதாக வந்தான்காணும். அதாவது- ஸகலரைக்குத்தன்பெண் கநகையையிட்டு ஸ்வாஸவநம்பண்ணியும், ஹநுமானைநலியப்புக உபதவயமாகாதென்று விலக்கியும், "ப்ரீயதாம் ஊாஶரயாயமைதிலீ" என்று - ராவணனளவி

‡ புல்லியர்கள் - தாழ்மக்கள். † புரையற-அதிஶயமில்லாமல். ÷ கண்ணழிவு - தடை. ⊛ தாழ்த்து - தாமஸித்து. * தாவடி - ப்ரயாணம்,

லே நல்வார்த்தைசொல்லியும், இப்படி பஹுவிதமாக உபகாரகனாயே வந்தானென்கை. * அ. (ஸம்ப்ராப்தம்) தானிருந்தவிடத்திலே நாம் செல்லக்கொள்ள, "ஜஹௌமிருஷி ததாஸ்வாஸ ந்யம்ஸிவார ஊத்தம்" என்று-இருந்தமலையைவிட்டு வேறொருமலையேறப்போகையன்றிக்கே நாமிருந்தவிடத்திலே தானே வந்தான் காணும். * கூ, (ஸம்ப்ராப்தம்) வருகிற விடந்தன்னில், "பாஹூரோஷ:ப்ரஸாரித:" என்று - கைநீட்டி நம்மை ஸாஷ்யபாஞ்ஜி பண்ணுகையன்றிக்கே, "பாதயோஶ்ஶரணான்வேஷீ" என்று- காலைப்பிடித்துத்தன்னைத்தாழ விட்டுவந்தான்காணும். * க௦. (ஸம்ப்ராப்தம்) "விஜிதாரிஸஹாயஸ்ஸ்ராஜ்யஹேதிவஸ்ஸ்தித:" என்று-தம்மையொழியச்செல்லாத மனிதரை மின்னுக்கு மிடுக்குமிரையாக்கி வெறுத்த ராஜ்யதாரங்களோடே வாழ்கிறவனல்லன்காணும்; "த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச ராகவம் ஶரணம் கத:" என்று - ராஜ்யதாரங்களைக்காற்கடைகொண்டு நம்மையே பற்றிவந்தான்காணும். * கக. (ஸம்ப்ராப்தம்) நம்மைப்போலே ஒற்றனாய்வந்தானோ நலியவந்தானோ, நிக்ராஹ்யனோ, அநுக்ராஹ்யனோ, ஸ்வீகார்யனோ பஹிஷ்கார்யனோ, வத்யனோ அவத்யனோ, என்று $ அளப்பது முகப்பதாகை யன்றிக்கே முதலடியிலே உபஸத்தனாய் நம்மை விஶ்வஸித்து வந்தான்காணும். * கஉ. (ஸம்ப்ராப்தம்) * ஸஹேதுகீகாரியாய், தான் ராக்ஷஸனும் நாம் க்ஷத்ரியனுமாக வன்றிக்கே, "அஸ்மாபிஸ்துல்யோ பவது" என்கிறபடியே, நம்மிலேயொருவனாம்படி ஸகாஸனாய் வந்தான் காணும். * கங. (ஸம்ப்ராப்தம்) "காணவாராய்" என்றும்- "கூவுதல் வருதல் செய்யாய்" என்றும் சொல்லுகிறபடியன்றிக்கே "யத்ர ராம:" என்று-நாமிருந்தவிடத்திலே தான்வந்தான்காணும்.

த:னேவந்தானென்று ஓஷ்யமோ; நம்முடைய காலாலேயோ நடக்கிறது, ராவணானுஜனாய் வாயகனான விவனை, "க்ருதகாயிநோ யாதஸ்ய ஹந்யாதேவாவிசாரயந்" என்றும் ஶாஸ்த்ரமதியைப்பார்த்தால், வருகிறபோதே கொல்ல ப்ராப்தமாயிருக்க, கொல்லா தொழிந்தால் விடவாகிலும் ப்ராப்தங் காணுமென்ன; * க. (ந த்யஜேயம்) நீர்சொல்லுகிற வார்த்தையைக் கைவிடுமத்தனைபோக்கி அவனையொ

$ அளப்பது - பலவிதமாய்ச்சொல்லுகை.

ருகாலும் கைவிடோம். * உ. (நத்ருஜேயம்) "ஶக்திமாந்" என்று - ஸ்ரீஜாய், தோழனார் சொல்லுமாற்றுமைக்கு விட நினைத்தோமாகிலும் ஶக்திதானே யில்லை. * ௩. (நத்ருஜேயம்) தோழனார் மஹாராஜரானகையாலே த்யாகம்பண்ணுகிறீர்; தாஸரான நாங்களென்ன த்யாகம்பண்ணுகிறது. * ௪. (நத்ருஜேயம்) "வஸித்ஸ்தாயாநுஜ்ஞா" "த்யக்த்வா ராஜ்யம் ஸுகாநாம்ஶ்ச" என்று - நாட்டில் த்யாஜ்யமாய்ப் பிறந்தவையடைய அவன் கைக்கொண்டான்; நமக்கு த்யாகவிஷயந் தன்னைக்காண்கிறிலோம். * ரு. (நத்ருஜேயம்) நாம் விடப்பார்த்தாலும். "வரணம் மாமேஷ நிவர்த்ய" "இனி நான் போகலொட்டேன்" என்றும் - "திருவாணை நின்னாணை" என்றும் - "அமரவழும்பத்துழாவி யென்னாவி அமரத்தழுவிற்றினியகலுமோ" என்றும் - அவன் பற்றின ஊற்றத்தாலே நம்மால் விடப்போகாதுகாணும்.

ஆனால், அவனை விடவொண்ணாதாகில் விடலாவாரை விடுமத்தனை யன்றோவென்ன; * க. (ஸ்யம்வந) அப்படி ஶத்ருக்க்ருத்யங்களையெல்லாம் செய்யலாம், இது செய்யப்பார்க்கிறிலோம். "ப்ரஹ்லாதம் ஸர்வயாதனோ விஶ்வஸேந்மயி" என்று - "ஓருயிரேயோ உலகங்கட்கெல்லாம்" என்கிற தேவரீர் திறத்திலே தீங்குவிளையில் செய்வதென்னென்ன; * உ. (ஸ்யம்வந) "அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம்" என்கிறபடியே, நம்ப்ராணனொருதலையாகவிடிலும் அவனைவிடோம். "நஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம்" என்கிற பிராட்டியை இழக்கவரில் செய்வதென்னென்ன; * ௩. (ஸ்யம்வந) "த்வாம் வாஸீதே" என்கிறபடியே, * ப்ராணேப்யோபி கரீயஸியான அவளை விடிலுமிவனை விடோம். "ஸத்யேவாஹம் மரிஷ்யாமி லக்ஷ்மணேந மதாம்மதிம்" என்றன்றோ? இளையபெருமாள் பக்கல் தேவரீர் திருவுள்ளமிருப்பது; "லக்ஷ்மணேவா ஹாஹமே" என்கிறபடியே, அப்படிக்கொத்தவர்களிலொருதீங்குவரில் செய்வதென்னென்ன; * ௪. (ஸ்யம்வந) "ஸலக்ஷ்மணாம்" என்று - ஸஹோதரத்தைவிடப்பார்த்தால் ஸஹோதரவஸிஷ்டத்தையொழியவோ? அப்படிக்கு ஸமவாஸ ஸம்பந்தவான லக்ஷ்மணனைவிடிலும் இவனைவிடப்பார்க்கிறிலோம். "ஸ்வயிகிஞ்சித் ஸமாபந்நே கிம்கார்யம் ஸீதயா மம" என்றன்றோ? என்னள

வில் தேவரிருப்பது; அப்படிக்கு தேவரீரைப்பற்றியிருக்கிற வடியே னுக்கு ஒரு தீங்குவரில் செய்வதென்னென்ன; * ரு. (கதஞ்சந) அப்படி ஶேஷியையைவிட்டுப் பற்றும்படியான உம்மை விடவுமாம் அவனை விடப்பார்க்கிறிலோம்.

அதென்! ஶரணாகதனை விடாமைக்காகில் தேவரீரருளிச்செய் கிறீது; என்னுடைய ஶரணாகதியிலே பாம்புசெற்றுக்கிடக்கிறதோ வென்ன; "அன்றீன்ற கன்றுக்காக முன்னீன்றகன்றைக் கொம்பி லும் குளம்பிலும் கொள்ளும்" என்னும் புதுச்சொல் மறந்தீரோ? "ஸர்வாபகாரிணாஜ்ஞாமே நஹ்ய ப்ரோவியியதே" என்று - ஸீதாபஹாரம் பண்ணின ராவணாநுஜனேற்றனாய் வந்தவிட மறிந்து நலியவந்தான்; நாம் தம்படைவீட்டில் செல்லாதிருக்கத்தா னே நம்பாளையத்திலேவந்து மூத்தீம்புசெய்த இத்தனைதோஷதுஷ் டனைவிடக்காணுமடுப்பதென்ன; * க. (தோஷோயத்யபி) "மித்ர பாவேந ஸம்ப்ராப்தம்" என்று-அவன் நிர்தோஷனென்னுமிடத்தை யுங்களுக் குபதேசித்தோம்; அதொன்றுஞ் செவியிற்புகாதே ஸ தோஷனென்றே ப்ரதிபத்தியாகில், நீங்கள் சொன்னவளவே யன்றி யிலே இன்னமும் சிலதோஷங்களுண்டாகிலும் கைவிடோம். * உ. (யத்யபிதோஷ:) உங்களுக்கேற மெய்ப்படவே தோஷமுண்டோ? (தஸ்யஸ்யாத்) தஸ்யாயிகார ஸம்பந்தயேஸ்யாத். அதாவது "ஸஹ ஸ்ரவராயர்நா ஶரணயோ: கிஞ்சேநாஉமதி:। ஸ்வதேவோ வாய ஹந்தாஜேஹவ" என்றும் - "நபூர்நிஷ்பாஷி...ஶரணம் ப்ர வஜேத்" என்றும்-ஶரணாகதனுடைய தோஷமன்றோ?. ஒரு ப்ரபத்தி யைக்கைக்கொள்ளும்போது பூர்வத்தைவிட்டோ கைக்கொள்ளுவது என்றுமாம். அன்றியிலே, * ங. (தோஷோயத்யபி தஸ்ய) என்று - அவனுக்கு தோஷமுண்டோவென்று ஶங்கித்து, (ஸ்யாத்) என்று - பரிஹாரமாகவுமாம். ஔபாயிகஸம்பந்தமுள்ள விடத்திலே ப்ர ஜை பண்ணின தப்பும் பொறுக்கவேண்டியிராநின்றதே; அத்தோபா தியும் பொறுதோ அவனுடைய தோஷமென்கிறார். * ச. (ஸ்யாத்) என்று ப்ராப்தநாயாம் லிங்காய், அவனுக்கு தோஷமுண்டாகிலது

நமக் கஸஹ்யமன்றே; ஒரு ராவணனை ரக்ஷித்தோமாகில் அதுக்கு விலையாய்ப்போம்; ஒருகுற்றவாளனை ரக்ஷித்தோமென்கிற இப்பேறுபெறுவதுகாணும். அன்றியிலே, அவனுக்கு முதலில் தோஷமில்லை; உண்டோ? * ௬. (தஸ்யதோஷ:) அவனுடைய தோஷமன்றோ! அவனிலும் ஸாவ்யமன்றோ நமக்கென்கிறார். ஸஹிதவிஷயத்திலழுக் குகப்பாயிருக்குமாப்போலே. அன்றியிலே. * ௭ (தோஷோயத்யபி) தோஷமுண்டாகில், (தஸ்யஸ்யாத்) தஸ்யாஹிதவிஷஸ்யாத். அவன்நினைத்து வந்தது பெற்றானாகிறானென்றுமாம். அன்றியிலே, * ௮. (தோஷோயத்யபி தஸ்யஸ்யாத்) "நஸ:" என்றாய்; அதுண்டாயிற்றாகில் அவனுக்குக்குற்றமாகிறது. ரக்ஷித்தநமக்குக் குற்றமில்லையே. அன்றியிலே, * ௯. (தோஷோயத்யபி தஸ்யஸ்யாத்) என்று - அவனுக்காகிற காலங்காணும். அதெங்ஙனே யென்றால், ஒருவன் ஸௌஹார்த்தமிருந்தபடி! தமயன் படைக்குறிய மியாதேயிருக்க, படைவீடு கோப்புக்குலையாதே யிருக்க, உடம்பில் † வடுப்படாதேயிருக்க, விரோதியை யழித்துக் கொடுத்தபடிகாண் என்றுகொண்டாடும்படியிருக்கை. அன்றிக்கே, * ௧0. (தோஷோயத்யபிஸ்யாத்தஸ்ய) அன்றோ? "ஜராவாரோஸவிஸாராஸீ க்ருதக்நோ நாஸ்திகஸ்ஸதா । ஸமாஶ்ரயே தாதிதேவம் ஶரண்யம் ஶரணாயதி ॥ நிர்தோஷம்விக்தம் ஜந்து" என்றும்-"ஜாநாஜ்ஞாநக்ருதாணிஸர்வாணி ஸாத்யாநே" என்றும்-"மனத்தினால் சிந்திக்கப் போயபிழையும் புகுதருவா நின்றனவும் தீயினில்தூசாகும்" என்றும் - "பாவக்காடு தீக்கொளீஇ வேகின்றதால்" என்றும் சொல்லுகிறபடியே, முன்பு ஸதோஷனேயாகிலும், ஶரணாகதனானபோதே அவையெல்லாம் நஶித்து நிர்தோஷனாய் காணுமிருப்பது. * ௧௧. (தஸ்யதோஷோயத்யபி) நம்மைக்கொல்லவந்தானோ? (ஸ்யாத்) அதுண்டாவது காண். "ஸர்வப்ராணாநு வஸித்யாஜ்ய ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா" என்கிறபடியே, நம்மையழியமாறி ஶரணாகதரக்ஷணம்பண்ணினோ மென்று பேர்படைப்பதுகாண்.

---

† வடுப்படாதே - காயமில்லாமல்.

இப்படி ஸந்தோஷனேயாகிலும் விடாதொழிந்தால் ப்ரயோஜந மென்னென்னில்; *க. (ஸர்வபாபேப்ய:) "சாதுகோட்டியுட்கொள்ளப்படுவார்" என்கிறபடியே, ஶரணாகதனுடைய யாதியை ரக்ஷித்த வைஷ்ணவ மோக்ஷிக்கும்ஶ்ரீநஸ்வாமிகளை ரக்ஷித்தவிஶ்வாமித்ர மோக்ஷிக்கும்பஹிஷ்மன்றிக்கேபோகிறோம். * உ. (ஸர்வபாபேப்ய:) இதுவஸ்துக்களான ஸாதுவான்களுக்கு விலக்குமித்தனை போக்கி, ஈஶ்வரர்க்கு ப்ராப்தனானநமக்குக்கிடைக்கப்புகுகிறதோவென்றுமாம். *௩. (ஸர்வபாபேப்ய:) கவோதவாநராதி க்ருக்குக்களுக்குவிலக்குமித்தனைபோக்கி, ஈஷ்ட ஶரீரவரிமஹம் பண்ணினநமக்குவிலக்கப்புகாநின்றதோ வென்றுமாம். *௪. (அஹமிதி) ஸர்வாவநாதிபண்ணினால்மையமின்றியே யொழிந்தாலும் பண்ணாதபோது ப்ரத்யவாய முண்டாமாப்போலே, "க்ஷாந்திய தாயதஉத்ஸ்ய ஹ்ரம்க்ஷாந்தஸ்ய ஶப்போஸவநேஷ்ட" என்று க்ஷத்ரியானநமக்குக்கூவந்நிவாரணம்ஸர்வ ப்ரயாஸம். அதுபண்ணாதபோது மஹாஹிறக்கும். தந்நிவ்ருத்தியைக்கொள்ளுவது. (அஹமிதி) என்கிற நஞ்சுக்கு தநீ தஹவ தவிரோயி என்று மூன்றுண்டாகையாலே, * ரு. (அஹமிதி) என்று - தநீமான 'ஸர்வம்ஸ்ராதமயோஜயே" என்று - ஸர்வாதிவிஶி ப்ரயோஜக மென்றாகவுமாம். அன்றிக்கே, * சா. தநீஸாவமான ஹராநிவ்ருத்தி ப்ரயோஜநமாகவுமாம். அன்றியிலே, * எ. "யஶஸ்வ" என்று - தவிரோயியான ஸ்வாவுதைதானே விலக்கு மென்றாகவுமாம்.

ஆக விந்தஶ்லோகத்தால் சொல்லிற்றாயிற்று, இவ்வதிகாரிக்கு வேண்டுவது கவுஶாங்கம்; இவ்வளவாலே, "நஸர்வ்வகாரணாம் பரதவ்ரதவத்யா|கயம்விஜ்வகாரேண க்ருதேநைக நத்ஷ்தி" என்றும் - "க்ஷாஜஜிவ்பவ்ரவீஜமி:" என்றும் - "ஶாம் வ்ரஜ...ஸர்வவாவேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்றும் - "ஈக்ஷகம்நயாதி வாரஶாம் மதிழ" என்றும் - சிந்திப்பேயமையும்" என்றும் - "எண்ணி

னும் வரும்'' என்றும்-இத்யாதிகளில் சொல்லுகிறபடியே, அவனுக்கு ஏதேனுமாரேனும் ப்ரதிபந்தக முண்டாகிலும், ஓரளவிலும் கைவிடாதே தன்னைக்கொடுக்குமென்னு மர்த்தம் சொல்லுகிறது. ௩௩,

தாத்பர்யம்.:—இந்த விபீஷணன் கபடசரணாகதி பண்ணினாலும், சரணாகதன் சொல்லவேண்டிய சரணமென்னு முக்தியைச்சொல்லி நாமிருந்த விடந்தேடி வந்தானாகையால், இவனிடத்தில் தோஷமிருந்தாலும், இவன் ஸ்வீகாரத்கால் முன்புள்ள பந்துமித்ரார்திகளையிழக்க வருமாகிலும், நானிவனை விட்டுவிட மநஸ்ஸாலும்சிந்திக்கவில்லை. நீங்களிவனை தோஷியென்றெண்ணினாலும், வாஸ்தவத்தில் தோஷமிருந்தாலும், ஸத்புருஷர்களுக்கு இது நிந்திக்கும் படியாயிராது; சரணாகதனிடத்தில் தோஷம், சரணாகதரக்ஷணத்தில் தீக்ஷையுடையவர்களுக்கு அதிசயத்தை விளைப்பதாகையால் ப்ரார்த்திக்க வேண்டியே யிருக்கும்; இவனாலொரு ப்ரயோஜநமில்லாவிடினும், இவனைக்கைவிடுவது ஸத்கோஷ்டியில் நிந்த்யமாகையால் அங்கீகரிப்பதே யுக்தம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

யுத்தகாண்டம், ௧௮-ம் ஸர்க்கம், ௪-ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. ராகவஸூக்தியைக்கேட்ட மஹாராஜர், அதிஸாஹஸமென்று மிகவும் பயப்பட்டு ஒருவார்த்தை விண்ணப்பஞ் செய்கிறார்.

௨௦. ஸுக்ரீவஸ்த்வத தத்வாக்யம் அநுபாஷ்ய ச விம்ருஶ்ய ச ।
தத: ஶுபதரம் வாக்யம் உவாச ஹரிபுங்கவ: ॥ ௩௪.

அர்த்தம். அத- அதுக்குப் பிற்பாடு, ஸுக்ரீவஸ்து - ஸுக்ரீவமஹாராஜர், தத் - அந்த, வாக்யம் - சொல்லை, அநுபாஷ்ய- அநுவதித்தும், விம்ருஶ்ய - ஆலோசித்தும், தத: - அந்தவாக்யத்தைக்கேட்டிலும், ஶுபதரம் - மிகுந்தஅழகியதான, வாக்யம் - சொல்லை, உவாச - சொன்னார்.

வ்யா.(ஸுக்ரீவஸ்து)இதி.(அத)கீழில்ஸர்க்கத்தில் ''விஜயிஷ்யாம்யஹம் ஸர்வம்'' என்கிற அதஶப்தத்தால் ராவணபவனத்தில் நின்றும்வந்த விவன் நம்மை நலிகை நிஶ்சிதமென்று இவருடைய ஹ்ருத

யத்திற்பிறந்த வேறுபாட்டைச்சொல்லிற்று; "ஸஹதத்வஸநம்ஸ்ரு க்வா" என்கிற-தஸ்ஸவத்தால், பெருமாள் ப்ரக்ருதியையும் இஷ்ட ஷ்டியில் விலைச்செல்லும் வார்த்தையையு மறிந்து, "ராவவம்ஶர ணம்கத:"-என்றது,"நிவேதயத" என்று-இங்ஙனேசிலஸாதநாமாய் ஷ்காரமாகப்பிடிப்பதாகநின்றான்; இதுபெருமாள்செவிப்படுமாகில் நம் வார்த்தைகொள்ளாரென்று கவரித்தவிஶேஷத்தைச் சொல் லிற்று. இந்த தஸ்ஸவத்தால் பெருமாள் நாம்போனவழிவருவர்,எதி ரிகளை அவரைக்கொண்டு வெல்லலாமென்றிருந்தார். ஶிக்ஷாவமு டையார் நம்மை நலிய வந்தார்களாகிலும் அதுக்கிசைந்தோமென்ற ருளிச்செய்கையாலே, இவரும் அவனுக்குக் கூட்டாயிருந்தார்; இனி யிவரைநோக்கலாவது என்செய்தாலென்கிற வயாகிஶயத்தாலே வேறுபட்டபடி. (கய) வ்லாக்ஷி வார்த்தை சொன்னால், ஶேஷஹ்ருத ஜ்ஞனவன்,கருத்தையு மறிந்து தன் ஶேஷத்வத்தையும் பார்த்து வி சாரித்து அதுக்குச்சேர வார்த்தை சொல்லவேண்டியிருக்க கதி ஸாஹஸம் விளைந்தபடியாலே க்ருஷ்ம்பாராதே வார்த்தைமுடிவது க்குமுன்பே சடக்கென ப்ரதிவசநம் பண்ணத் தொடங்கினபடி. (தஷ்வாக்ஷி) மேல் பற்றில்லாத வார்த்தையை. அதாவது இவன் துஷ்டனென்றிறே சொல்லலாவது ; அத்தையும் இசைந்தோமென் கையாலே போக்கடியில்லையென்கை.(ஸுஹாஷ்ய) வதஸ:வும்திரள வும் கநஹாஷித்து. (விஷ்ருஶ்ய) வேர்ப்பற்றியானவஸ்துத்தைவிஶேஷி ப்பதுஞ்செய்து-கயவாக்யாநஹாஷணமும் அதினுடைய கஸ்தி விஶேஷமு மென்னவுமாம்.(ததஶ்ஸாஹதாரவாக்யோவாஸ) பெருமா ளருளிச்செய்தவாக்யம்ஸாஹம்;அதிற்காட்டில்ஸாஹதரமானவாக்ய த்தைச்சொன்னார். அதாவது-என்னைப் பற்றுவார்க்கு ஶிக்ஷாவமே யமையும்; அவர் குற்றம்பார்த்துவிடோம்; என்று தம்மைப்பற்றினார் க்கு இவ்வார்த்தையின் நிழலிலேஜீவிக்கலாம் வார்த்தையாகையாலே அதுஸாஹம்;நீர்போனவழியேபோய் உம்முடையஸஹாவத்தையிழக் கமாட்டேன் என்றவார்த்தை யாகையாலேஇதுஸாஹதரம்.(ஹரி பாஜவ:) "ராஜவிஷ்யா"என்கிறபடியே தம்முடைய கலக்கத்துக்குப் போரும்படி பெருமானுக்கு அவ்வருகே விண்ணப்பஞ்செய்த ஆள வுடைமை.

தாத்பர்யம்:—ஸுக்ரீவமஹாராஜர், பெருமாள் சொன்னவாக்யத்தைத்தான் அநுவதித்து, இதினர்த்தத்தை நன்றாயாலோசித்தவாறே, தோஷங்களைச் சொல்லி இவ்வபிஸந்தியை மாற்றத்தகாத வாக்யமாகையாலே என் செய்வோமென்று பயந்து, பெருமாள் சொல்லிமுடிவதற்கு முன்பே, அவரை யநுஸரிக்கவேண்டும்படியான தம் ஸ்வரூபத்தையும் பாராதே, சடுதியாய்த்தன்ப்ரேமத்தால் மிகவும் மூழ்கியதான வார்த்தையைச் சொன்னார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், ௧௮-ம் ஸர்க்கம், ௫-ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. தூஷணாதரம் சொல்லுவாராக ஸம்ப்ரதிபன்னதூஷணத்தை யநுவதிக்கிறார்.

௨௯.—ஸதோஷோ வா வ்யதோஷோ வா கிமேஷ ரஜநீசர:।
ஈத்ருஶம் வ்யஸநம்ப்ராப்தம் ப்ராதரம்ய:பரித்யஜேத்॥ ௩௫.
கோ நாம ஸ பவேத் தஸ்ய யமேஷ ந பரித்யஜேத்।

அர்த்தம். ஸதோஷோவா - தோஷத்தை யுடையனாயாவது ஆகட்டும்; அதோஷோவா - தோஷத்தை உடைத்தாகாதவனாயாவது ஆகட்டும்; ஏஷ: - இந்த, ரஜநீசர: - ராக்ஷஸன், கிம் - என்னப்ரயோஜநத்துக்காக. ஈத்ருஶம் - இப்படிப்பட்ட, வ்யஸநம் - து:கத்தை, ப்ராப்தம் - அடைந்திருக்கிற, ப்ராதரம் - ஸஹோதரனை, ய: - எவன், பரித்யஜேத் - விட்டேனென்று நிந்திக்கிறானோ; ஏஷ: - இவன், யம் - எவனை, நபரித்யஜேத் - விடமாட்டானோ; ஸ: - அப்படிப்பட்டவன், தஸ்ய - அவனுக்கு, கோ நாம - எவன்தான், பவேத் - ஆவான்.

வ்யா. (ஸதோஷோவாவ்யதோஷோவா) குணங்களிலேயிறே விப்ரதிபத்தி; "ஸ்வஜாதிரியம் க்ரூரா" என்னுமாப்போலே, ராக்ஷஸனென்னுமிடம்ஸம்ப்ரதிபந்நமன்றோ. (கிமேஷரஜநீசர:) கிம்க்ஷேபே. இவனால் என்ன ப்ரயோஜநமுண்டு. இவன் ராக்ஷஸனானாலும், "கிமேஷ:" என்னக்கடவதோ? ஸ்வநிக்ஷேபஸர்வஸ்வமாக ஶரணம்புகுந்த நமக்கு ஸஹகாரியாம் என்ன; சொல்லுகிறது. (ஈத்ருஶம்) ராஜாவாகையாலே ஜ்யேஷ்டனவனை. (வ்யஸநம்ப்ராப்தம்) ஶத்ருக்களானநம்மாலே பீடிதனானவனை, வ்யஸநமாவது - ஶங்கா

த்ஹநம், பாஸ்வயம், இத்யாதிகள். (ஹாதவ்ய) த்யஜநமின்றிக்கே யொழிந்தாலும் விடவொண்ணாத பாஸமுடையவனை. (பரித்யஜேத்) யாவனொருவன் ஸவாஸநமாக விட்டானென்று ஸம்பந்திக்கிறான். ஸஹாயாபேக்ஷை: கீழ்ச்சொன்னவை ஒரொன்றேவிடாமைக்கு ஹேதுவாயிருக்க எல்லாவற்றையு முடையனாயிருக்கிறவனை விட்டான் யாவனொருவன்; அந்த இவனால் என்ன ப்ரயோஜந முண்டென்று கீழோடே அந்வயம். அதவா, "ஸம்ஸ்ருஷ்டௌ" என்று வ்யஸநவிஶேஷணமாகவுமாம். அதாவது - மாதாபிதாக்களாலும் பரித்யாஜ்யராய் ஸஹாயராயிருப்பார்க்கு மும்முடையநிழலிலேயொதுங்கவேண்டும்படியிருக்கிற தேவர் புலிசீறினாற்போலே சீறி அழியச்செய்வதாக எடுத்துவிட்டிருக்கிற இந்தவ்யஸநத்தை யன்றோ அவன் த்யாகனாயிற்று. இப்படி யவனோடு ⊙ தொத்தறவிட்டுப் போந்து நம்பக்கலிலே வந்தவன் நமக்கு ஸஹகாரியாகக்கூடாதோ வென்ன; சொல்லுகிறார்; (கோ நாம) இதி. (தஸ்யாஸ்ய கோ நாம ஸஹாயேஷ யஸ்ஷ விபீஷணோ நபரித்யஜேத்) ஸம்பந்தத்தாலே வந்த இந்த விபீஷணனுக்கு அவன் ஆராவான்; யாவனொருவனை இந்தவிபீஷணன் விடான்; இவன்விடாதொழிகைக்கு ஒருத்தனில்லையென்கை. அதாவது-நாட்டில் பரித்யாஜ்யராவார் - ஸம்பத்திவிபத்திபாஸ்வங்களைத் தனித்தனியேயுடையரா யிருப்பார் மூவரும், இவற்றிலிரண்டையு முடையார் மூவரும், ஸமுதிதமாணயிருப்பாரொருவனும், ஆக எழுவருமாயிற்று; இவர்களில் ஸமுதிதமாணனான ராவணனைவிட்ட இவனுக்கு அபரித்யாஜ்யனாயிருப்பானொரு அஷ்டமனில்லாமையாலே இவன் விடமாட்டாதானொருவன் முதலிலே இல்லையென்கை. ௬௨.

தாத்பர்யம். இவன்தோஷியாகவாவது ஆகட்டும,தோஷஹீநனாயாவது ஆகட்டும்; இவனால்நமக்கொருப்ரயோஜநமில்லாமையாலே இவனைவிட்டுவிடுவதே யுக்தம். நம்மிடத்திலிவன் சரணமென்று வந்தபடியால் நம் கார்யங்களை ஸாதித்துக் கொடுப்பனென் றெண்ணவேண்டா. ஏனென்றால், தன் ப்ராதாவுக்கு நகரமழிவது பந்துக்கள் சாவதான இப்படிப்பட்ட மஹத்தான ஆபத்துக்கள் நேரிட்டிருக்குங்காலத்தில், அவனை எவனொருவன்விட்டுவிட்டு நிந்திப்பதும் செய்கிறானோ? அவன்,ஒருவனை யாஶ்ரயித்து ஆபத்காலத்தில் விடாமலிருந்து உதவி செய்யமாட்டான்? ஆகையாலிவனால் நமக்கொரு உதவியும் நேரிடாது. இவனை விடுவதே யுக்தம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.



⊙ தொத்தற - ஸம்பந்தமறும்படி.

யுத்தகாண்டம், ௧௮-ம் ஸர்க்கம், ௭-ம் ஶ்லோகம்.

அவதாரிகை. மஹாராஜர் வார்த்தையைக்கேட்ட பெருமாள், தாம்நோக்க நினைத்தநன்மையையும்பார்த்து இதிலொருவர் ஸ்வபா வமிருந்தபடி யென்னென்று முறுவல்செய்து, இவருடைய பரிகரத் தில் நமக்காளாவாருண்டோவென்றுபார்த்து, அங்கே ஒருவரைக்கா ணாமையாலே தம்முடையகருத்தறியு மிளையபெருமாளைக்குறித்து வார்த்தையருளிச்செய்கிறார்.

௨௦. வாநராதிபதேர்வாக்யம் ஶ்ருத்வா ஸர்வாநுதீக்ஷ்ய ச || ௯௬.

ஈஷதுத்ஸ்மயமாநஸ்து லக்ஷ்மணம் புண்யலக்ஷணம் |

இதி ஹோவாச காகுத்ஸ்தோ வாக்யம் ஸத்யபராக்ரம: || ௯௭.

அர்த்தம். ஸத்யபராக்ரம: - அப்ரதிஹதபராக்ரமத்தை யுடைய, காகுத்ஸ்த: - ஸ்ரீராமன், வாநராதிபதே: - ஸுக்ரீ வனுடைய, வாக்யம் - வசநத்தை, ஶ்ருத்வா - கேட்டு, ஸர்வாந் - எல்லாரையும், உதீக்ஷ்ய - பார்த்தும், ஈஷத் - கொஞ்சம், உத்ஸ்மய மாந: - புன்சிரிப்பையுடையராய், புண்யலக்ஷணம் - நற்குறிகளை யுடைய, லக்ஷ்மணம் - இளையபெருமாளைக்குறித்து, இதி - இந்தப்ர காரம், வாக்யம் - வார்த்தையை, உவாச ஹ - சொன்னார்.

வ்யா. (வாநராதிபதேர்வாக்யம்ஶ்ருத்வா) பேரளவுடையராகை யாலே எட்டாநிலத்திலே வார்த்தை சொன்னவருடையவார்த்தை யைக்கேட்டு. தாம்போனவழி எல்லார்க்கும் ப்ரவாஹிக்க வே ண்டும்படியான நிர்வாஹகத்வத்தையுடைய ரென்றுமாம். (ஸர்வா நுதீக்ஷ்ய) இவர்கள் நம்மையும் பார்ப்பார்களோ? இவர் போன வழியே போவார்களோ? என்றுபார்த்து. அதவா, "ஸ்வாம்யர்த்தே ஸந்நிபாதே ச ஸர்வே ஹ்யேவ ஸஜ்ஜாஹ்ய:" என்கிற ந்யா யத்தாலே நாமும் மஹாராஜருமானால் நம்மைய நுவிதாநம்பண்ணு வார்களோவென்றுபார்த்து என்றுமாம். (ச) ஶப்தத்தாலே பூர்வம்பார் த்தவளவிலேயு மன்றிக்கே, இங்கிதங்களையும் ஹ்ருதயத்திலே ஓடுகிற வார்த்தையையும் பார்த்தபடியை ஸமுச்சயிக்கிறது. (ஈஷதுத்ஸ்ம யமாந:) தாம்நோக்கப்புக்க நன்மையும்பார்த்தபடி ஸ்மிதத்தைப்பண் ணுமளவன்றிக்கே, நாம்சொன்னபக்ஷத்துக்கு தூஷணஞ்சொல்லும்

படி தெளிவையும்பிறப்பிக்குமாகாதே! இதொரு வேஷமிருந்தபடி யென்னென்று ஸ்மிதம்பண்ணினபடி. "நலமேவலிதுகொல்" என்னக்கடவதிறே. (தா) மஹாராஜர்சொன்னவசநத்தைத்தள்ளி அதுக்கவ்வருகே வாதியெதிர்சொல்ல நினைத்தவேறுபாடு. அதாகிறது— "யதேஷ நவாநித்யஜேச" என்கிறவரைக்குறித்து, "வ்யஸநேஷு ப்ரதிக்ராஸ்ஸஹாயதிஹாமத:" என்றவன்தான்; விட்டுப்போந்தானென்றுசொல்லுகை. (லக்ஷணம்) மஹாராஜர் வாக்யத்தில் தன் வாதியெதிர்கேட்பாரில்லாமையாலே, "ப்ராமேவ தஸ்மஹாப்ராஜ்ஞ:" என்று-தம்நினைவுக்கு முற்படக்கடவரான இளையபெருமாளைக் குறித்து அருளிச்செய்தார். (ஸுலக்ஷணம்) இவ்வளவு ஸாரணாமதரை விடாதவாதியெதிர்யாலே மஹாராஜர் பக்ஷத்துக்கு அவ்வருகே வாதியெதிர்சொல்லக்கடவரென்று ஸஹவண கௌஸ்துபம் வடிவிலே தோற்றும்படியான நற்குறியையுடையவர். (உதிவாக்யவாவ) மஹாராஜர் தம்மைக்கொண்டாடும்படி அவர் வேஷாதிஶயத்தைக் கொண்டாடின ப்ரகாரத்தையும், அவர் சொன்ன வசநத்துக்கவ்வருகேவாதியெதிர்சொன்னப்ரகாரத்தையுஞ்சொல்லுகிறது. (ஹ) தம்மேன்மைபாராதே இப்படி கொண்டாடுவதே ! இதென்னநீர்மை என்றும், அவர்வசநத்துக்கவ்வருகேஉத்தரங்காண்பதே! என்றும் ஐஷிகொண்டாடுகிறான். (காகுஸ்த:) உஜ்ஜ்வாதிகளுக்கும் இக்குடியிற்பிறந்தாரைக்கொண்டு தங்கள்:::வன்னியமறுத்துக்கொள்ளும்படியான குடியிற்பிறப்பால்வந்தமேன்மைபாராதேதாழவாதியெதிர்சொல்லுவதேயென்கை. (ஸத்யவாக்ய:) கடோரவப்ரகாஶ:. ப்ராவஶிக்கவொண்ணாதபடி எதிரிகள் முடுகினால் ப்ரகாஶிக்கவல்லாரைப்போலே பதகம்முடிந்தாலுமுத்தரங்கண்டு ப்ரதிவாதிகளை வெல்லவல்லவர். ககஎ,

தாத்பர்யம். இப்படி ஸுக்ரீவமஹாராஜர் சொன்னதைப்பெருமாள்கேட்டு இவருக்குத் தன்னிடத்திலுண்டான ப்ரீதியைக்கண்டு புன்சிரிப்பு சிரித்து,இக்கோஷ்டியில் நமக்கு ஸஹாயமுண்டோவென்று எல்லாரையும்பார்த்து ஒருவரையுங்காணாமையாலே,தன்னுடைய ஶரணாகதரக்ஷணத்தைக்கண்டுப்ரீதரான இளையபெருமாளைப்பார்த்து இப்படி யொருவார்த்தை சொன்னார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

::: வன்னியம்-ஆபத்து.

யுத்தகாண்டம், கஅ-ம் ஸர்க்கம், அ-ம் ஶ்லோகம்.

அவதாரிகை. அவர் தாஞ்சொல்லப்புகுகிற உத்தரத்தினுடைய ஏற்றந்தோற்றுகைக்காக இவர்சொன்ன வார்த்தையின் கனத்தைக் கொண்டாடுகிறார்.

௨௦. அநயீத்ய ஶாஸ்த்ராணி வ்ருத்தா நநுவஸேவ்ய ச।

ந ஶக்யமீத்ருஶம் வக்தும் யது வாச ஹரீஶ்வர:॥ கூஅ.

அர்த்தம். ஹரீஶ்வர: - ஸுக்ரீவன், யத் - எத்தை, உவாச - சொன்னரோ, ஈத்ருஶம் - இப்படிப்பட்டவசநம், ஶாஸ்த்ராணி - சாஸ்த்ரங்களை, அநயீத்ய - ஓதாமலும், வ்ருத்தாந் -பெரியோர்களை, அநுவஸேவ்ய - அநுவர்த்தநம்பண்ணாமலும், வக்தும் - சொல்லுகைக்கு, நஶக்யம் - முடியாது.

வ்யா. (ஶாஸ்த்ராண்யநயீத்ய, வ்ருத்தாம்ஶ்சாநநுஸேவ்ய, ஈத்ருஶம்வக்தும் நஶக்யம்) ஒரு ஶாஸ்த்ரத்தையும் ஒரு ஆசார்யனையும் ஒரு ◇அடிப்பாடானஸந்ததியையுமுடையவனுக்குச்சொல்லலாம்வார்த்தையன்று. (ஈத்ருஶம்) இவ்வார்த்தை ஒருபிறர்க்குப் போலியாகவுஞ் சொல்ல வொண்ணாது. “ஶ்ரேஷ்ட்யம்ஶாஸ்த்ர ஸமாஹோஷு ப்ராப்த:” என்றும்- “வ்ருத்தோபஸேவீ” என்றும் - “யதாஸுந்தோஷஸ்ய யாத்ரோக்த:”என்றும்-மேலே சொல்லப்படுகிற தம்மாலுஞ் சொல்லப் போகாதென்று கருத்து. (யதுவாச) ஸாமாந்யநிர்தேஶத்தால் இவர் வார்த்தையை அநுபாஷிக்கவும் முடியாதென்கை. (ஹரீஶ்வர:) இதுக்கு ஸத்ருஶமேதென்னில் இவர்பெருமைக்கு ஸத்ருஶமென்கை. கூஅ.

தாத்பர்யம். ஸுக்ரீவ மஹாராஜர் சொன்ன வார்த்தையானது சாஸ்த்ரங்களையதிகரியாமலும்பெரியோர்களைத்தொடர்ந்து விஶேஷார்த்தங்களை யறியாமலு மிருக்கிறவர்களால் சொல்லப்போகாது.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், கஅ-ம் ஸர்க்கம், கூ-ம் ஶ்லோகம்.

அவதாரிகை.-இப்படி இளையபெருமாளைநோக்கி மஹாராஜரை ப்ரஶம்ஸித்து ஸ்ரீவிபீஷணாழ்வானை விஶ்வஸநீயனென்று தாஞ்

---

◇ அடிப்பாடான—ஸம்ப்ரதாயஸித்தமான.

சொல்லப்புகுகிற வார்த்தை ராஜாக்களெல்லார்பக்கலிலு முள்ளதென்று மஹாராஜரைக் குறித்து வார்த்தை சொல்லுகிறார்.

உ௬.—ஸூக்தி ஸூக்ஷ்மதரம் கிஞ்சித் யதத்ர ப்ரதிபாதி மே ।
ப்ரத்யக்ஷம் லௌகிகம் சாபி வித்யதே ஸர்வராஜஸு ॥ ௬௬.

அர்த்தம். அத்ர-இந்தவிஷயத்தில், ஸர்வராஜஸு-ஸமஸ்தராஜாக்களிடத்திலும், ப்ரத்யக்ஷம் -காணப்படுகிறதாயும், லௌகிகம்சாபி-லோகஸித்தமாயும், வித்யதே - இருக்கிறதோ, மே - எனக்கு, ப்ரதிபாதி - தோற்றுகிறதோ, ஸூக்ஷ்மதரம் - (அப்படிப்பட்ட) அதிஸூக்ஷ்மமான, கிஞ்சித் - ஓரர்த்தம், ஸூக்தி - இருக்கிறது.

வ்யா. (ஸூக்திஸூக்ஷ்மதரம்) மஹாராஜர் கீழ்ச்சொன்ன வார்த்தை ஸூக்ஷ்மம்; இது-ஸூக்ஷ்மதரம்; இதுக்குமேலொரு அர்த்த மில்லாமையாலே;ஒருதப்பைப்பொறுப்பதென்றில்லாமையாலேயும், எல்லார்க்கும் மேலான வார்த்தையென்கை. எங்ஙனே யென்னில்; மஹாராஜர் பக்கலிலு முக்தாநுபாஷண மொழிய அர்த்தாந்தர மில்லை; பெருமாளும் இவர் வைராஸ்யத்தைப் போக்குகைக்குத் தந்தோள்வலியைப் பேசுகிறாரித்தனை; ஆகையாலே, எல்லாவற்றுக்கும் மேலானவார்த்தையிது. (கிஞ்சித்) மஹாராஜர் வார்த்தைக்கு ※அவ்வருகாயிருக்கச்செய்தே, "கிஞ்சித்" என்று-ஸ்வோக்தியாகையாலே லகுவாகப்பேசுகிறார். (யதத்ர ப்ரதிபாதிமே) விபீஷணவிஷயீகாரத்தில். (ப்ரத்யக்ஷம்) ஸர்வப்ரத்யக்ஷஸித்தம். (லௌகிகம்சாபி) ப்ரத்யக்ஷமேயாகிலும் ஜ்ஞாதிவதம் தோஷமன்றோவென்னில்; எல்லார்க்குமேறுவதொன்று. எங்ஙனேயென்னில்; (வித்யதே ஸர்வராஜஸு) எல்லா ராஜாக்கள் பக்கலிலும் ⊕பரிமாறுவதொன்று. "ஸர்வராஜஸு" என்கையாலே, மஹாராஜர் பக்கலிலும் உள்ளதொன்று; நம்பக்கல் வைராஸ்யத்தாலே மறந்தாரித்தனை.

தாத்பர்யம். நீர் சொன்னதைக்காட்டிலும் மேன்மையை யுடையதாய் ஸமஸ்த ராஜாக்களிடத்திலும் காணப்படுகிற லோகஸித்தமான ஓரர்த்த மெனக்குத் தோற்றுகிறது என்று ஸுக்ரீவ மஹாராஜரைப்பார்த்துச் சொல்லுகிறார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

※ அவ்வருகாயிருக்கச்செய்தே - மேலாயிருக்கச்செய்தே.
⊕ பரிமாறுவதொன்று - நடப்பதொன்று.

யுத்தகாண்டம், ௧௮-ம் ஸர்க்கம், ௧௦-ம் ஶ்லோகம்.

அவதாரிகை.— அவ்வளவு மின்னதென்கிறார் அமித்ரா: இத்யாதியாலே.

௧௦.—அமித்ரா ஸ்தத்குலீநாஶ்ச ப்ராதிதேஶ்யாஶ்ச கீர்த்திதா: ।
வ்யஸநேஷு ப்ரஹர்த்தாரஸ் தஸ்மாதயமிஹாகத: ॥ ௧௦.

அர்த்தம். தத்குலீநாஶ்ச - அக்குலத்திற்பிறந்த ஜ்ஞாதிகளும், ப்ராதிதேஶ்யாஶ்ச-அடுத்ததேசத்திலிருக்குமரசர்களும், வ்யஸநேஷு-ஆபத்துக்களிலே, ப்ரஹர்த்தார: - உபத்ரவிக்கிற, அமித்ரா: - சத்ருக்களாக, கீர்த்திதா: - சொல்லப்பட்டவர்கள்; தஸ்மாத் - ஆகையால், அயம் - இந்தவிபீஷணன், இஹ - இங்கே, ஆகத: -வந்தான்.

வ்யா. (வ்யஸநேஷு ப்ரஹர்த்தார:, தத்குலீநாஶ்ச, ப்ராதிதேஶ்யாஶ்ச, அமித்ரா: கீர்த்திதா:) ராஜாக்களுக்கு வ்யஸநங்கள் வந்தால், ப்ரஹர்த்தாக்களாவார் இரண்டுகோடி; தத்குலீநரான அமித்ரரும் ப்ராதிதேஶ்யரான அமித்ரரும். தத்குலீநராகிறார் - ஸ்வகுலஜாதர்; ப்ராதிதேஶ்யராகிறார்-ப்ரதிதேஶவர்த்திகள்; அநந்தரதேஶவர்த்திகளென்றபடி. (வ்யஸநேஷு) அவர்களி லந்யதமனை வ்யஸநங்கள் ப்ராப்தங்களாயுள்ளவிடத்திலே. (ப்ரஹர்த்தார: கீர்த்திதா:) ப்ரஹரிப்பார்களென்று நீதிஶாஸ்த்ர வித்துக்களாலே சொல்லப்படாநின்றார்கள். "அமித்ரா: - கீர்த்திதா:" என்றுமாம். (தஸ்மாதயமிஹாகத:) ராவணன்தனக்கு நம்மாலே வ்யஸநங்கள் வந்தவாறே அநந்தரனான விவன் நம்மை ப்ரஹரிக்குமென்று அவன் நலியக்கூடுமென்று அத்தாலே வந்தான். ஜ்ஞாதிகளெல்லார்க்குமொவ்வாதோ? இவனுக்குவிஶேஷமென்ன? என்னவொண்ணாது; அவனுக்கு ஹிதஞ்சொல்லுகிற விடத்திலே நம்முடைய உத்கர்ஷமும் அவனுடைய அபகர்ஷமுந் தோற்றச்சொன்னான்; அத்தாலே இவன் பக்கலிலே ஶத்ருபாவம் பண்ணக்கடவன்; அத்தாலே வந்தான். அதவா, அவனுக்கு வ்யஸநம் வந்தவளவிலே அவனுக்கு இவன் ஜ்ஞாதியாகையாலே நம்மைக்கொண்டு அவனை நலியவந்தானாகவுமாமென்று ஒரு வ்யாக்யாதா சொன்னான். இவையிரண்டிலும், "யஶ்சைஷ நவநீதஜ:" என்றுசொன்ன விவரைக்குறித்து இவ

ருடைய ஶக்தியே ஸாதிக்கிறதாகையாலும், மேல் "மாநயந்தி ஸ்வகாந் ஹிதாந்" என்று சொல்லுகையாலும், முற்பட்டதே பொருளாகக்கடவது.

ஆக, இஶ்லோகத்தால், அவனுக்கஞ்சிவந்தானாகிலும் ஸங்க்ராஹ்யன்; நம்மைக்கொண்டு அவனை நலியவந்தானாகிலும் ஸங்க்ராஹ்யன்; உபயபக்ஷத்தாலும் "யதேஷ நவதிஷ்டதே" என்னுமவனல்லன்; நமக்கு ஸஹகாரியென்றதாயிற்று. ௪00·

தாத்பர்யம். ஒருவனுக் காபத்து வந்த வளவில், அக்குலத்திற் பிறந்த ஜ்ஞாதிகளும், அடுத்ததேசத்து ராஜாக்களும் அவனிடத்தில் த்வேஷத்தைப்பண்ணி நலிவார்கள். ஆகையால், ராவணனுக்கு ஆபத்து வந்தவளவில், இவன் நமக்கு ஜ்ஞாதியாகையால் நம்மை நலிவனென்று கலங்கி ராவணன் தன்னை ஹிம்ஸிப்பனென்றெண்ணி இவனிவ்விடத்துக்கு வந்தான்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், கஅ - ம் ஸர்க்கம், கக - ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை.—ஸ்வகுலஜராய் அபாபராயிருப்பாரைக்கொண்டாடுமதொழிய நலியக்கூடுமோவென்னச் சொல்லுகிறார்.

கக.—அபாபாஸ் தத்குலீநாஶ்ச மாநயந்தி ஸ்வகாந் ஹிதாந் |
ஏஷ ப்ராயோ நரேந்த்ராணாம் ஶங்கநீயஸ்து ஶோபந: ||

அர்த்தம். அபாபா: - தோஷசூந்யரான, தத்குலீநா:- அக்குலத்திற்பிறந்தவர்கள், ஸ்வகாந் - தன்னைச்சேர்ந்த, ஹிதாந் - ஹிதபரர்களை, மாநயந்தி - கொண்டாடுவார்கள். நரேந்த்ராணாம் - ராஜாக்களுக்கு, ஏஷ: - இந்த, ஶோபந: - நல்லஸ்வபாவம், ப்ராய: - மிகவும், ஶங்கநீய:- ஸம்சயிக்கத்தக்கதாயேயிருக்கும்.

வ்யா. (அபாபா:, தத்குலீநாஶ்ச, ஸ்வகாந்ஹிதாந் மாநயந்தி) ஸ்வகுலஜரானாலும் அபாபராகவேணும். தனக்கு இஷ்டவிநியோகார்ஹமாம்படி ஹிதரானார் பந்துக்களைக்கொண்டாடும்போதென்கை. ச ஶப்த:- அவதாரணே. அபாபரே யாகவேணுமென்கை. (நரேந்த்ராணா மேஷ ஶோபந: ப்ராய ஶங்கநீய:) லோகத்தில் பாபிஷ்டர் பெருத்திருக்கையாலே, ராஜாக்களுக்கு பந்துஸம்பாவநாரூபமான இந்த ஶோபநஸ்வபாவம் ப்ராயஶ்ஶங்கநீயம்; இந்த ஸ்வபாவமுடையார்க்குச் சுருக்கமென்கை. ராஜாக்களில்வைத்துக்கொண்டு பந்துஸம்பாவநாரூபமான இந்தஶோ

ஸத்வஸ்வபாவத்தையுடையவன் ஶத்ருநீயனென்று வாக்யார்த்தமா கவுமாம். நியந்தாரணேஷ்வதீ. (த) ஶப்த:-ஶுத்தாரணே. ஶத்ருநீய னேயென்கை. "ஹிதம்வாக்யமுக்தவந்" என்றும்- "ஸோபி தெ க்ஷிணா" என்றும் * ஶரணாகதிஜ்ஞனாகையாலே உதவி நியோதாஸ் ஸ்ரயிருந்தானேயாகிலும், விபீஷணன் வரஹிம்ஸா ராஷியாய் வாவிஷ்ணுப் போந்த ராவணனைக்கொண்டாட ஸம்ஹாவனை யில்லை; ஹிம்ஸைவே ஸம்ஹாவிதமென்கை. ௧௦௧

தாத்பர்யம். தனக்கு ஹிதபரரான ஸ்வஜநங்களை ஜ்ஞாதி, தர் மிஷ்டனானால் ஸம்மானிப்பன். ஆகிலும் ராஜாக்களுக்கு ஜ்ஞாதிகளை க்கண்டு ஆதரிப்பது அரிது, ஆகையால் நாம் ஹிதபரனாகிலும் ராவ ணன் ஹிம்ஸகனாகையால் நம்மையாதரியானென்றெண்ணி விபீஷ ணன் நம்மிடத்திலே வந்தான்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், ௧அ-ம் ஸர்க்கம், ௧உ-ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. "வஜர்யமுக்தஸ்துதோஷஸ்வயம்" என்று-ஶத்ருபக்ஷபரி க்ரஹத்தில் யாதொரு தோஷஞ்சொல்லப்பட்டது; அவ்வளவிலே ஒருவிஶேஷமுண்டு; அத்தை நான் சொல்லக்கேளுமென்கிறார்.

உ௦.—யஸ்து தோஷஸ்த்வயா ப்ரோக்தோ ஹ்யாதானே(அ)ரிபலஸ்ய வை।
தத்ர தே கீர்த்தயிஷ்யாமி யதாஶாஸ்த்ரமிதம் ஶ்ருணு॥ ௧௦உ

அர்த்தம். அரிபலஸ்ய - சத்ருபலத்திலுடைய, ஆதானே - ஸ்வீகாரத்தில், ய: - எந்த, தோஷஸ்து - தோஷமானால், த்வயா - உம்மாலே; ப்ரோக்த: - சொல்லப்பட்டதோ, தத்ர - அந்தவிஷயத் தில், தே - உமக்கு, யதாஶாஸ்த்ரம் - சாஸ்த்ரத்தை அதிக்ரமியாமல், கீர்த்தயிஷ்யாமி-சொல்லப்போகிறேன்; இதம்-இச்சொல்லை, ஶ்ருணு- கேளும்.

வ்யா. (அரிபலஸ்ய ஆதானே ய: தோஷஸ்த்வயா ப்ரோக்த: தத்ர தத்) ஶத்ருபக்ஷபரிக்ரஹமல்லவென்று தோஷ ங்களுக்கெல்லாம் நீர் தலைபாகச்சொன்ன அதிலே ஸஹாக்ருஹ்ணயி ருக்கைக்கொரு ஹேது வுண்டு; அந்த விஶேஷத்தைக்கேளுமெ ன்கிறார். (யதாஶாஸ்த்ரம்) ஶத்ருபக்ஷபரிக்ரஹமென்று நீர் நீதிசொல்லுகிறீராகஉம்முடைய வேஷத்தை வெளியிட்டரித்தனை.

---

* ஶரணாகதனாகையாலே - என்றுபாடாந்தரம்.

அப்படியன்றிக்கே, ஶாஸ்த்ரீயா நதிக்ரமேணசொல்லுகிறேனென்கை. (தேகீத்ரவிஷ்யாமி) த்தோஷஞ்சொன்ன உம்முடைய ஹ்ருதயமிசையும்படிக்குச் சொல்லுகிறேனென்கை. (ஶ்ருணு) நான் சொன்னதுக்கு விருத்தமென்றுதல், ராஜாக்களென்றுதல், நம்பக்கல் ஸக்தராலென்றுதல், உபேக்ஷியாதே இதனைக்கேட்டுத்தாருமென்கை. ௧௦௨.

தாத்பர்யம். நீர், விபீஷணன் சத்ருவின் தம்பியாகையாலிவனை இங்கே சேர்க்கக்கூடாதென்று சொன்னவிஷயத்தில், பக்ஷபாதத்தை விட்டு சாஸ்த்ரத்தின்படியே இவன் ஸ்வீகார்யனென்னுமதை உம்முடைய நெஞ்சிற்படும்படி சொல்லுகிறேன் கேளும்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

யுத்தகாண்டம், ௧௮-ம் ஸர்க்கம், ௧௩-ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. கீழ் தர்ஶநத்தாலே சொன்ன விஶேஷம் இன்னதென்கிறார்.

ஶ்லோ.— ந வயம் தத்குலீநாஶ்ச ராஜ்யகாங்க்ஷீ ச ராக்ஷஸ: ।
பண்டிதா ஹி பவிஷ்யந்தி தஸ்மாத் க்ராஹ்யோ விபீஷண: ॥ ௧௦௩.

அர்த்தம். ராக்ஷஸ:-ராக்ஷஸனான விபீஷணன், ராஜ்யகாங்க்ஷீ ச - ராஜ்யத்திலிச்சையுடையவனாயு மிருக்கிறான்; வயம் - நாம், ந தத்குலீநாஶ்ச - அவனுடையகுலத்திற்பிறந்தவர்களுமன்று; பண்டிதா: - புத்திமான்கள், பவிஷ்யந்திஹி - இருப்பார்களன்றோ, தஸ்மாத் - ஆகையால், விபீஷண: - விபீஷணன், க்ராஹ்ய:-அங்கீகரிக்கத்தக்கவன்.

வ்யா. (ராக்ஷஸ: ராஜ்யகாங்க்ஷீ ச, நவயம் தத்குலீநாஶ்ச, பண்டிதா ஹிபவிஷ்யந்தி, தஸ்மாத்க்ராஹ்யோ விபீஷண:) நாட்டிலே ஒரு ராஜாவுக்கு வ்யஸநம் வந்தவளவிலே தத்குலீநராயிருப்பார்க்கும் அந்த ராஜ்யஸ்வத்வமென யுண்டாகையாலே அவர்கள் தனக்கு ஸஹகாரிகளல்லாமையாலும், தத்குலீநனான வவனுடைய ராஜ்யத்தை யாசைப்படுகையாலும், தத்குலீநரல்லாமையாலே அந்த ராஜ்யத்தில் ஸ்வத்வமெயுமின்றிக்கே வ்யவஹாரயாயிருப்பாரைப்பற்றி ராஜ்யத்தைப்பெறுகைக்கு யத்நம்பண்ணுநிற்கும். ஆகையாலே, இவனும், ராவணனுக்கு நம்மாலே ஓராபத்து வந்த

வளவிலே ராக்ஷஸஜாதீயனென்று ராக்ஷஸராஜ்ய காங்க்ஷியாகையாலும், காருண்யத்தைப்பற்றி ராவணனை யழியச்செய்யக்கடவதாகப்பெரிய ஸங்கல்பத்தோடே கிட்டினதாக எடுத்துவிட்டிருக்கிற நமக்கு அந்த ஜாதீயராஜ்யஸ்ப்ருஹை யில்லாமையாலும், நம்மைப் பற்றித் தன்னுடைய ராஜ்யம் பெற்றானாகில் தட்டில்லை. ஒருராக்ஷஸனுக்கு இந்த புத்தியெல்லாமுண்டாகக்கூடுமோ? உம்முடையபேரளவாலே யருளிச்செய்கிறீரித்தனை யன்றோவென்ன; (பண்டிதா ஹி பவிஷ்யந்தி) ராக்ஷஸனென்கிற ஜாதிமாத்ரங்கொண்டு எல்லாரையுங் கழிக்கவொண்ணாது. இவ்வளவு எண்ணவல்லாருமுண்டு காணுமென்கிறார். (த்வாமாஸாத்ய ராஜ்யார்த்தீ விபீஷண:) நம்மைக்கொண்டு தான் ராஜ்யம் பெறவந்தவனை யழியச்செய்கை அயுக்தம்; மேல் ஹிதகாரியாகக் கடவனாகையாலும் நமக்கு க்ராஹ்யன். ௧௫.

தாத்பர்யம்:...ராவணன் இப்போது நம்மால் ஆபத்தை யடைந்திருக்கையில் இந்த விபீஷணன் அவனுக்கு ஜ்ஞாதியாகையால் அவனுடைய ராஜ்யத்தைவிரும்பி, அக்குலத்திற்பிறவாமல் இக்ஷ்வாகுவம்சஜராய் அந்த ராஜ்யத்தில் விருப்பமு மின்றிக்கே பலவான்களாயவனையெதிர்த்திருக்கிற நம்மைப்பற்றி ராஜ்யத்தைப் பெறவேணுமென்று நம்மிடத்தில்வந்தான்; எல்லாஜாதியிலும் இப்படி விமர்சிக்கும் புத்திமான்களிருக்கலாம்; ஆகையாலிவனை யங்கீகரிப்பதேயுக்தம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், ௧௮-ம் ஸர்க்கம், ௧௪-௧௫-ம் ஸ்லோகங்கள்.

---

அவதாரிகை. திருவடி இவன் வரவுக்கு ஹேதுவாகப்பிறப்பட்ச்சொன்ன ஔசித்யாதிகளும் தமக்கு அபிமதமாகையாலே அத்தை முற்பட உபபாதித்து அவனுடைய புத்திவைசக்ஷண்யத்தையே விஶதீகரிக்கிறார் அவ்யக்ரா: என்று தொடங்கி மூன்று ஸ்லோகத்தாலே.

மூ.—அவ்யக்ரா ஹ்யவ்யக்ஷீடா ஶ்லேஷ ந பவிஷ்யந்தி பண்டிதா: ।
ப்ரணாஶ ஹ்யாத்மநோ நேஷ ஸங்கோசமஸ்ய ராஜத:॥ ௧௪ ॥
இதி ஹேதும் பவிஷ்யந்தி த்வாமாஸாத்ய ராஜ்யார்த்தீ விபீஷண: ।

அர்த்தம். ப்ருசதுஷ்டா: - மிகவும் துஷ்டர்களான, தே - அவர்கள், ஸமர்தா: - பதருதவர்களுமாய், ஸஹிதா: - சேர்ந்தவர்களுமாய், நபவிஷ்யந்தி - இரார்கள்; ஏஷ: - இந்த, ப்ரணாத: - த்வநியும், மஹாந் - பெரிதாயிருக்கிறது; அத: - அந்தராவணனிடத்தில் நின்றும், அஸ்ய - இவனுக்கு, பயம் - பீதி, ஸமாகதம் - உண்டாயிற்று; இதி - ஆகையால், பேதம் - வேறுபாட்டை, கமிஷ்யந்தி - அடைவர்கள்; தஸ்மாத் - ஆகையாலே, விபீஷண: - விபீஷணன், க்ராஹ்ய: - அங்கீகரிக்கயோக்யன்.

வ்ய. (ப்ருசதுஷ்டாஸ்தே) மிகவும் துஷ்டராகிறார் - நினைவும் சொலவும் செயலும் பேதித்திருக்குமவர்கள். (ஸமர்தா நபவிஷ்யந்தி) பதருதேயுமிரார்கள். இங்குள்ளார், "வத்ய:" என்பாரும்,"ஆராயவேணும்" என்பாருமாகாநின்றால், பதருதிருப்பாரில்லை. இவர்கள் பக்கல் பதற்றங்கண்டிலோம். (ஸஹிதா நபவிஷ்யந்தி), "ஸர்வம் தாம் ஸம்வேக்ஷ்ய" என்றும் - "நிவேதய மாம்" என்றுஞ் சொல்லுகிற விடத்தில் எல்லாரு மொருமிடருமிருந்தார்கள். இவர்கள் தன்னிலே சேர்ந்தார்கள். (ப்ரணாதஸ்ய) இவனுடைய த்வநியும் நம்மோடே ஸம்பந்தந்தோற்றும்படியாயிருந்தது. "ப்ரணாதஸ்ச ஸம்ஸ்ப்ருஹ்ய:" இத்யாதி: (மஹாநேஷ:) த்வநிகேட்டார்க்கும் இவனபேக்ஷித ஸமரணம்பண்ணி யல்லது குடியிருக்க வொண்ணாதபடி ஆர்த்தி தோற்றியன்றோ இருக்கிறது. (ஏஷ:) நான் கேட்டு உபதேசிக்கிறேனோ ? நாமிருவருங்கூடக்கேட்டதன்றோ. (ததோஸ்ய பயமாகதம்) "ஸ்வஸ்தேஷ ப்ருஹ்மஸூரா:" என்கிறபடியே, அவன் நம்மைக்கொல்லுமென்று ராவணனாலே பயப்பட்டு வந்தான். (இதி பேதம் கமிஷ்யந்தி) இதி:-ஹேதௌ. சிலராலே சிலர்க்குபயம் பிறந்தால், அவர்களை அவர்கள் விட்டுப்போவார்கள். (தஸ்மாத் க்ராஹ்யோவிபீஷண:), கo௬௨.

தாத்பர்யம்:—வஞ்சகர்களுக்கு இவ்வளவு பொறுமையும் ஒற்றுமையுமிராது; இவனுக்கு இவையிரண்டு மிருக்கையால் இவன் கபடியாய்வந்தவனல்லன், அன்றிக்கே, இவனுடைய கூக்குரலும் உள்ளடங்கிய ப்ரேமத்தையறிவிக்கிறது. ஒருவரிடத்தில் மற்றொருவர் பயந்தால் அவர்களையவர்கள் விட்டுப்போவர்களாகையால், இவன் ராவணனால் பயந்து அவனை விட்டுவந்தான்; ஆகையால் சேர்த்துக்கொள்ளலாம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

யுத்தகாண்டம், ௧௮-ம் ஸர்க்கம், ௧௫-ம் ஶ்லோகம்.

அவதாரிகை. பரதாதிகளோடு தேவர்பரிமாறப்போந்தவை தேவரருளிச்செய்யக் கேட்டிருந்தோம்; ஜ்யேஷ்டப்ராதா நலியப்புக இவன் அஞ்சிப்போனானாகையாலே, இவன் நமக்கு ப்ராப்யனென்று தேவரருளிச்செய்கிறது யுக்தமோவென்ன ; சொல்லுகிறார்.

௨௬.— ந ஸர்வே ப்ராதரஸ்தாத பவந்தி பரதோபமா: ॥ ௧௦௫.
மத்விதா வா பிது: புத்ரா: ஸுஹ்ருதோ வா பவத்விதா: ॥

அர்த்தம். தாத! - அப்பா! ஸர்வே - ஸமஸ்தமான, ப்ராதர: - ஸஹோதரர்கள், பரதோபமா: - பரதனோடு ஸாம்யத்தையுடையவர்களாயும், பிது: - தகப்பனுக்கு, புத்ரா: - பிள்ளைகள், மத்விதா வா - என்னைப்போல்வாரும், ஸுஹ்ருத: - தோழர்கள், பவத்விதா வா - உம்மைப்போல்வாரும், ந பவந்தி - ஆகிறார்களில்லை.

வ்யா. (தாத ஸர்வே ப்ராதர: பரதோபமா ந பவந்தி) பிள்ளை பரதனுடையபடி ப்ராத்ருத்வ ப்ரயுக்தமல்ல, பரதத்வ ப்ரயுக்தமென்கை. "படியில் குணத்துப்பரதநம்பி" என்னக்கடவதிறே. அதாகிறது-நடுவிலாய்ச்சி ராஜ்யம் வேண்டுகையாலும், தேவாஸுர ஸங்க்ராமத்தில் வரப்ரதானத்தாலும், ஐயர்தமக்கு ராஜ்யங்கொடுக்க, நாமும் அவர்ஸந்நிதியிலே கொடையை யதாஸ்த்தக்காட்டிலே போனபின்பு, தாய்வழியே ஒருங்க ப்ராப்தமாயிருக்க அதுசெய்யாதே காட்டிலே தொடர்ந்துவந்து, "உம்முடைய ராஜ்யத்தை நீரே கைக்கொள்ளும்" என்று நிர்ப்பந்திப்பானொரு ப்ராதா உண்டோ? அதுக்குமேலே நமக்கு ப்ரத்யுபமாகத்தனக்குப்பொருந்தாத ராஜ்யத்தை எறிட்டுக்கொண்டு நான் காட்டிற்பட்ட க்லேஶத்தளவன்றிக்கே படைவீட்டிலே யிருந்து படுவானொரு ப்ராதாஉண்டோ? இதுவேயன்று லோகவ்யவஹாரத்துக்கு த்ருஷ்டாந்தம்; அன்றிக்கே, உல்லோகமாயிருப்பது இன்னம் சிலவ்யக்திகளுண்டென்று வ்யஸ்தவைஶேஷ்யமாக ப்ரதிபாதிக்கிறார். (மத்விதா வா பிது: புத்ரா:) பித்ருஜான்களில் நம்மோடொப்பாரில்லை. அறுபதினாயிரமாண்டுமலடுநின்று பின்பு, "ஶ்ரேதாதபஸா" என்று-கனத்த தபஸைப்பண்ணி நம்மைப்பெற்று நம்மைக்கொண்டு ப்ராணயாரணம் பண்ணிப்

போந்து நம்முடைய வ்யதிரேகத்திலே சோகாக்ராந்தரான நம்மையைப்போலே யிருக்கும் பித்ருக்களை யுடையராயிருப்பார் நம்மையொழிய உண்டோ? நமக்கேயுள்ளதோரேற்றமன்றோவிது. ஸர்வாபிதா: ஸர்வத்ர்களில் நம்மோடொப்பாரில்லை; ராஜ்யத்துக்குரியோமாய் நம்மையராலே ஸ்வஸ்தமாயிருக்கிற யௌவராஜ்யத்துக்கு நடுவிலாய்ச்சியாலே விக்நம்பிறக்க, அதில் விஷாதம்பண்ணாதே பித்ருவசனத்தையே யாதரித்து நெடுநாள் வனவாஸம் பண்ணப்போந்த நம்மைப்போலே யிருப்பாருஞ்சில ராஜபுத்ருருண்டோவென்றுமாம். "ப்ராதஸ்ஸஹாயா:" என்றாற்போலே மஹாராஜர்தெளிவுக்குறுப்பான யதார்த்தோக்தியாகையாலே க்ரூரத்வம் ஸம்பவியில்லை. (ஸர்வஹ்ருதோஷாஸ்வஸ்தியா:) உம்முடைய ஸௌஹார்த்தமும் ஸர்வஹ்ருத்ஸ்வஸாந்த்வ ப்ரயுக்தமன்று. நீர்முன்வரக்கடவதாகப்பண்ணின ஸமயத்தை ஸ்வதீதிரக்ஷிக்க, அதுபொறாதே "ஸ்வாம் தர்ஸதாதிக்ராதம் ஹநிஷ்யாமி ஸபாந்தவம்" என்று நான் ஸர்வதிதனைப்பிள்ளையைக் கொடுவரக்காட்ட, அவனும் ஸதிஸர்வதிதனைச் சொல்லக்கடவதல்லாத வார்த்தையைச் சொன்னவிடத்திலும், பாவத்தையேபார்த்து ஸீதராய், நம்பக்கல் ப்ரீதிசயத்தாலே சரணம்புகுந்தவனையும் சத்ருவென்று ஸ்வஸாநேஹயஸக்திகளா யிருப்பார் சிலஸர்வஹ்ருத்துக்கள் புறம்பேயுண்டோ? உமக்கேயுள்ளதொன்றன்றோ! ஆனபின்பு, லோகவ்யவஹாரத்தைப்பார்த்தால் ராவணன் இவனை நலிய நினைக்கையும், அவனோடு இவன் விரோதனைப் போருகையுங் கூடுமென்கை. க௦௫௨.

தாத்பர்யம்:—தன்தாயான கைகேயி தான் பெற்றவரத்தினால் ஸம்பாதித்துத் தனக்குக்கொடுத்த ராஜ்யத்தையும்விட்டுக் காட்டில் பின்தொடர்ந்து ராஜ்யத்தை நீரேகொள்ளுமென்று பலாத்கரித்து, நமக்காக ராஜ்யதுக்கங்களை யநுபவிக்கும் பரதனைப்போல் ஸஹோதரரும், நெடுநாள்பிள்ளையில்லாமலிருந்து தபஸ்ஸுபண்ணி என்னைப்பெற்று நான்வனவாஸம் வருகையில் என்விஸ்லேஷம் பொறாமல் ப்ராணனைவிட்ட தசரதமஹாராஜரைப்போல் தகப்பனாரும், எனக்கு முறையாய்வந்த ராஜ்யத்தை எனக்கு ஐயர்கொடுக்கினும் என்னிளையமாதர்வுக்காக அந்தஸுகத்தைவிட்டுத் தகப்பனை ஸத்யத்தில் நின்றுரக்ஷித்தஎன்னைப்போலபிள்ளைகளும், நீர் முதல்செய்த ப்ரதிஜ்ஞை

யைத் தப்ப அதற்குக் கோபித்து இளையபெருமாளையனுப்ப, அவரும் குபிதராய் சொல்லத்தகாதவைசொல்லியும் அதைமதியாமல் ஸத்யத்தையேபார்த்து வந்த உம்மைப்போல ஸ்நேஹிதரும் இருப்பார்களா? ஆனபின்பு இந்தவிபீஷணன் லோகருடத்வத்தையைப்பார்த்து ராவணன் தன்னை ஶத்ருவென்று அவனைவிட்டு இங்கேவருவது யுக்தந்தான்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், ௧௮-ம் ஸர்க்கம், ௧௭-ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. இப்படி ஶரணாகதனான விபீஷணாழ்வான் பக்கல் பெருமாளுக்குண்டான பக்ஷபாதாதிஶயத்தைக் கண்டு, மஹாராஜரும் ஸ்வாபேக்ஷிதஸித்திக்காக இளைய பெருமாளையும் கூட்டிக்கொண்டு ஶரணம்புக்கு ஒருவார்த்தை சொல்லுகிறார்.

ஶ்லோ.— ஏவமுக்தஸ்து ராமேண ஸுக்³ரீவ ஸ்ஸஹலக்ஷ்மண꞉ । ௩௫.
உத்தா²யேத³ம் மஹாப்ராஜ்ஞ꞉ ப்ரணதோ வாக்யமப்³ரவீத் ॥

அர்த்தம். ராமேண - ஶ்ரீராமனால், ஏவம் - இந்தப்ரகாரம், உக்த꞉ - சொல்லப்பட்ட, மஹாப்ராஜ்ஞ꞉ - விஶேஷஜ்ஞானமுடைய, ஸுக்³ரீவ꞉ - ஸுக்ரீவமஹாராஜரும், ஸஹலக்ஷ்மண꞉-இளையபெருமாளோடு கூடினவராய், உத்தா²ய - எழுந்திருந்து, ப்ரணத꞉ - நமஸ்காரம்பண்ணினவராய், இத³ம் - இந்த, வாக்யம் - சொல்லை, அப்³ரவீத் - சொன்னார்,

வ்யா. (ராமேணைவமுக்தஸ்ஸுக்³ரீவஸ்து) பெருமாள் தம்மை யநுமதித்துச் சொன்னபடியாலும், தமக்குப்பதகம் முட்டினபடியாலும், அவர்வழியேபோக ப்ராப்தமாயிருக்க, பின்னையுமவரோடு வேறுபட்டு அவரைத்தம்வழியிலே போக்க யத்நம் பண்ணினபடி. (ஸஹலக்ஷ்மண꞉) தம்மிலும் பரிவரென்று, "லக்ஷ்மணஸ்யாப்ருத꞉" என்று - ப்ரயாணத்திலே கூட்டிக்கொண்டாற்போலே, ப்ரபத்திக்குமவரைக்கூட்டிக்கொள்ளுகிறார். (ப்ரணத꞉) ஶத்ருக்கள்பண்ணும் ப்ரபத்தியன்றிறே ப்ரபத்தியாவது; அநுகூலர்பண்ணும் ப்ரபத்திக்கு மிரங்கவேண்டாவோ? என்று அவனுடைய ஒரு ஶரணா

மதிக்கு அவதாரமாக இரண்டு ஶரணாகதியைப்பண்ணுகிறுமென்று கருத்து (ஹோவுராஜ:) தமக்குப்பதம் முட்டின தெசையிலும் ஶர ணாகதி ஸாயுஜ்ர் பெருமாளென்று அறிகை. (உத்தாய ப்ரணத: ஜகம் வாக்யமேவ வீசு) பெருமாள் தம்மை அள்ளியெடுத்து, "நீர் சொன்ன கார்யஞ்செய்கிறோம்" என்று சொல்லும்படி திருவடிக ளிலேவிழுந்து இந்த வார்த்தையை விண்ணப்பஞ் செய்தார். க௦சுரீ•

தாத்பர்யம். ஸ்ரீராமனிப்படி யருளிச்செய்யக்கேட்ட ஸுக்ரீ வன் இளையபெருமாளோடுகூட எழுந்திருந்து நமஸ்கரித்துத்திருப்பி யும் ஸ்ரீராமனோடு இப்படி விண்ணப்பஞ்செய்தார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், கஅ - ம் ஸர்க்கம், கஅ - ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை இப்படி ப்ரஸந்நராய் ப்ரஸந்நவாக்யம்கேட்ட ருளுமவரென்று, "ராவணேந ப்ரணிஹிதம்" என்று - முற்பட விண்ணப்பஞ்செய்ததை தன்னையே விண்ணப்பஞ்செய்கிறார்

௨௯.—ராவணேந ப்ரணிஹிதம் தமவேஹி நிஶாசரம் ‖ க௦எ.
தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே க்ஷமம் க்ஷமவதாம்வர ‖

அர்த்தம். தம் - அந்த, நிஶாசரம் - ராக்ஷஸனை, ராவணேந- ராவணனாலே, ப்ரணிஹிதம் - கூடச்சாரியாயனுப்பப்பட்டவனாய், அவேஹி - அறியும்; க்ஷமவதாம்வர - பொறுமையுள்ளவர்களுக்குத் தலைவரே! அஹம்-நான், தஸ்ய-அவனுடைய, நிக்ரஹம்- கொலையை, க்ஷமம் - யோக்யமாக, மந்யே - எண்ணுகிறேன்.

வ்யா. வசநஸ்வரத்துக்கு ப்ரயோஜநம் - அவன் ஶரண மென்றவார்த்தையிலே அவஹாத விஸ்ரம்பிருந்த வளவிலே யாயிற்று நாமவைசொல்லிற்று; நாம் ஶரணம்புக்கபின்பு தெளிந்து நல்வார்த்தை கேட்பரென்று முன்பு சொன்னவைதன்னையே திரு வுள்ளத்திலே படுத்துகை. (நிஶாசரம்) கள்ளரைப்போலே ஸந்த்யா ராத்ரியிலே புறப்பட்டு ப்ராஹ்மணஹிம்ஸையைப் பண்ணிக்கொண்டு திரி யும் ஜந்மமென்று இவன் தண்மை திருவுள்ளத்திற்படாமையிறே இவன்

நமக்கு ஸஹகாரியென்றருளிச்செய்தது; அத்தாலே "நிஶாசர:" என்கிறார். ௧௦௭ ௨.

தாத்பர்யம்.—தேவரீர், அவன்பண்ணின சரணாகதியைக்கண்டு மயங்கி நான்சொன்னவற்றைத் திருவுள்ளம்பற்றவில்லை; இப்போது நாங்களிருவருமாக சரணாகதிபண்ணி விண்ணப்பஞ்செய்கிறோம்; கேட்டருளவேணும். இவன் ராவணனாலே அனுப்பப்பட்ட தூதன்தான்; இவன் பிறப்பினாலேயே பிறரை ஹிம்ஸித்துத்திரியும் ஸ்வபாவமுடையவன்; வருமபோதும், ராத்ரியில் மறைந்துவந்தான்; இதையெல்லாம் ஆராய்ந்து இவனைக்கொல்வதேயோக்யம்; உம்முடைய க்ஷமாகுணத்துக்கு இவன் விஷயமன்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

யுத்தகாண்டம், ௧௮-ம் ஸர்க்கம், ௧௯-ம் ஶ்லோகம்.

---

௨௦.—ராக்ஷஸோ ஜிஹ்மயா புத்த்யா ஸந்திஷ்டோऽயமிஹாகத: ||
ப்ரஹர்த்தும் த்வயி விஶ்வஸ்தே ப்ரச்சந்நோ மயி வாऽநக |
லக்ஷ்மணே வா மஹாபாஹோ ஸ வத்ய: ஸசிவைஸ்ஸஹ ||௧௦௯.

அர்த்தம். அநக! - தோஷமில்லாதவரே! அயம் - இந்த, ராக்ஷஸ: - அரக்கன், ஜிஹ்மயா - குடிலமான, புத்த்யா - புத்தியாலே, ஸந்திஷ்ட: - ஏவப்பட்டவனாய், த்வயி - நீர், விஶ்வஸ்தே - நம்பிக்கையுடையீராகையில், ப்ரச்சந்ந: - மறைந்தவனாய், மயி - என்விஷயத்திலும், லக்ஷ்மணே வ - இளையபெருமாள் விஷயத்திலும், ப்ரஹர்த்தும் - அடிக்கைக்கு, இஹ - இங்கே, ஆகத: - வந்தான். மஹாபாஹோ! - பெருத்தபுஜங்களையுடையவரே! ஸ: - அவன், ஸசிவைஸ்ஸஹ - மந்த்ரிகளோடுகூட, வத்ய: - கொல்லத்தகுந்தவன்.

வ்யா. (அயம் ராக்ஷஸ: ஜிஹ்மயா புத்த்யா ஸந்திஷ்ட: ப்ரச்சந்ந: இஹ ஆகத:) நீசஜாதியானவிவன் ஸஜாதிக்குக் கார்யஞ்செய்யுமத்தனை போக்கி விஜாதீயரான நமக்குக்கார்யஞ்செய்யான்காணும். (ப்ரஹர்த்தும் த்வயி விஶ்வஸ்தே) தேவர் விஶ்வஸித்தவாறே ஸஹகாரியன்றிக்கே யொழியுமளவன்றிக்கே உம்மை நலிவதுஞ்செய்யும். "தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்" என்று - அதுக்கு இசைந்தோமிறே யென்றவவருக்கு பரிஹரிக்கைக்காக, (மயிவ) என்கிறார். "த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம" என்றும் -

"ஸுஹ்ருதோ வா ஸுவதியா:" என்றும்-நீர்நினைத்திருக்கிறஎன்பக்கலி லும்நலியுங்காணுமிவன். (ஶ்ரீக்ஷேணவா; "ஸுஹ்ருத் ஶத்ருவிஜீவாவ:" என்று-அருளினீராகில் உளராயிருக்குமவரையும் நலியும். ஶரணாகத ரக்ஷணமென்று ஒருவ்யாஜத்தால் ஒரு ராக்ஷஸனுக்காக எங்களிருவ வரையும் நீர் இழக்கக்கிடீர் புகுகிறது. (ஸுநவ) இந்தப்பொல்லாங்கு கள் உமக்கு வாராதொழிந்திடுகவென்று கருத்து. (ஸ்வாபாஹோ) உம்முடைய தோளை அண்டை கொண்டிருக்கிற வெங்களை ஶத்ரு வின்கையிலே காட்டிக்கொடுக்கலாமோ? எங்கள் பக்கலிலே தண்ண ளியும் அவன் பக்கலிலே தோள்வலியுமாகையன்றோ யுக்தம். (ஸ: ஸஹிவைஸஹவய்ய:) ஆகையாலே ஸபரிகரனாக அவன்வத்யன்.

தாத்பர்யம்.—இந்த விபீஷணன், ராவணனாலனுப்பப்பட்டவனா கையால் தன் கபட வ்ருத்தியால் அனுகூலன்போலிருந்து தன்னிட த்தில் நம்பிக்கையைப்பிறப்பித்து, நாம் சேர்த்துக்கொள்ளுகையில் நம் மை உபத்ரவிக்கைக்காக இங்கே வந்தான். இவன் தோஷியாகிலு மி வனையங்கீகரிக்கத் திருவுள்ளமானால் ஸீதாதேவியையும் விட்டுப் பற்றும்படி ஸுஹ்ருத்துக்களில் ஶ்ரேஷ்டனாக தேவரீர் நினைத்தி ருக்குமென்னையும் தேவரீரை விட்டு க்ஷணகாலமும் தரிக்கமாட் டாத இளைய பெருமாளையும் இவன் உபத்ரவிப்பன். அப்போது ஒரு ராக்ஷஸனுக்காக ஆஶ்ரிதரான எங்களிருவரையு மிழக்க வே ண்டிவரும். ஆகையாலித் தீங்குகளொன்றும் வாராதபடி ஆலோ சித்துச் செய்தருளவேணும். உம்முடைய தோளின் கீழொதுங்கி நின்ற எங்களை அத்தோள் வலியால் சத்ருக்களை நிரஸநம் பண்ணி ரக்ஷிப்பதே தர்மமாகையால் இவனையுமிவன் பரிஜநங்களையும் கொ ல்வதேயுக்தம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், ௧௮-ம் ஸர்க்கம், ௨௦-ம் ஶ்லோகம்.

௨௯.— ஏவமுக்த்வா ரகுஶ்ரேஷ்டம் ஸுக்ரீவோ வாஹிநீபதி: ।
வாக்யஜ்ஞோ வாக்யகுஶலம் ததோ மௌநமுபாகமத் ॥ ௧௧௦.

அர்த்தம். வாஹிநீபதி: - ஸேநாபதியையும், வாக்யஜ்ஞ: - வசனங் களையறிந்திருக்கிற, ஸுக்ரீவ: - ஸுக்ரீவமஹாராஜர், வாக்யகுஶ லம் - வாக்யத்தில் ஸமர்த்தரான, ரகுஶ்ரேஷ்டம் - ரகுக்களில் உத்தமரான ஸ்ரீராமனைக்குறித்து, ஏவம் - இப்படி, உக்த்வா - சொல்லி, தத: - அதுக்குப்பிற்பாடு, மௌநம் - பேசாதிருப்பதை, உபாகமத் - அடைந்தார்.

வ்யா. (ரவேஸ்ரேஷ்டம்) ஸரணாகதனுக்காகத்தன்னை யழிய மாறின ரவியினுடைய ஸூர்யபுத்ரர்க்கு ஸ்வஸ்யென்னும்படி ஸரணாகதஸம்ரக்ஷணத்தில் வ்யவஸாயமுள்ளவரை. (ஸுக்ரீவோவாஹி நீதிமாந்) தாம்போனவழியை யநுவியா நம்பண்ணும் வஸிகரத்தை யுடையவர். (வாக்யஜ்ஞ:) ஸர்வவசநவ்யக்திகளுடைய குணதோஷங்களை யறியுமவர். (வாக்யகுஸலம்) எதிரிகளுடைய அபிப்ராயவஸ்துகமாக வார்த்தை சொல்லவல்லவரை. (ஸமவேக்ஷ்ய தூதோ வாநரஹோவாமஹே) தஞ்சீர்மையறியாதவரை நாம் சொல்லுவதுண்டோ வென்று ப்ரணயரோஷத்தாலே பேசாதிருந்தார். கக0.

தாத்பர்யம்.— ஸேநாபதியான ஸுக்ரீவன் ஆர்த்த ரக்ஷகர்களில் தலைவராய்ப்பிறரபிப்ராயத்தையறிந்து சொல்லவல்ல ஸ்ரீராமனைக் குறித்து இப்படி சொல்லிப் பின்பு நம்சொல்லைக் கேட்டிலரென்ற கலக்கத்தால் பேசாதிருந்தார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், கஅ-ம் ஸர்க்கம், உக-ம் ஸ்லோகம்.

அவதாரிகை. தஅநந்தரம் நிதாநஜ்ஞரான பெருமாள் மஹாராஜருடைய அதிநிர்பந்த ஹேதுவைத் தன் திருவுள்ளத்திலே நிரூபித்து தஅநுரூபமாக வார்த்தை யருளிச் செய்கிறாரென்கிறது.

மூ.— ஸுக்ரீவஸ்ய து தத்வாக்யம் ராம: ஸ்ருத்வா விம்ருஸ்ய ச |
தத: ஸுபதரம் வாக்யமுவாச ஹரிபுங்கவம் || ககக.

அர்த்தம். ராம: - ஸ்ரீராமன், ஸுக்ரீவஸ்ய - ஸுக்ரீவனுடைய, தத் - அந்த, வாக்யம் - சொல்லை, ஸ்ருத்வா - கேட்டு, விம்ருஸ்ய ச - ஆராய்ந்து, தத: - அதுக்குப்பிற்பாடு, ஹரிபுங்கவம்-வாநரஸ்ரேஷ்டனை ஸுக்ரீவனைக்குறித்து, ஸுபதரம் - ஸ்ரேஷ்டதரமான, வாக்யம் - வார்த்தையை, உவாச - சொன்னார்,

வ்யா. (ஸுக்ரீவஸ்ய தத்வாக்யம் ஸ்ருத்வா) வ்யாகுலராய் ஹ்ருதயமறியாதே சொன்ன வார்த்தையைக்கேட்டு. (ராமஸ்து) இவர் உபவத்தி ஸாமர்த்யரன்றென்றறிந்தவிஸேஷம். (விம்ருஸ்ய ச) வ்யாகுலராயிருக்குமவர்க்கு ப்ரதிஹாரமேதென்று விமர்சிப்பதுஞ் செய்து. (தத:) இனி இவர்க்கு நம்மைக்குறித்து வார்த்தையில்லை யென்று, நிஸ்சயித்தபின்பு வார்த்தைசொன்னார். (ஸுபதரம்வாக்யமுவாச)

ஸௌஹார்த்தஞ்செல்லா நிற்கச்செய்தே ஸ்வாமியை எதிரிடுங்கலக்க மெல்லாந்தீர்ந்து அநுவர்த்தநம் பண்ணிவைக்கும் ஸாமர்த்யாதிக. (ஹரிவம்ஶவத்) ராஜாக்களாயிருக்கச்செய்தே நீதிஶாஸ்த்ரராயிருக்கையன்றிக்கே யிருக்கிற ஸௌஹார்த்தத்தை யநுஸந்தித்து ஹ்ருஷ்டனாய்க் கொண்டாடுகிறான். ௧௧௧.

தாத்பர்யம்.—இப்படி ஸுக்ரீவன் பெருமாளிடத்தில் தனக்குண்டானப்ரேமத்தால் விண்ணப்பஞ்செய்ய, ஸ்ரீராமன் கேட்டு இதற்குத் தகுந்த உத்தரமின்னதென்று ஆலோசித்து, தஞ்சொற்கேட்டிலரென்று கோபத்தால் பேசாதிருந்தஸுக்ரீவனைக் குறித்துச் சொன்னார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

யுத்தகாண்டம், ௧௮-ம் ஸர்க்கம். ௨௨-ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. மூன்றாமுன்னம் அதிக்ஷுத்ரனான ராக்ஷஸன் நம்பக்கலபகாரத்தை நினைக்கவும் ஶக்தனல்லனென்கிறார்.

ஶ்லோ.— ஸுதுஷ்டோ வா ப்யதுஷ்டோ வா கிமேஷ ரஜநீசர: |
ஸூக்ஷ்மமப்யஹிதம் கர்த்தும் மமாஶக்த: கதஞ்சந || ௧௧௨.

அர்த்தம். ஏஷ:-இந்த, ரஜநீசர:-ராக்ஷஸனான விபீஷணன், ஸுதுஷ்டோவா - மிகவும் தோஷியானாலும், அதுஷ்டோவா - தோஷரஹிதனானாலும், கிம் - என்ன; கதஞ்சந - ஒருபடியாலும், மம - எனக்கு, ஸூக்ஷ்மமபி-கொஞ்சமும், அஹிதம் - அநிஷ்டத்தை, கர்த்தும் - செய்ய, அஶக்த: - சக்தியில்லாதவனாயிருக்கிறான்.

வ்யா. (ஸுதுஷ்டோவா வ்யதுஷ்டோவா) இவன் நீர்சொன்னபடியே துஷ்டனாகவுமாம்; நான்சொன்னபடியே அதுஷ்டனாகவுமாம்; இவையிரண்டுமப்ரயோஜகம். எங்ஙனேயென்னில்; ஶரணாகதனானவன்பக்கலிலே பஹுவ்யாகாரங்களாக தோஷங்களைச்சொன்னீரேயாகிலும், துஷ்டனென்று என்னெஞ்சிற்படமாட்டாது; உமக்கு மறுமாற்றமில்லாதபடி ஹேதுக்களாலே இவனுடைய தௌஷ்ட்யத்தை ஏற்றித்தந்தாலும், அஸூயாநேஹய ஶக்திகளான உம்முடைய நெஞ்சிற்படமாட்டாது (கிமேஷ ரஜநீசர:) நீர்நினைத்தபடியே பாபகனாய்வந்தவனாயிடுக; ஆனாலுமிவன் றன்னைக்கண்டிவீரோ? (வா)

ஹிதரோ த்ருணவிவன், நமக்கென்ன வபகாரம்பண்ணுவான்; இவ னுக்கஞ்சி நீரெங்ஙனே ராவணவதம்பண்ணக்கடவதாக எடுத்து விட்டிருக்கிறபடி. வஞ்சகராயிருப்பாரை இவ்வுலகென்று பரீக்ஷிக்க லாமோவென்ன; (ஶ்ரீவத்ஸ ஸ்வஹிதஜ்ஞரஶக்த:) "பாஹ்யா யாமப்யுபாயஸ்யயோகோஹி ஸாத்ந:" என்று-கண்டார் கவிபா டுகிறதோவே இவன்கண்டால் நெஞ்சாலுமோ ரஹிதத்தை இவன் பண்ணஶக்தனல்லன். (கபடம்) நீரநுகூலனென்றுவிஶ்வஸித்தால் கலியலாமேயென்ன; புலிகிடந்த தூறைக்கண்டஞ்சுவாரைப்போலே நந்தோள் வலியைக்கண்டு அவனெப்போதும் மாட்டான். ககஉ.

தாத்பர்யம்—இந்த விபீஷணன் நீர் சொன்னபடி துஷ்டனு கிலும் சரி; நான் சொன்னபடி துஷ்டனுகாவிடிலும் சரி. எப்படியா னுலும் நாம் பயப்படவேண்டியதில்லை. நமக்கெவ்விதத்திலும் அல் பம் கெடுதி செய்யவாகிலும் முடியாது என்றறியும்,

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், கஅ - ம் ஸர்க்கம், உங - ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. இப்படியருளிச்செய்யச்செய்தேயும், எதிர்த் தலையில் ஜாதிவ்யாப்தமான க்ரௌர்யமே மேற்கிடந்து நெஞ்சுதெ ளியாமையாலே, இவர் தெளிகைக்காக இவனளவேயல்ல, லோகத் திலே க்ரூரஜாதியென்று பேர்பெற்றவற்றையடங்க ஒருநாயாலே அழிக்கவல்ல தம்வீர்யத்தை யாவிஷ்கரிக்கிறுர்.

மூ.—பிஶாசாந்தாநவாந்யக்ஷாந்ப்ருதிவ்யாம்சைவராக்ஷஸாந்
அங்குள்யக்ரேணதாந்ஹந்யாமிச்சந்ஹரிகணேஶ்வர ‖ககங.

அர்த்தம். ஹரிகணேஶ்வர! - வாநரஸமூஹத்துக்கு ராஜாவான ஸுக்ரீவனே! பிஶாசாந் - பிசாசங்களையும், தாநவாந் - தனு புத்ரர்களான அஸுரரையும், யக்ஷாந் - யக்ஷர்களையும், ப்ருதிவ்யாம் சைவ - பூமியிலிருக்கிற, ராக்ஷஸாந் - அரக்கர்களையும், தாந் - அவர்களெல்லாரையும், இச்சந் - இச்சையுடையவனுய்க்கொண்டு, அங்குள்யக்ரேண - விரல்நுனியால், ஹந்யாம் - கொல்லக்கடவேன்.

வ்யா. (பிஶாசாந் தாநவாந் யக்ஷாந்) கள்ளர், பள்ளிகள், வலையர், கொலையரென்னுமாப்போலே ஹிம்ஸகஜாதியினுடைய அவாந்தரபேதமிருக்கிறபடி. இந்த வர்க்கமுடைய அந்யோந்யமுண்டான ஸஹஜஶாத்ரவத்தைப்பொகட்டு நம்மைநலிகைக்காக ஏககண்டராய்வருகை. (ப்ருதிவ்யாஞ்சைவ ராக்ஷஸாந்) லங்கையிலுள்ள ராக்ஷஸரளவன்றிக்கே பஞ்சாஶத்கோடி விஸ்தீர்ணையான பூமியிலுள்ள ராக்ஷஸஜாதியடங்கக் கீழ்ச்சொன்னவர்களோடே ஏககண்டராய் வருகை. (அங்குல்யக்ரேண தாந் ஹந்யாம்) இவர்களை அழியச் செய்யுமிடத்தில் நம்பலமெல்லாம் வேண்டா, ஆயுதமும் வேண்டாம், விரலிலே அக்ரத்தாலே நலியவல்லோம். ஒரு பரிகரத்தாலே கொல்லப்பாற்றம்போராத க்ருமிகீடாதிகளை விரல்தலையாலே தேய்க்குமாப்போலே தேய்த்துப்பொகடுகிறோமென்கை. ஆனால் நம்முடைய ப்ரதிபக்ஷங்குறியழியாதேயிருப்பானென்னென்னில்; (இச்சந்) அருமையாலன்று; செய்யநினையாமையாலேயென்கிறார். நம்முயிர் ஸ்வஸ்தமான நிலையிலே நலிந்த ராவணனை நலிகைக்கு இசைவின்றிக்கேயிருப்பானென்னென்னில்; விபீஷணனைப்போலே உயிரோடே தலைசாய்க்குமாகில் வ்யர்த்தமேகொல்லுகிறதென்னென்னும் நினைவாலேயென்றுகருத்து. (இச்சந்) அங்குல்யக்ரந்தானும் வேண்டா; நம்முடைய ஸங்கல்பமே ஸாதநமாக அழிக்கவல்லோமென்றிவருடைய பய நிவ்ருத்திக்காகத் தம்முடைய ஐஶ்வர்யத்தை யாவிஷ்கரிக்கிறாரென்றுமாம். (ஹரிகணேஶ்வர) நாம் மாட்டாதொழிந்தால் ஸபரிகரரான நீரருளீரென்று கருத்து. வ்யக்ரராய் நம்மையறியாதொழிந்தாலும்மையுமறியாதொழியவேணுமோ? ௧௧௯.

தாத்பர்யம்.—ஸுக்ரீவனே! ஒரு விபீஷணனைக் குறித்து நீரேனிப்படி பயப்படுகிறீர்; இந்த பஞ்சாசத் கோடியோஜநம் பரப்புள்ள பூமியிலிருக்கும் ராக்ஷஸர்களெல்லாம் சேர்ந்து வந்தாலும், இன்னமும் அப்படி க்ரூரர்களான பிசாசங்களும் அஸுரர்களும் யக்ஷர்களும் கூடி இவர்களுக்கு ஸஹாயமாய் வந்தாலும் இவர்களைக் கொஞ்சமும் மதிக்கமாட்டேன். இவர்களைக் கொல்ல நினைத்தால் ஆயுதமும் வேண்டா. நுனிவிரலினால் புழுக்களைப் போல் தேய்த்து விடுவேன்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

———

யுத்தகாண்டம், ௧௮ - ம் ஸர்க்கம், ௨௬ - ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. தம்முடைய பக்ஷத்தைக்காட்டக்கண்ட மஹாராஜர் நெஞ்சுநெகிழ்ந்தவளவிலே, நாமும் பக்ஷஹீநராய் அவனும் நமக்கு வாய்க்கூறாலும் விடவொண்ணாமைக்கடியான ஸத்துக்களநுஷ்டித்த இதிஹாஸத்தைக் கேளீரென்று கபோதோபாக்யாநத்தை யருளிச்செய்கிறார்.

ஶ்லோ.— ஶ்ரூயதே ஹி கபோதேந ஶத்ரு: ஶரணமாகத: |
அர்சிதஶ்ச யதாந்யாயம் ஸ்வைஶ்ச மாம்ஸைர்நிமந்த்ரித: || ௨௬.

அர்த்தம். ஶரணம் - இருப்பிடத்தைக்குறித்து, ஆகத: - வந்திருக்கிற, ஶத்ரு: - வைரியான வேடன், கபோதேந - புறாவினால், யதாந்யாயம் - சாஸ்த்ரத்தை யதிக்ரமியாமல், அர்சித: - பூஜிக்கப்பட்டவனாய், ஸ்வை: - தன்னதான, மாம்ஸை: ச - மாம்ஸங்களினாலும், நிமந்த்ரித: - ஆஹாரமும் கொடுக்கப்பட்டான். (என்று,) ஶ்ரூயதே - கேட்கப்படுகிறதன்றோ.

வ்யா. (ஶ்ரூயதே) "ஸ்மர்யதே" என்னாதே, "ஶ்ரூயதே" என்கிறது-வேதம்போலே கேட்டுப்போருவதொன்று. வர்த்தமாநநிர்தேஶம், "[illegible]" என்னும்படியே ஸம்ப்ரதாயவிச்சேதமின்றிக்கேபோருகை. அங்ஙனன்றிக்கே, கேட்டே போமித்தனைபோக்கி அநுஷ்டிக்க வரிதென்கிறதென்றுமாம். (ஹி) இக்ஷ்வாகுராஜ்யத்தைப்போலே வாநரராஜ்யத்திலிது ப்ரஸித்தமன்றோ?. (கபோதேந) ஶாஸ்த்ராதிகாரிகளாய் விவக்ஷிதரான நாம் விசாரியாநின்றோம்; ஒரு திர்யக்கநுஷ்டித்து நின்றதென்று கருத்து. வநசரநத்தாலே நம்மைப்போலே விலக்குகைக்கு ஸ்வரிகரமில்லாமையாலும், தந்நிஷ்டாநாந்தரமொத்தயான பேடை ஸந்நிஹிதையாய் அதிலேமூட்டுகையாலுமிறே ஶரணாகதஸம்ரக்ஷணம் பண்ணலாயிற்றென்றுகருத்து. (ஶத்ரு:) ஶத்ருஸம்பந்தத்தாலே நாம் விசாரியாநின்றோம்; ஸாக்ஷாச்சத்ருவிறே அவன். (ஶரணமாகத:) பந்துக்களையடையவிட்டு ஸ்வநிக்ஷேபஸர்வஸ்வமாகப்புகுந்த இவனை விசாரியாநின்றோம்; தானிருக்கும் நிழலிலே வந்ததுவே ஹேதுவாக ரக்ஷித்தது. (அர்சிதஶ்ச) நாம் இவனை ஸ்வீகரிக்கையிலே ஸந்தேஹியாநின்றோம்; அதுவன்றிக்கே அதிதியைப்போலே பூஜித்தது. அதாகிறது - ஶ்ரீதவரிஹாராதிகளைப் பண்ணுகை. (யதா

நாயழ) ஶத்ரூவையாராயித்ததுந்தனக்கோரேற்றமாக நினைத்தி ருக்கையன்றிக்கே வ்யாவமென்றிருக்கை. ஸ்ரீதவஸிஹாராதிகள் ஊதரம் பண்ணுகையன்றிக்கே, (மெஹுஸூாமெஸ:) வக்ஷிகளுக்கு ஷேஹாதவிஹாமஜாநமில்லாமையாலே, தானான ஊாவஸங்களாலே. ஸஶஸம் ஸாஸ்வத்திலும்லவதிக்கும்; ஸூத்திலும் வதிக்கும். வ்யக்ஷ்ராதவிவேகம்பண்ணியிருக்கிறநாமிதேற ஸநேஹிக்கிறோம். (நிஃஷிரதஸு) தன்னையழியமாறி விருந்திட்டது. ககசு.

தாத்பர்யம்.—பக்ஷிகளைக்கொன்று ஜீவிக்கிற ஸஹஜசத்ருவான ஒரு வேடன் ஒருகால் மழையிலகப்பட்டுக் குளிரினால் கைகால் வெறித்து ஆஹாரத்தைத் தேடவுமசக்தனாய், இருளினால் வழிதப்பி யோர் மரத்தடியில் வந்துசேர, அம்மரத்திலிருந்த புறா, தான் வஸிக்குமிடத்தில் வந்து பாதைபடுகிற தன்சத்ருவான வேடனைக் கண்டு இவன் பாதையைப் போக்க நினைத்துத் தன் மூக்கினாலுலர்ந்த கொம்புகளைப் பொறுக்கிச் சேர்த்து நெருப்பை மூட்டி அவனுக்கு சீதத்தைப் போக்கிப் பின்பு தானுமத்தீயில் விழுந்து தன்மாம்ஸங்களினால் அவனை த்ருப்தி பண்ணி வைத்தது. இந்த இதிஹாஸத்தை யோராண்வழியாய் நீரும் கேட்டிருப்பீர் ஜ்ஞாநசூந்யமான பக்ஷி, தனக்கு வைரியாயினும் சரணமடைந்த வேடனைத் தன் ப்ராணன்களைக் கூடவிட்டு ரக்ஷித்திருக்க, வைரியின் தம்பி சரணமென்று வந்தால் இக்ஷ்வாகு குலத்திற்பிறந்து எந்த விரோதம் வரினும் போக்க ஸமர்த்தனாயிருக்கிற நான் எப்படி விட்டுவிடலாம்; நன்றாய் யோசியும். பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

யுத்தகாண்டம், கஅ - ம் ஸர்க்கம், உரு - ம் ஶ்லோகம்.

---

ஊ.—ஸ ஹி தம் வ்யாதிஜஹ்ராஹ ஹாய்யாஹராய ஊமதழ |
கபோதோ வாநரஶ்ரேஷ்ட கிம் வுநஸ்மத்விதோ ஜந: || கசரு.

அர்த்தம். வாநரஶ்ரேஷ்ட - வாநரோத்தமனே! ஸ: - அந்த, கபோத: - புறா, ஹாய்யாஹதாராழ - பெண்டாட்டியைப்பிடித்தவனாய், ஆமதழ - வந்திருக்கிற, தழ - அந்த வேடனை, வ்யாதிஜஹ்ராஹ-அங்கீகரித்தது. ஊவிய:-என்போல்பவரான, ஜந:-ஜநங்கள், கிம்வுந: - என்னசெய்யவேணும்.

வ்யா. (ஸ:) ஹாய்யாவிரஹத்தாலே தளர்ந்துள்ள. (தழ) ஜாதிவ்யக்தமான ஶாத்ரவத்தையுடையவனாயுள்ளவனை. (ஹாய்யாஹதாராழ) தமக்கு ஆவத்துக்கு உதவக்கடவளாய் ஸஹயஊவாஸினியாய்த்தன்னைப்பிரிய மாட்டாத ஹாய்யையை உடலையும் உயிரையும் பிரித்தாற்போலே பிரித்தவனை. (ஆமதம்ஹி) தானிருந்த

இடத்திலே வந்ததுவே ஹேதுவாக. (கபோத: ப்ரதிஜக்ராஹ) லக்ஷணத்திலே அயோக்யமான ஜந்மத்திலேபிறந்த கபோதமானது, த்யாகஹேதுக்களநேகமுண்டாயிருக்க ஸ்வரக்ஷணத்தையும் பண்ணக்கடவதாக அபிஸம்ஹித்தது. இந்த ஶிஷ்டாசாரத்தால், ராவணன்தானேவரிலும் நமக்கு அபிஸம்ஹிக்க வேண்டிக்காணுமிருப்பது. (வாநரஶ்ரேஷ்ட) ஸ்ராவ்ய வாநரஸம்வாதத்தாலும், நான் உங்கள் ஶரணாகதஸம்ரக்ஷணத்தில் தப்பினாலும் உமக்குத்திருத்த வேண்டிக்காணுமிருக்கிறது. (கிம்புநர்மத்விதோஜந:) கிமுக்கினுடைய அநுஷ்டாநமிதுவானால், ரகுவம்ஶத்திலேபிறந்த நமக்கு எத்தனை செய்யவேணும். "தோஷோயத்யபி தஸ்ய ஸ்யாத்" என்று - நான் சொன்ன ஏற்றமும்: கிமுக்குக்கொண்டு போயிற்றித்தனையிறே. அது செய்தாலும் அது செய்ததைச் செய்தோமித்தனையிறே, இவ்வளவிலே அருளாளப்பெருமாளெம்பெருமானார், அதிசத்திற்சொன்னவாறே தத்தையை ஸ்மரிப்பது. ௧௧௫.

தாத்பர்யம்.—உடலில் நின்று உயிரைப் பிரித்தாற் போல் அந்தப் புறாவின் பேடையை வலையினால் பிடித்துக் கொண்டவன் தானிருந்த விடத்துக்கு வந்த மாத்ரத்தினால் ரக்ஷித்திருக்க, நானென் செய்ய வேணுமோ சொல்லும். வேடனைக் காட்டிலும் விபீஷணனுக்குண்டான தோஷம் கொஞ்சம்; குணங்கள் மிகவுமதிகம். புறாவைக் காட்டிலும் எனக்கு ஜ்ஞானமும் சக்தியும் அதிகம்; செய்ய வேண்டும் கார்யம் அத்யல்பம். புறாவைப் போல் நான் ப்ராணனை விடவேண்டுவதில்லை. நான் ரக்ஷியாவிடிலும் ஹிதமறிந்த வாநரர்களில் தலைவரான உமக்கு இப்படி சொல்வது தகுமா.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்

---

யுத்தகாண்டம், ௧௮-ம் ஸர்க்கம், ௨௬-ம், ஶ்லோகம்.

---

அவதாரிகை. ஆக, கபோதத்தினுடைய அநுஷ்டாநத்தாலும், ஶரணாகதஸம்ரக்ஷணம் கர்தவ்யம்; அதுக்குமேலே ஶ்ருதமான கண்வவாக்யத்தாலும் ஶரணாகத ஸம்ரக்ஷணம் பண்ணக்கடவேன், அத்தைக்கேளுமென்கிறார்.

௨௭.— ருஷே: கண்வஸ்ய புத்ரேண கண்டுனா பரமர்ஷிணா ।
ஶ்ருணு காதாம் புரா கீதாம் தர்மிஷ்டாம் ஸத்யவாதினா ॥

அர்த்தம். கண்வஸ்ய - கண்வரென்கிற, ருஷே:-ருஷியினுடைய, புத்ரேண - பிள்ளையாகிய, ஸத்யவாதினா-யதார்த்தத்தைச்சொல்லாநின்ற, கண்டுனா - கண்டு என்கிற, பரமர்ஷிணா - மஹாமுநிவரால், புரா - முன்னே, கீதாம் - சொல்லப்பட்ட, தர்மிஷ்டாம்-தர்மத்தில் நின்றும் தவறாமலிருக்கிற, காதாம் - ஶ்லோகத்தை, ஶ்ருணு - கேளும்.

வு்ா. ஜ்ஞாநஹீநமான திர்யக்கையும் ஜ்ஞாநஸ்ரேஷ்டரான ஜஷி யையும் ஶரணாமததரக்ஷணத்துக்கு த்ருஷ்டாந்தமாகச் சொல்லுகை யாலே, ஶரணாமததரக்ஷணம் வெதநவ்ரதம்; ஜ்ஞாநஸங்கோ சவிகாஸஹேதுவான ஜந்மத்தில் தாழ்வேற்றங்கள் அப்ரயோஜகங் கள் என்றதாயிற்று. (ஜஷேஃகணவஹு) ஸகலவேதாந்த தாத்பர்ய மான தத்வஹிதங்களை ஸாக்ஷாத்கரித்த கண்வமஹாமுனியுடைய. (வ்யாத்ரூணகணா) "ஸஹேஷாவாக்யாரஸ: வாராஶரஃ" என்று - பராஶரபுத்ரரென்று வ்யாஸருக்காஜ்ஞி சொன்னாற் போலே, கண்வபுத்ரரென்று கண்வவசநத்துக்காஜ்ஞி சொல்லுகி றார். (பரமேஷ்டிநா) கண்வருக்குத் தபோபலத்தால் வந்த ஸாக்ஷாத்காரம், இவனுக்கு அவன்வயிற்றிற்பிறந்தாற்போலே ஸஹ ஸாக்ஷாத்காரமும் பிறந்த ஏற்றஞ்சொல்லுகிறது. (ஶ்ருணு) முன் பேகேட்டுப்போராநிற்க "ஶ்ருணு" என்று - சொல்லுவானென் னென்னில்; தம்முடைய மிடுக்கைக் காட்டின விடத்திற்பிறந்த தெளிவையொழிய விபீஷண விஷயீகாரத்துக்காக இவர் சொல்லு கிற வசநங்கள் நெஞ்சிற் படாமையாலே, ஆனைக்குப்பாடுவாரை ப்போலேயிருக்க, "கேளீர்" என்கிறார். (புராகீதாம்) இப்போது உம்முடைய நெஞ்சில் தெளிவுக்காகச் சொல்லப்பட்டதல்ல; விப க்ஷணர்க்கு அநுஷ்டிக்கப்படுமதொன்றென்று முன்பேசொல்லப்பட்ட தொன்று. "உக்தாம்" என்னாதே "கீதாம்" என்றது - ஹமவதுக்தி போலே அதிமௌரவத்தாலே சொல்லுகிறார். (யமிஷ்டாம்) யஜ்ஞங்களில் * வெளிறுகழிந்த யஜ்ஞம் ஶரணாமதரக்ஷணமென்று சொல்லுகையாலே "யஜ்ஞமிஷ்டாம்" என்கிறது. (ஸதுவாதிநா) விப்ர லம்பகவாதமன்று, யதார்த்தவாதியாலே சொல்லப்பட்ட தென்கை. ஹிதஹிதவாதிநா என்றுமாம்.          கககூ.

தாத்பர்யம்—இவ்விஷயத்தில் ஜ்ஞாநமில்லாத பக்ஷியின் நடத் தையேயல்லாமல் ஸம்பூர்ண ஜ்ஞாநத்தையுடைய கண்வபுத்ரரான கண்டு மஹாமுநிவரால் சொல்லப்பட்ட காதையுமுண்டு; அதையும் கேளும்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

*வெளிறு - அஸாரம்,

யுத்தகாண்டம், கஅ - ம் ஸர்க்கம், உஎ - ம் ஶ்லோகம்.

---

ஸர்வதாபிசெ. ஶரணம் புகுகிறவன் ஶத்ருவே யாகிலும், அவனுக்கு தைன்யமான ஶரணாகதியில்லையே யாகிலும், ஹிம்ஸிக்கலாகாதென்கிறது பத்தாஞ்ஜலி இதி ஶ்லோகத்தாலே.

மூ.— பத்தாஞ்ஜலிபுடம் தீநம் யாசந்தம் ஶரணாகதம் |

ந ஹந்யாதாந்ருஶம்ஸ்யார்த்தமபி ஶத்ரும் பரந்தப ||கஎ.

அர்த்தம். பரந்தப - சத்ருக்களைத்தபிக்கப்பண்ணுகிறவனே! பத்தாஞ்ஜலிபுடம் -சேர்க்கப்பட்ட அஞ்சலியையுடையவனுயாவது, தீநம்-தயவுசெய்ய யோக்யனுயாவது, யாசந்தம்-ப்ரார்த்திக்கிறவனுயாவதுஇருக்கிற,ஶரணாகதம்-க்ருஹத்துக்குவந்திருக்கிற,ஶத்ருமபி-வைரியையும், ஆந்ருஶம்ஸ்யார்த்தம் - க்ரூரவ்யாபாரத்தை யுடைத்தாகாமைக்காக, நஹந்யாத் - கொல்லக்கூடாது.

வ்யா. (பத்தாஞ்ஜலிபுடம்தீநம் யாசந்தம்) காயிகமான அஞ்ஜலியாதல், மானஸமான தைந்யமாதல்,வாசிகமான யாச்ஞையாதல், ஒன்றே அமையுமென்கை. (ஶரணாகதம்) க்ருஹாகதம். அத்வா, பத்தாஞ்ஜலி ப்ரப்ருதிகள் மௌனம் ; "ஶரணாகதம்" என்று ஸ்வரூபஸாக்ஷாத்கார ஜ்ஞாந விஶேஷத்தைச்சொல்லுகிற தென்னவுமாம். (ஶத்ருமபி நஹந்யாத்) கீழ்ச்சொன்னபடியே மௌனமாக ஶரணம்புகவுமாம், தைந்யமாக ஶரணம்புகவுமாம்; ஶரணம்புகுந்தவனை ரக்ஷிக்குமித்தனை யொழிய, அவன்பக்கலிலே ஶத்ருத்வமுண்டிறே யென்று ஹிம்ஸிக்கக்கடவதன்று. (ஆந்ருஶம்ஸ்யார்த்தம்) ஹிம்ஸியாதொழிகிறது ரக்ஷகத்வப்ரஸித்திக்கோ, பாவம் போகைக்கோ, புண்யஸித்திக்கோவென்னில்; இத்தனைக்குமன்று; நாட்டார் க்ரூரகாரனென்று கூசாமைக்காக. (பரந்தப) கேவலம் ஶத்ருவானாலன்றோநீர் ஹிம்ஸிக்கக்கடவது; அவன் ஶரணாகதனானாலும் ஹிம்ஸிக்கக்கடவீரோ? கஎ.

தாத்பர்யம்—சத்ருவாகிலும் தன்னிருப்பிடத்துக்கு வந்து காயிகப்ரபத்தியான அஞ்சலியையாவது, மானஸிகப்ரபத்தியான ஆதரத்தையாவது, வாசிகப்ரபத்தியான ப்ரார்த்தனையையாவது செய்தால் அவனை யெவ்வளவும் கொல்லக்கூடாது. எவனுவது சாஸ்த்ரமறியாமல் கொன்ருல் அவனைக்கண்டு ஜனங்கள் இவன் நிர்த்தயனென்று பயப்படுவார்கள்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.



யுத்தகாண்டம், கஅ-ம் ஸர்க்கம், உஅ-ம் ச்லோகம்.

அவதாரிகை. ஏதேனும் ஒருவழியிலே யாகிலும் ஶத்ரு வந்து ஶரணம் புகுந்தால் ஹிம்ஸியாதே விடுமதுபோராது ; ஆர்த்த வானால் தன் ப்ராணனை §நேர்ந்தாகிலும் ரக்ஷிக்கப்படுமென்கிறது ஆர்தோவா என்கிற ச்லோகத்தாலே.

கஅ.— ஆர்தோவா யதிவா த்ருப்த: பரேஷாம் ஶரணாகத: ।
அரி: ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா ॥ ககஅ.

அர்த்தம். பரேஷாம்-சத்ருக்களுக்குள், ஶரணாகத:-சரணமடைந்த, அரி: - சத்ருவானவன், ஆர்த்தோவா - பயந்தவனுகிலும், த்ருப்தோவா - பயமில்லாதவனுகிலும், க்ருதாத்மநா - சீர்திருத்தப்பட்ட ஸ்வரூபத்தையுடையவனுல், ப்ராணாந் - ப்ராணன்களை, பரித்யஜ்ய - விட்டு, ரக்ஷிதவ்ய: - காப்பாற்றத்தகுந்தவன்.

வ்யா. (ஆர்த்த: யதிவாத்ருப்த:) பீதனுய்வந்து ஶரணம்புகவுமாம்; அபீதனுக ஶாவித்துவந்து ஶரணம்புகவுமா மென்கிருர். (த்ருப்த:) ப்ரபந்நனும் ரக்ஷிக்கப்படுமென்கிற விதத்தால், தாம் "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம்" என்ற வதுக்கு ப்ராப்தவசநமு முண்டென்கிருர். (பரேஷாம் ஶரணாகத: அரி: ரக்ஷிதவ்ய:) ஶத்ருக்களில்லைத்துக்கொண்டு ஶரணாகதஶத்ருவானவன் ரக்ஷிக்கப்படும். "பரேஷாம்" என்கிற விடத்திலே ஶாத்ரவந்தோற்றியிருக்கப்பின்பு மரிஶவை வ்யோமம் பண்ணினது - அவனுடைய ஶாத்ரவாநுவ்ருத்தி த்யோதநார்த்தமாக. ஶரணாகதனுனல் ஶாத்ரவமுண்டோவென்னில் ; ப்ரக்ருதிவஶ்யராகையாலே மரணாந்தமாணமாக ஶாத்ரவ அநுவர்த்திக்கவுங்கூடும். அங்ஙனன்றிக்கே, "கொன்றேன் ; அன்றேவந்தடைந்தேன்" என்கிறபடியே ஸித்தஸாதனுய்க்கொண்டு ஶரணம்புகுருகையாலே அக்காலத்திலும் ஶத்ருபாவஸி பண்ணலாம்படி யிருக்கையாலே சொல்லிற்றுகவுமாம். (ப்ராணாந்பரித்யஜ்ய) ப்ராணாநபிபரித்யஜ்ய என்னுதொழிந்தது-ஶரணாகத ரக்ஷணத்துக்கு ப்ராணனை பரித்யஜிக்கை ஓரேற்றமன்றென்றுதோற்றுகைக்காக. (க்ருதாத்மநாரக்ஷிதவ்ய:) க்ருதஸ்வரூபனுல் ரக்ஷிக்கப்படும் ; ஆர்த்த

§நேர்ந்தாகிலும் - கஷ்டப்பட்டாகிலும்.

வாலே ரக்ஷிக்கப்படுமென்கை. அங்ஙனன்றிக்கே ஸாமர்த்யாபா வத்தாலே ஸாக்ஷிகமான உபேக்ஷையுடையவனாலே ரக்ஷிக்கப் படுமென்றுமாம். ககஅ.

தாத்பர்யம்—பயப்பட்டாவது, பயப்படாமலாவது, சத்ருக்களு க்குள் எவனொருவன் சரணமென்று வருகிறானோ; அவனை குருகுல வாஸம்பண்ணி சாஸ்த்ரமர்யாதை யறிந்திருக்கிறவன் தன்ப்ராணன் களை விட்டுக் காப்பாற்ற வேணும்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

யுத்தகாண்டம், ௧௮-ம் ஸர்க்கம், ௨௯-ம் ஶ்லோகம்.

அவதாரிகை. ப்ராணவ்யயத்தாலே ஶரணாகதனை ரக்ஷியாவிடில் வரும் தோஷத்தைச்சொல்லுகிறது.

ஶ்லோ.— ஸ சேத் பயாத்வா மோஹாத்வா காமாத்வாபி ந ரக்ஷதி |
ஸ்வயா ஶக்த்யா யதா தத்வம் தத்பாபம் லோககர்ஹிதம் || ககக.

அர்த்தம். ஸ: - அவன், பயாத்வா - ப்ராணபீதியினாலாவது, காமாத்வா - தநத்திலாசையினாலாவது, மோஹாத்வா - அஜ்ஞாநத்தி னாலாவது, யதாதத்வம் - மெய்யாக, ஸ்வயா - தன்னதான, ஶக்த்யா - பலத்தினால், நரக்ஷதிசேத் - காப்பாற்றாமல்போனால், தத் - அவனுடையபாபம், லோககர்ஹிதம் - ஜநங்களால் நிந்திக்கப்பட்ட தாயிருக்கும்.

வ்யா. (பயாத்வா) ப்ராணபயாத்வா. (காமாத்வா) இவனுக்கு வாயகனானவன்பக்கலிலே கைக்கூலி கொள்ளுதல், அவன்பக்கல் பக்ஷபாதத்தாலே யாதல். (மோஹாத்வா) இது கர்த்தவ்யம், இது அகர்த்தவ்யம், என்றறியாமையாலே யாதல். (ஸ: யதா தத்வம் ஸ்வயா ஶக்த்யா நரக்ஷதிசேத்) அவன் மெய்யாகத் தன்ஶக்தி யுள்ளவளவும் ரக்ஷியாதாகில்; தன்னெஞ்சறிய வ்யாஜ ரணமாக ரக்ஷியாதாகி லென்கை. (தத்பாபம் லோககர்ஹிதம்) ஶரணாகதனை ரக்ஷியா தொழிந்த பாபம், "லோககர்ஹிதம்" என்கிறவளவன்றிக்கே இருந்ததே குடியாக கர்ஹிக்கு மென்கிறது. ககக.

தாத்பர்யம்.—தன்ப்ராணன் போமென்னும் பயத்தினாலாவது, எதிரியினிடத்தில் பக்ஷபாதத்தினாலாவது, யுக்தாயுக்த மறியாமலா வது, சரணாகதிபண்ணினவனைக் கபடத்தைவிட்டுத் தன் சக்தியுள்ள வளவும் காப்பாற்றாமல் போனால், அவனை மஹாபாபியென்று லோ கமெல்லாம்நிந்திக்கும்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், ௧௮-ம் ஸர்க்கம், ௩௦-ம் ச்லோகம்.

---

௨௭.— விநஷ்ட: பச்யதஸ் தஸ்ய ரக்ஷிண: சரணாகத: ।
ஆதாய ஸுக்ருதம் தஸ்ய ஸர்வம் கச்சேதரக்ஷித: ॥ ௧௨௦.

அர்த்தம். ரக்ஷிண: - ரக்ஷகனென, தஸ்ய - அவன், பச்யத: - (ஸத:) பார்த்துக்கொண்டிருக்கையில், அரக்ஷித: - ரக்ஷிக்கப்படாதவனாய், விநஷ்ட: - நசித்துப்போன, சரணாகத: - சரணமடைந்தவன், தஸ்ய-அந்தரக்ஷகனுடைய, ஸர்வம்-ஸமஸ்தமான, ஸுக்ருதம் - புண்யத்தை, ஆதாய - வாங்கிக்கொண்டு, கச்சேத்-போவன்.

வ்யா. (ரக்ஷிணஸ்தஸ்ய பச்யத: அரக்ஷித: விநஷ்ட: சரணாகத: தஸ்ய ஸுக்ருதம் ஸர்வமாதாய கச்சேத்) என்றந்வயம். ரக்ஷகனானவன் காணநிற்க அவனாலரக்ஷிக்கையாலேமுடிந்த சரணாகதனானவன், அற்றைக்குமுன்பு ஸமார்ஜித ஸுக்ருதத்தையடைய வாங்கிக்கொண்டு இவனுடைய ஸுக்ருத பலமான லோகத்தேறப் போம். ௨௧௦.

தாத்பர்யம்.—சரணாகதன், தன்னை ரக்ஷிக்க ஸமர்த்தனானவன் முன்பே ரக்ஷிக்கப்படாதவனாய் நசித்தால், அந்த ரக்ஷகனுடைய புண்யத்தை வாங்கிக்கொண்டு அத்தாலடையத்தக்க புண்யலோகங்களையடைவன்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், ௧௮-ம் ஸர்க்கம், ௩௧-ம் ச்லோகம்.

---

அவதாரிகை. த்ருஷ்டாத்ருஷ்டங்களிரண்டிலும் வருமநர்த்தஞ் சொல்லுகிறது அஸ்வர்க்யம் என்கிற ச்லோகத்தாலே.

௨௮.— அஸ்வர்க்யம் சாயசஸ்யம் ச பலவீர்யவிநாசநம் ।

அர்த்தம். அஸ்வர்க்யம் - ஸ்வர்க்கப்ராப்திக்கு ஹேதுவாகாததாயும், அயசஸ்யம் - அகீர்த்திகரமாயும், பலவீர்யவிநாசநம் - புஜபலத்தையும் அநாயாஸமாய் நிர்வஹிக்கும் சக்தியையும் போக்கடிக்கிறதாயும் ஆகும்.

வ்யா. (ஸ்வயமேவ) "க்ருதாத்யயஸ்ய க்ருதம் தஸ்ய மஹத்" என்று- அவன் கொண்டுபோக வேண்டாதே தானே நிஷ்ஃபலமாம். (ஸ்வயம் வஸம்வ) முன்புபலரையும் ரக்ஷித்து ஸம்பாதித்தயசஸ்ஸு நசிக்கும். (பலவீர்யவிநாசநம்) பலமாகிறது தோள்வலி; வீர்யமாகிறது ரக்ஷணயத்நத்தில் அநாயாஸமுடைமை. அவையிரண்டு முண்டாயிருக்க சரணாகதனை ரக்ஷியாமையாலே, இவைதானே நசிக்கும்.

தாத்பர்யம்.—இப்படி சரணாகதனை ரக்ஷிக்க சக்தியிருக்க ரக்ஷியா மல் போனால், அவன் செய்த புண்யமும் அவனுக்கு ஸ்வர்க்கத்தைக் கொடாது; அவனுக்கு அபயசஸ்ஸு முண்டாகும்; சரீரபலமநோ பலங்களும் போய்விடும்.

☞ ஸர்வஞ்சைதத் மஹாந்தம் ப்ரபந்நாநாம் ரக்ஷணே என்ற ஸந்தர்ப்பமும் ஸ்பஷ்டமாகையால் வ்யாக்யாநம்செய்யவில்லை.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

யுத்தகாண்டம், ௧௮ - ம் ஸர்க்கம், ௩௨ - ம், ச்லோகம்.

---

அவதாரிகை. த்ருஷ்டாத்ருஷ்டங்களிரண்டிலும் நன்மையைத் தருவதாயிருந்துள்ள கண்வினுடைய வசநத்தை யநுஷ்டிப்பே னென்கிறார்.

௩௦.— கரிஷ்யாமி யதார்த்தம் து கண்வோ யத் வசநம் உத்தமம் |
யசஸ்யம் ச யசஸ்ஸ்யம் ஸ்வர்க்யம் ஸ்யாத் தத்து ஹிதோதயே||௧௨௨.

அர்த்தம். கண்வ: - கண்டுமஹாமுனியினுடைய, உத்தமம் - ஸ்ரேஷ்டமாயும், யதார்த்தம் - மெய்பாயுமிருக்கிற, வசநம் - சொல்லை, கரிஷ்யாமி - அநுஷ்டிக்கப்போகிறேன். (அந்தவசனம்) யசஸ்யம் - தர்மத்தினின்றும் தவறாமலும், யசஸ்யம் - கீர்த்திகரமாயும், ஹிதோதயே - பலமுண்டாகுங் காலத்தில், ஸ்வர்க்யம் - ஸ்வர்க்கப்ரதமா யும், ஸ்யாத் - ஆகும்.

வ்யா. (கரிஷ்யாமியதார்த்தம்) உத்தமான வசநங்களில் ப்ரசம்ஸாதிகளின்றிக்கே மெய்யாயேயிருக்கை. (கண்வவசநம் உத்தமம்) வசநத்துக்கு உத்தமமாவது - சரணம் புகுகிறவன்

ஶத்ரு-வென்றாலும், ரக்ஷிக்குமிடத்துத் தன்னை யழியமாறியிருந்த தேயாகிலும், அவனை ரக்ஷிக்கவேணுமென்னும் பாசுரத்தை யுடைத் தாயிருக்கை. (யஶிஷ்டூவ) அவனுடைய வசநாநுஷ்டாநம் யஶூா நுநவேதமாயிருக்கும். அதாகிறது-ஆநூஶம்ஸ்யமாகிற வாஜயஶூத் தைப்பற்றியிருக்கை. (யஶஸ்யம்வ) காட்டாரிருந்ததே குடியாகக் கொண்டாடும்படியான ஏற்றத்தை யுடைத்தாயிருக்கும். (ஸ்வர்க்யம் ஸ்வாத்ரு மஹோதயே) மஹோதயத்தில் ஸ்வர்க்கத்தைத் தரக்கடவதா யிருக்கும். ஸ்வர்க்கமென்கிறது, நிரதிஶயஸுகத்தை. "நிரதிஶய ஆஹ்லாத ஸுகபாவ:".

தாத்பர்யம்.—கண்டு மஹாமுநி யதார்த்தமாய்ச் சொன்ன உத்தமமான வசநத்தை நான் செய்யப் போகிறேன். அதைச் செய்தால், இந்த லோகத்தில் பாபங்கள் போய் கீர்த்தியுண்டாகும்; பரலோகத்தில் உத்தமமான ஸுகமுமுண்டாகும்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

யுத்தகாண்டம், கஅ - ம் ஸர்க்கம், ௩௩ - ம் ஶ்லோகம்.

---

அவதாரிகை. இப்படிசொன்ன விடத்திலும் மஹாராஜர் நேராகத்தெளியாதே ஶங்கிதஹ்ருதயரா யிருக்கிறபடியைக்கண்டருளி, ப்ரக்ருத்யநுகுணமாக ப்ரபந்நபரித்ராண ப்ரதிஜ்ஞையைப்பண்ணியருளுகிறார் ஸகூருதேவ என்கிற ஶ்லோகத்தால்.

மூ.— ஸகூருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே ।
அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம ॥ கஉ௩.

அர்த்தம். ஸகூருதேவ - ஒருதரமே, ப்ரபந்நாய - ப்ரபத்தி பண்ணினவன் பொருட்டும், தவ - உனக்கு, அஸ்மி - (அடியேனாய்) ஆகிறேன்; இதி - என்று, யாசதேச - ப்ரார்த்திக்கிறவன் பொருட்டும், ஸர்வபூதேப்ய: - ஸமஸ்த்த ப்ராணிகளிடத்தில் நின்றும், அபயம் - பயநிவ்ருத்தியை, ததாமி - (பண்ணிக்)கொடுக்கிறேன். ஏதத் - இது, மம - எனக்கு, வ்ரதம் - விடக்கூடாத ஸங்கல்பம்.

அவதாரிகை. "மித்ரபாவேந" என்கிற ஶ்லோகத்தில் ப்ரக்ருதியருளிச்செய்தார். இதில் ததநுகுணமாக ப்ரதிஜ்ஞையைப் பண்ணுகிறார்

வ்யா. (ஸக்ருதேவ ப்ரபந்நாய) ஸக்ருச்சப்தத்துக்கு ஸஹஸா ஶப்தமாய், ''ஸஹஸைவ ப்ரபந்நாய'' என்கிறபடி. அதாகிறது, தன் யோக்யதையைப்பார்த்துத்தேங்காதே, நம் குணத்தை விஶ்வஸித்து ப்ரபந்நனாகை. இது ஆழ்வான் நிர்வாஹம். அநாதிகாலமும் ஸம்ஸரித்துப்போந்தவன் மேல் அநந்தரம் ஹடாத்ப்ரஸவம் பண்ணப்புகுகிறவனாகையாலே, யாவதாயுஷம் அநுவர்த்தித்தாலும், ''ஸக்ருத்'' என்கைக்குப்போருமத்தனையன்றோவென்று எம்பார் நிர்வாஹம். ஶரண்யவிஷயீகாரத்துக்கு ஒருகாலமையும்; ஆவர்த்திக்கிறது உபாய வைபவத்தால்வந்த ஶக்யதையாலே யென்று பட்டர் நிர்வாஹம். ''ஸக்ருதேவ'' என்கையாலே, உபாயத்துக்கு விஹிதமான அஸக்ருதாவ்ருத்தியை வ்யாவர்த்திக்கிறது. (தவாஸ்மி இதி ச யாசதே) இதுக்கு மேல் உனக்கு அடியேனாகவேணுமென்று உபாயத்தையும் ப்ரார்த்திக்குமவனுக்கு. ''ஸக்ருதேவ ப்ரபந்நாய'' என்கிறது ப்ரபத்தி; ''தவாஸ்மீதி ச யாசதே'' என்கிற பதத்வயேந நிர்தேஶத்தால், அநவரத பாவநாரூபமான பக்தியைச் சொல்லுகிறதென்று நிர்வஹிப்பாருமுண்டு. (அபயம் ஸர்வபூதேப்ய: ததாமி) ஸர்வபூதங்கள் நிமித்தமாக பயநிவ்ருத்தியைப் பண்ணிக்கொடுப்பன். ''பீத்ரார்தாநாம் பயஹேது:'' இதி ஹேதௌ பஞ்சமீ. மஹாராஜர் எதிரிடிலுங்காட்டிக்கொடோம்; இவன்தான் அகலுமளவிலும் அவன்கையிலுங் காட்டிக்கொடோமென்றபடி. (மம வ்ரதம்) நமக்கு அநுஷ்டேயமான ஸங்கல்பமிது. அமோக ஸங்கல்பரான நமக்கு ஸங்கல்பங்களடையக் குலையிலுங்குலையாத ஸங்கல்பமாகுமிது. ௧௨௩.

தாத்பர்யம்.—தன் தோஷத்தைப் பாராமல் என்னுடைய குணத்தையே பார்த்து நம்பி ஒருக்காலாவது வாசிகமாகவோ காயிகமாகவோ மாநஸிகமாகவோ ப்ரபத்தி பண்ணினவனுக்கும் அவனோடு ஸம்பந்தித்தவைகளுக்கும் ஸமஸ்த பூதங்களால் வருமாபத்தைப் போக்கித் தருவதே எனக்கு முக்யமான ஸங்கல்பம். எதைத் தப்பினாலும் இதைத் தப்பமாட்டேன். இந்த ஶ்லோகம் ராமசரம ஶ்லோகம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ஶ்லோ॥ ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே ।
அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம ॥

அவதாரிகை. "ஸாகரம் ஸமதிக்ரம்ய ஸம்ப்ராப்தா நவஸீ நாம் உதா

ஹ்ருதா நாஜகரம் கஸ்மாத் ஸசுப்ரஜா ஸஹ வாநரை:" என்று - பெருமாளும் வாநரஸமூஹமாகக்
கடற்கரையிலே குறுகவந்து விட்டார்களென்று கேட்டராவணன்,
ஸ்வமந்த்ரிகளை ஸமாஹ்ருதமாக வநர்த்தைக்குறைவறக்கூட்டி,
"ஸுஹ்ருதாஞ்ச ஸர்வேஷாம் ஸ்வமதம் ப்ரதிபாத்யதாம்" என்று நியமித்து
காரியவிசாரம் பண்ணுகிறவதான செய்து நின்ற நிலைகளையும்
செய்யவேண்டுங் கார்யங்களையுஞ்சொல்ல, "தஸ்ய காமவஶம் தஸ்ய
நிஶம்ய பரிதேவிதம் । கும்பகர்ண: ப்ரசுக்ரோத வசநம் சேதம
ப்ரவீத்" என்று-இத்தைக்கேட்ட கும்பகர்ணனும் குபிதனாய்,
"யதா து ராமஸ்ய ஸலக்ஷ்மணஸ்ய ப்ரஸஹ்ய ஸீதா ச
ஹ்ருதா । ஸக்ருத் ஸமீக்ஷ்யைவ ஸுநிஶ்சிதம் ததா பஜேத
சித்தம் யமுநேவயாமுநம்" என்று-இவன் அவஹரித்தவன்றே
இப்படி விளையுமென்றறுதியிட்டோமேயென்று ஸபாஜிவஸம்வாத
த்தை ஸம்வதித்து, "ஸர்வ மேதந் மஹாராஜ க்ருதமப்ரதிமந்தவ ।
விதீயதே தவஸஹாஸாநி ராகாவேவா ஸ்யகர்ம:" என்று-செருக்கி
நான் செய்தவற்றுக்கொப்புண்டோவென்ற ராவணனை யபிக்ஷேபி
த்து, எங்கள் சொற்கேட்டுச் செய்யவிருந்தாயாகில் இந்த ஸீதாப
ஹாரத்துக்கு முன்பேயன்றோ செய்வதென்றும், "ய: பஶ்சாத் பூர்வ
கார்யாணி கர்மாண்யபிசிகீர்ஷதி । பூர்வஞ்சாபர கார்யாணி
நஸவேத நயாநயௌ" என்று-பூர்வாபரகார்யங்களை க்ரம
ஹீநமாகப் பண்ணுகிறவன் நயாநயங்களை யறியானென்றும்,
"திஷ்ட்யா த்வாம் நாவதீத்ராமோ விஷமிஶ்ரமிவாமிஷம்" என்று-நஞ்சூ
ட்டின பழம்போலே இனியராயிருக்கச் செய்தேயும் அறக்கொடிய
பெருமாளவருன்னைக் கொல்லாதொழிந்தது உன் பாக்யமென்றும்,
அதிற்கோபித்து இவன்வெறுக்க வொண்ணாதென்று, "ஸமீகரிஷ்யாமி" என்று-பள்ளத்துக்கு மேட்டை நிரவுமாப்போலே யுன்ன
நீதியை யென் தோள்வலியாலே யொக்கவிடுகிறேனென்று ஸமாதா
நம்பண்ண, உஹா பார்ஶ்வனுமவனுக்கு ப்ரியமாகச் சில வார்த்தை

(பா) ௧ ஸமிதௌ. (பா) ௨ கர்மாண்யபி சிகீர்ஷதி.

களைச் சொல்ல, "நிஶாசரேந்த்ரஸ்ய நிஶம்யவாக்யம் ஸகும்ப
கர்ணஸ்யச கர்ஜிதாநி | விபீஷணோ ராக்ஷஸ ராஜமுக்யம் உவாச
வாக்யம் ஹிதமர்த்தயுக்தம்" என்று - அவர்கள் நிரர்த்தகமாகப்
பிதற்றினவார்த்தைகளைக்கேட்டு விபீஷணப்பெருமாள், ஹிதரூபமாக, "வ்ருதோ ஹி பாஹ்வந்தர போகராஶி ஶ்சிந்தாவிஷஸ்ஸுஸ்மித
தீக்ஷ்ணதம்ஷ்ட்ர: | பஞ்சாங்குலீ பஞ்சஶிரோதிகாய ஸீதாஹிருக்ரோ வதகேந ராஜந்" என்று- * பாம்போடொரு கூரையிலே பயிலுவாரைப்போலே ஸீதையாகிற பெரும்பாம்பினருகேகையை நீட்டுவாருண்டோ; "யாவந்ந லங்காம் ஸமபித்ரவந்தி வலீமுகா: பர்வத
கூடமாத்ரா: | தம்ஷ்ட்ராயுதாஶ்சைவ நகாயுதாஶ்ச ப்ரதீயதாம்
தாஶரதாய மைதிலீ || யாவந்ந க்ருஹ்ணந்தி ஶிராம்ஸி பாணா
ராமேரிதா ராக்ஷஸ புங்கவாநாம் | வஜ்ரோபமா வாயுஸமாநவேகா: ப்ரதீயதாம் தாஶரதாய மைதிலீ" என்று தொடங்கி, குரங்குகள் கடலையடைத்துப்படைவீட்டை யடைக்கப்பார்க்கப்புகுகிறார்கள்; ராமஶரங்கள் குறுந்தெருவும் நெடுந்தெருவுமாகப்புகுந்து தலைகளைத்திருகப் புகுகிறது; அதுக்கு முன்னே பிராட்டியைப்பெருமாள் பக்கலிலேபோகவிடாயென்றாற்போலே சிலவார்த்தைகளைச்சொல்ல; ப்ரஹஸ்தேந்த்ரஜித்ப்ரப்ருதிகளும் அதுக்கு விபரீதமாகச்சிலவார்த்தைகளைச்சொல்ல, ஸ்ரீவிபீஷணப்பெருமாளும் குபிதராய், "ந தாத வாக்யேஷு தவ நிஶ்சயோஸ்தி பாலஸ்த்வமத்யாப்ய விபக்வபுத்தி: | தஸ்மாத்த்வயாப்யாத்ம விநாஶநாய வசோர்த்தஹீநம் பஹுவிப்ரலப்தம் ||
புத்ரப்ரவாதேந து ராவணஸ்ய த்வமிந்த்ரஜிந் மித்ரமுகோஸி
ஶத்ரு: | யஸ்யேத்ருஶம் ராகவதோ விநாஶம் நிஶம்ய மோஹாதநுமந்யஸே த்வம் || த்வமேவ வத்யஶ்ச ஸுதுர்மதிஶ்ச ஸ சாபிவத்யோ ய
இஹாநயத்த்வாம் | பாலம் த்ருடம் ஸாஹஸிகம்ச யோத்ய ப்ராவேஶயந்மந்த்ரக்ருதாம் ஸமீபம்" என்றுதொடங்கி, உனக்கிவற்றில் அந்வயமில்லை; பெற்றபிள்ளைநீதான்வந்து ஶத்ருவாயிருந்தாய், தகப்பனார்க்கு நாஶத்தைஇப்படிப்பேசுவாருண்டோ? ஶத்ருக்களைக்கொல்லில் முற்பட உன்னைக்கொல்லவேணும்; அறிவிலையாய்

§மகனுன வுன்னை அழைத்தவனையும் புகுரவிட்டவனையும் கொல்ல வேணுமென்று வாசெதடிசொல்லி, "யநாநிரஸ்தாநி விஷஞ்ஷணா நி வாஸாம்ஸிதிவ்ர்யாணி ஊர்ண்ம்ஸு விக்ராநு | ஸீதாம்வராராய நிவே ஷ்ருதேவீம் வமேஸ்ராஜந்திஹ வீதஶோகாஃ" என்று - உபஹார பர்ஸ்மாகப்பிராட்டியையுடையவன் வஶத்திலேவிட்டு உங்கள் முடியோடே நெஞ்சாறல் கெட்டிருக்கப் பாருங்கோளென்று ஸவர்க்கும் ஹிதஞ்சொல்ல, இத்தைக்கேட்ட ராவணன், "ஸந்நிவிஷ்டம் ஹிதம்வாக்ய ஊக்தவந்தம் விபீஷணம் | அப்ரவீத்பருஷம்வாக்யம் ராவணஃகாலசோதிதஃ" என்று-இப்படி ஹிதஞ்சொன்னல், "என்னை த்தீமனங்கெடுத்தா யுனக்கென் செய்கேன்" என்றும் - "அறியாதன வறிவித்தவத்தாநீசெய்தன" என்றும்-காலிலே விழவேர்றாகுமாயிருக்க த் தன்வஶமின்றியிலே காலவஶனுனபடியாலே பருஷங்களை ச்சொல்லி, "த்வாம்து திக்குலபாம்ஸநம்" என்று திக்கரிக்க, "உத்பபாதகதாபாணி ஶ்ரீமாந்ஸஹராக்ஷஸைஃ" என்று - மோக்ஷப்ரதாதாவுமாய் ஹிதோபதேஶம் பண்ணின வென்னை இப்படி சொன்னவிவன் என்படப்புகுகிறனென்றுதளர்ந்துதடியூன்றியெழுந் திருந்து தனக்கு ஸஹ்ருதாயிருப்பார் நாலுபேரோடே கிளம்பி, பின்னையும், "ஆத்மாநம் ஸர்வதாரக்ஷ புரீஞ்சேமாம் ஸராக்ஷஸாம் | ஸ்வஸ்திதேஸ்து கமிஷ்யாமி" என்று - நாலுவாசெதடிசொல்லி, "ஆஜகாமமுஹூர்த்தேந யத்ராராமஸ்ஸலக்ஷ்மணஃ" * நின்றவாநில்லா நெஞ்சு புரிவதற்கு முன்னே தம்பிசொல்லு ஜீவியாத ராவணகோஷ்டியில்நின்றும் தம்பிசொல்லு ஜீவிக்கிற ராமகோஷ்டியை நோக்கி வந்து, "நிவேதயதமாம் க்ஷிப்ரம் ராகவாய மஹாத்மநே" என்று- நெறிகெடமடுத்துக்கொண்டு புகலாகாது, அதி ஶங்கையும் பண்ணுவர்கள், ஆஶ்ரமேஷிகளைக்கொண்டு பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்து, "ஆநய" என்னப் புகவேணுமென்று நின்ற நிலையிலே நின்று விண்ணப்பஞ் செய்ய, இத்தைக்கேட்ட மஹாராஜர், "வதநீயோ பருக்ஷணைஃ ஸஹ ஸுக்ரீவோ ஜவாமிகர்ஃ" என்று - இவன் வார்த்தையைக்கேட்டுப்பெருமாள் முற்பாடராய்வருவதற்குமுன்னே தாம் கடுநடையிட்டுச் சென்று, ராஜகார்யங்கள் விசாரிக்க வேண்

(பா) § ஶரவணனை.

டாவோ; ஒற்றரைப்போக விடவேண்டாவோ, நம்மிலும் அவர்கள் முற்பட்டார்கள்; "ப்ரணிதீ ராக்ஷஸேந்த்ரஸ்ய ராவணஸ்ய பவேதயம்" இங்கே ஆகாஶத்திலே நிற்கிறவிவன் ஒற்றனாகவேணும்; ராவணன் தம்பியென்பவன், வலியவந்தவன்; இவனைக்கழுத்திலுங்காலிலும் கோக்கவடுக்குமென்பது; அது பெருமாள் செவிக்குப்பொறுத்தவாறே வந்தவர்களையு மவனையுங்கொல்ல ப்ராப்தமென்று சொல்ல, இத்தைக் கேட்டருளின பெருமாள் திருவுள்ளந்தளும்பி முதலிகளைப்பார்த்து, "யதுக்தம் கபிராஜேந ராவணாவரஜம் ப்ரதி | வாக்யம் ஹேதுமதர்த்யஞ்ச பவத்பிரபி தச்ச்ருதம்" என்று-தோழனார் ராஜாக்களாய்ச் செருக்கிச் சொன்ன வார்த்தையை ஶரணாகதரக்ஷணம் பண்ணின ஜாதியிலே பிறந்த நீங்களுங்கேட்டிகோளே; உங்கள் நினைவுகளைச் சொல்லுங்கோளென்ன, "ஸ்வம் ஸ்வம் மதமதந்த்ரிதா: | ஸோபசாரம் ததா ராமமூசுர்ஹிதசிகீர்ஷவ:" என்று - பெருமாளுக்காக மாட்டார்கள், மஹாராஜர்க் காகமாட்டார்கள், உபயாவிருத்தமாக பரீக்ஷித்து ஒழுக விசாரித்துக் கைக்கொள்ள ப்ராப்தமென்று சொல்லித் தலைக்கட்ட, இத்தைக்கேட்ட திருவடியுமெழுந்திருந்து, "ந வாதாந்நாபி ஸங்கர்ஷாந்நாதிக்யாந்ந ச காமத: | வக்ஷ்யாமி வசநம் ராஜந் யதார்த்தம் ராமகௌரவாத்" என்று-இப்பக்ஷங்களையழிக்கப்புகுகிறவனாகையாலே, சிலரோடே பிணக்குண்டாயல்ல, எல்லார்க்குமேலாய் நியாமகனாயல்ல, ப்ரதிபந்நவாதியாயல்ல, "கபிஸம்ஜீவிதம் ஜஹ்யாத்" என்கிற பெருமாளையிழக்கவருமென்று பெருமாள் பக்கலாதரத்தாலே சொல்லுகிறேனென்று அவையடக்குஞ்சொல்லி, புகுரவிட்டால் பரீக்ஷிப்பது, பரீக்ஷித்தால் புகுரவிடுவதென்று அந்யோந்யாஶ்ரயணம் வரும்; "தத்ரஶிதும் ப்ரதமேஷ்யத ஶிஷ்யாப்ரஷ்ட ஸ்வாமதம்" என்று-ஸாமோபதம்பண்ணிக் குலைத்தழைக்க ப்ராப்தமாயிருக்கத்தன்னிடையே விஶ்வஸித்து வந்தவனை யதிஶங்கை பண்ணினால் குலைந்துபோம்; அப்போது ராஜநீதியல்ல, ஶாஸ்த்ரவிருத்தமென்று பரபக்ஷதூஷணஞ்சொல்லி, "நத்வஸ்ய ப்ருவதோ ஜாது லக்ஷ்யதே துஷ்டபாவதா | ப்ரஸந்நம் வதநஞ்சாபி" என்றும் - "அஶங்கித மதிஸ்ஸ்வஸ்த: ந ஶட: பரிஸர்ப்பதி" என்று மிப்புடைகளிலே ஸ்வபக்ஷ ஸ்தாபநத்தையும் பண்ணி, திருமுன்னே

நாமுஞ்சில வறிந்தோமாக வொண்ணுதென்று, "யதாஶக்தி மயோ க்தம்ராக்ஷஸஸ்யாஜ்ஞஸம்ப்ரதி। ப்ராணம் மயஸ்ஸம்ஶய ப்ரூஹி பார்த்திவ" அடியேனுக்குத் தோன்றினவளவு விண்ணப்பஞ் செய்தேனத்தனை; "நல்லாரறிவீர் தீயாரறிவீர் இவ்வுலகத்தெல்லா மறிவீர்" என்று - தேவரீர்திருவுள்ளத்தி லகலத்துக்கு இதெங்கே; இனித்திருவுள்ளமானபடி செய்தருளீரென்று தலைக்கட்ட, "ஸுக்ரீவஸ்யாத மாஜ்ஞாய வாயுஸூநோஸ்து ஸர்வஸ: ஜக்ராஹ ஸுதீர்த்தாத்மா நாத்மநிஷ்டிதம்" என்று - காற்றின்மகனை திருவடியாலே ஸுஸ்ஸத்தான பெருமாள் தன்திருவுள்ளத்தில் கிடந்த தருளிச் செய்வதாகக் கோலி, "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம்" என்கிற ஶ்லோகத்தாலே, "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம்" ஸதோஷனே யாகிலும் கைவிடேனென்று சொல்லி, "தஸ்யாநுபந்தா: பாபா நஶ்யந்தி தத்க்ஷணாத்" என்று - ப்ரபந்நனைபோதே நிர்தோஷன்; இப்படி ப்ரபந்நனாய் நிர்தோஷனானவனுக்கு உம்மாலு மென்னாலும் பிறராலு மெல்லாராலும் வரும பயங்களைப்போக்கக் கடவேனென்கிறார். இந்தஶ்லோகத்தால்.

"வேதோபப்ரும்ஹணார்த்தாய தாவக்ராஹயத ப்ரபு:" என்று வேதோபப்ரும்ஹண ப்ரவண ப்ரபாவமன்றோவிது. இவ்விடத்தில் உபப்ரும்ஹிக்கிற வேதார்த்தமேது, வேதவாக்யந்தானெதென்னில்; "தம்ஹதேவமாத்மபுத்திப்ரகாஶம் முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்யே" "ப்ரபத்யேஶரணமஹம்ப்ரபத்யே" "ஸர்வஸம் பரித்யஜ்ய பயஶோகோ" என்றும் - சொல்லுகிற ப்ரபத்தி வாய வைபவம் இவ்விடத்திலுபப்ரும்ஹிக்கிறது. வாக்யமும், "ப்ரபத்யே ஶரண மஹம்ப்ரபத்யே" என்கிறவிது, "ஸர்வஸ்ய ஶரண மஹம் ப்ரபத்யே" என்றும் - "ஸர்வேஷாம் ஶரணம் நிவீஸ்" என்றும் - திருவடிகளைக் கையாலே பிடிக்கும்போது ப்ரஸாதமாகவேணும், அந்த ப்ரஸாதமாவது - "ஸர்வ பரித்யஜ்ய" என்றும் - *விதராஜாதாம் தொடங்கி, "ஸர்வ பராந்ஸ ஸஞ்ஜ்ய ஸர்வகாமாந்ஸ லோகாநு" என்றும் - "வீடுமின்முற்றவும்" என்றும் - "மற்றொரும்பற்றிலேன்" என்றும் - உபாயாந்தரங்களைவிட்டுப் பற்றுகை. அத்தையிறே "ப்ரபத்யே"

என்கிறது. "ஏகம் வ்ரஜ" "ஶரணம் ப்ரபத்யே" "ப்ரார்த்தநா மதிஶ்ஶரணாகதி:" என்று- உபாய ப்ரார்த்தநாரூப ஜ்ஞாநத்தை "ஶரணம் ப்ரபத்யே" என்று சொல்லுகிறது.

இவ்வாக்யத்தை இச்ஶ்லோகார்த்தம் உபப்ரும்ஹித்தபடி யென்னென்னில்; "ஸக்ருதேவ" என்கிற பதங்களாலே ஸுஸக்ருதாவ்ருத்தி ஶாஸ்த்ரே ஶிக்ஷயான ஸக்த்ய ப்ராப்திக்கையாலே, ஸப்ரயோஜ்யத்ராம பர்யஸ்கமான, "ப்ரயதபாணி:" என்கிற பதத்தையும், "ப்ரபந்நாய" என்கிற பதத்தாலே, "ஶரணம் ப்ரபத்யே" என்கிற பதங்களையும், "தவாஸ்மீதி யாசதே" என்கிற பதங்களாலே, "ஸஸுஹ்ருதஸ்ய" என்கிற பதங்களையும், "அபயம் ததாமி" என்கிற பதங்களாலே, "அபயஸ்தம்" என்கிற பதங்களையும் உபப்ரும்ஹிக்கிறது.

ஆகவிது, "ப்ரபத்யே" என்று ப்ரபதநதஶையில் ஏக வசநமாயிராநின்றது; ஸமாதஶையில், "ந:" என்று-பஹுவசநமாயிராநின்றது; இது செய்யும்படி யென்னென்னில்; "வைஷ்ணவோ ந: குலே ஜாத:" என்று-ஏகவசநமாகச் சொல்லி, "தே ஸர்வே முக்திமாயாந்தி" என்று-பஹுவசநமாகவும், "யே ச வைஷ்ணவஸம்ஶ்ரயா: । தேபி நவதே ப்ரயாஸ்யந்தி" என்று - ஏகவசநபஹுவசநங்களாலும், இப்படி ஸஹஸ்ர ப்ரமாணங்களுண்டாகையாலும், லோகத்திலும் ஒருவன் ராஜஸேவை க்ருஷ்யாதிகளைப் பண்ண, அவன் புத்ரஸமமான அந்ய நயாநப்ரவஸாதி ஸமஸ்தங்களை அவனபிமாநத்திலே ஸாம்ராஜ்ய த்ரவ்யாதிகள் வருத்தமற ஸம்ஜிக்கக்காண்கையாலும், இப்படி லோகவேதங்களிலே ஸம்ஸித்தமாகையாலே, ஒருவன் ப்ரபந்நனாக அவனபிமாநத்திலே யொதுங்கினார்க்கெல்லாம் ஸமமாகக்கடவதென்கிறது.

ஆகிறது, ப்ரபத்த்யுபாயமென்பது - எம்பெருமானுபாயமென்பதாகாநின்றது; ப்ரபத்தியாவது- "த்வமேவோபாய பூதோ மேபவேதி ப்ரார்த்தநாமதி: । ஶரணாகதி:" என்று - சேதநனுடைய ப்ரார்த்தநாரூபஜ்ஞாநமாயிராநின்றது; எம்பெருமானாகிறான் - ப்ரார்த்தநீயனாயிருப்பானொரு பரதேவதையாயிராநின்றது; இது செய்யும்படி யென்னென்னில்; பரார்த்ததிஷ்டஜ்ஞாநமாயி

ருக்க, "ஶ்ரீவராஹோ வராஹ: " என்று - வராஹவ்யாயா நத்தைப்பற்ற, ஔபசாரிகமாக வராஹத்தைச்சொன்னாற் போலவும் "நிஜஞானம் விதஜ்ஞானம் " என்றால்-ஜ்ஞானத்துக்கொரு நைர்ஜ்ய விதிகளற்றிருக்க விஷயமதமான நைர்ஜ்யவிதி களை விஷயியான ஜ்ஞானத்திலே உபசரித்து, "நிஜஜ்ஞானம் விதஜ்ஞானம்" என்றாற் போலேயும், ஸ்வீகார வ்யாபாரத்தைப் பற்றஸ்வீகாரவிஷயமான ஸமவத்தோபாய வ்யவஹாரத்தைவிஷயி யான ஸ்வீகாரரூப வ்யக்தி ஜ்ஞானத்திலே உபசரித்துச் சொல் லுகிறதாகையாலே ஒரு விரோதமுமில்லை.

ஆகிறது, "ஸ்வோநைவ ஸமவ்யக்: ஸமவிரோநைவ நாராயண:" என்றும் - "மாம் வ்ரஜ... மாமேவைஷ்யஸி" என் றும் - "இறைவாநீதாராய்பறை" என்றும் - "உன்தன்னோடுற்றோ மேயாவோமுனக்கே நாமாட்செய்வோம்" என்றும்- எம்பெருமானே உபாயமுமுபேயமுமென்றிறே சொல்லுகிறது; அந்த உபாயோ பேயங்களாகிறது-கார்யகாரணங்களிறே; "யத: ஸர்வம் யஸ்ய ப்ரஸூதே தத்கார்யகாரணம்" என்றும் - "நியதபூர்வபாவிகாரண ம்" என்றும் - பூர்வபாவியுமாய் பூர்வக்ஷணத்திலே ஸத்ரூ மாயிறே காரணமிருப்பது; "நியதபஶ்சாத்பாவித்வம் கார்யத்வம்" என்றும் - "ப்ராகஸத: யோகித்வம் கார்யத்வம்" என்றும் - பூர்வக்ஷணத்திலே ஸத்ரூமாயிராதே, அத்தாலே பிறக்கக்கடவது மாய் பஶ்சாத்பாவியுமாயிறே கார்யமிருப்பது; இப்படியிருக்க, "நி த்யம்விபும்" என்றும் - "ஸத்யம்ஜ்ஞானம்" என்றும்-"ஏகமேவா த்விதீயம்" என்றும்- நித்யமுமாய் ஏகமுமாயிருக்கிற ஸமவத்வஸ்து வுக்கு பரஸ்பரவிருத்தமான பூர்வாபரபாவத்ததவங்கூடும்படியென்; பூர்வோத்தர பாவிகவங்கூடும்படி யென்னென்னில்; "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம்" என்றும் - "அவி காராய ஶுத்தாய நித்யாய" என்றும் - அவிகாரமுமாய் நித்யமு மாய் ஏகமுமான ப்ரஹ்மத்துக்கு, "ப்ரஹ்மவநம் ப்ரஹ்மஸவ்ருக்ஷ ஆஸீத்" என்றும்-"ஸோகாமயத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி"

"ஸர்வஸ்ய ஜ்ஞஸ்ஸர்வஶக்திர் ஸர்வதா க்ருதிர்வாயுதேவ" என்றும் - த்ரவியகாரணத்வமும் ஸ்ருஷ்ட்யஸ்ருஜ்யத்வமும் பரஸ்பர விருத்தமாயிருக்க, "ஸூக்ஷ்மசிதசித்விஶிஷ்ட ப்ரஹ்மம் காரணம், ஸ்தூல சிதசித்விஶிஷ்ட ப்ரஹ்மம் கார்யம்" என்று - அவ்விருத்த தர்மங்கள் விஶேஷணங்களிலேயாய் விஶிஷ்டைக்யத்தாலே நிர்வ ஹித்தாற்போலே, இங்கும், "யாதஸ்த்வ ப்ராப்யாஹம் நஹி நாநுமஸ" என்றும் - "தஸ்மிந்ப்ராப்தே ஸ்வரூபதாஸ்யக்ஷய:" என்றும் - "ப்ராப்ய ஷட்யிஷ்யாமி" என்றும் - "ஸ்வதீதயே ப்ர" என்றும் - "திருவுள்ள மிடர் கெடுந்தோறும்...வியக்கவின் புறுதும்" என்றும் - ப்ராப்தி விஶிஷ்டனுபாயம், ப்ரீதிவிஶிஷ்டனுபேயம் என்று விஶேஷணங்களே ஒங்கிடக்கச் செய்தே விஶிஷ்டைக்யத்தாலே உபாயோபேயமெம் பெருமானென்கிறதாகையாலே யெல்லாம்கூடும். "இரக்கமுபாயம் இனிமை உபேயம்" என்றிறே ஜீயரருளிச் செய்யும்படியும்.

"ஸநந்த்ஸாத்யோ ஹ்யஸீஷ்ட" என்று-ப்ரபத்த்யாதிஸாத்யமிறே மோக்ஷம்; ஸாத்யமாவது-முன்பின்றியிலே பின்பு உத்பந்நமாவது; "உத்பந்நஸ்ய விநாஶயோமாக" என்று-உத்பந்நமாய் நஶிக்குமாகில் உபேயமான ஶாஶ்வதாவிர்பாவ மோக்ஷம் நஶிக்குமாயிருக்கதீ யென்னென்னில்; நஶியாது; இதுக்கிரண்டு ப்ரகாரமுண்டு; அதி லொன்று-ஸாத்யந்தான், உத்பாத்யம் என்றும், ப்ராப்யம் என்றும், விகார்யம் என்றும், ஸம்ஸ்கார்யம் என்றும், நாலுப்ரகாரமா யிருக் கும். அவற்றிலுத்பாத்யமாவது - * கடம்கரோதி படம் கரோதி போலே முன்பின்றியிலே பின்புண்டாவது. ப்ராப்யமாவது - "க்ராமம்கச்சதி ராஜாநம்கச்சதி" "மாம்ஏதி யஶ:" என்று-முன் பே ஸித்தமான வஸ்துவை கயிகாரிக்கிடுகை. விகார்யமாவ து - "க்ஷீரம் தத்யுதி" "த்ருவம் கிருதவதயதி" பாலைத் தயிராக்குகையும் ஈயங்களுருக்குகையும். ஸம்ஸ்கார்யமாவது- "வ்ரீஹீநுப்ரோக்ஷதி" "வ்ரீஹீநவஹந்தி" வஸ்துதன்னை கார்யா ஹர யோக்யமாகப் பண்ணுகை. இங்கும், "ப்ரஹ்மவிதாப்நோதி பரம்" என்றும் - "பரந்தாமம் பரம்பரிஷத் ஜ்யோதிர்திவ்யம்" "பரஞ்ஜ்யோதிரூபஸம்பத்ய" என்றும் - "உன்னை யெய்தி"

என்றும் - பண்டே ஸிஸாரவுன வாஸாத்ராவை இவன் கிட்டுகையால், ப்ராப்யும் நித்யமேயாகிறது. இனிமற்றை ப்ரகாரம் ; "நித்யோ நித்யாநாம்" என்றும் - "அஜோஹ்யேக:" என்றும் - "நஹிவிஜ்ஞாதுர்விஜ்ஞாதேர்விபரிலோபோவித்யதே" என்றும் - "பரஞ்சன்மலர்ச்சோதி" என்றும் - ஶாஸ்த்ரங்கள் நித்யராகையாலும் இவர்களுக்கு ஸ்வரூபமான ஜ்ஞாநாநந்தாதிகள் நித்யங்களாகையாலும், "தஸ்யாமஸம்ருதௌ ப்ரகேஷப்" என்றும் - "தயாதிரோஹித ஸ்வாநுஶக்தி: க்ஷேத்ரஜ்ஞஸம்ஜ்ஞிதா" என்றும் - ஶாஸ்த்ரஸ்ராவ ஸ்வரூபங்களுக்கு திரோதாயகமான ப்ரக்ருதி ஸம்ஸர்க்கம்போய், "ஸேநரூபேணாபி நிஷ்பத்யதே" என்றும் - "ஆவிர்பூதஸ்வரூபஸ்து" என்றும் - "ஸ்வபோதாதயோ குணா:" என்றும் - "ப்ரகாஶ்ய தேநஜன்யந்தே நித்யாணவாத்மநோஹிதே" என்றும் - ஸாதாவிகாகாரம் ஃ விஶ்ருதமாய் - உத்பத்யமன்றிக்கே யொழிகையாலும் நித்யமாகிறது என்ற ப்ரகாரம்.

அவையுமப்படியாகிறது; இவ்வுபதேஶம் ப்ரபத்த்யுபபாதனம் பண்ணுகிறதாகில், "ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி சயாசதே ஸகருத்ஸேவாவாய ஸம்மதோமேஷவ்ரதிம் மநஸி: ஶரணாகதி:" என்கிற ப்ரபத்த்திலக்ஷணங்கிடந்ததோவென்னில்; "ராவணோநாம துர்வ்ருத்தோ ராக்ஷஸோ ராக்ஷஸேஶ்வர:| தஸ்யாஹமநுஜோ ப்ராதா விபீஷண இதிஶ்ருத:" என்று - ராவண ஸம்பந்தத்தாலும், "பீஷயஸேஸ்வரீமா" என்று நாமநிர்வசனத்தாலும், ஸ்வதோஷத்தை முன்னிடுகையாலே, "ஸக்ருதேவ ப்ரபந்நாய" என்னுமம்ஶஞ்சொல்லுகிறது; "ராஜ்யம்ப்ரார்த்தயமாநஸ்ய" என்று - தனக்கு ராஜ்யம் வேண்டிவந்தவனாய்ப் பெருமாளுக்கொரு கிஞ்சித்காரம் பண்ணவந்தவனல்லாமையாலே, "ஸகிஞ்சந:" என்னுமம்ஶஞ்சொல்லுகிறது; "ஸர்வம்தாயிக்குலோபம்ஸநம்" என்று - தள்ளிவிடும்படி ஸோத்ஸாஹமாகவுக்குட்பட ஆளன்றிக்கே போருகையாலே, "ஸமதி:" என்னு மம்ஶஞ்சொல்லுகிறது; "ஸவணம்ஶரணாகத:" என்கையாலே, "ஸகுஶேவோபாயஸம்மதோ

---

ஃ (பா) - ஆசீர்ப்பூர்வமாய்.

ஸோஹவேதிவ்யாய நாதிஶரணாகதி:" என்று அதிகாரஞ்சொல்லு கிறது; "வாஜயோ ஶரணாத்வேஷீ நிவாத" என்கையாலே, "ஸர்வலோகஶரண்யாய" என்று அதிகாரஞ் சொல்லுகிறது; ஆகையால், இது நேராகக்கிடந்தது. ஆநுகூல்யஸங்கல்பாதிகளுங்கிட ந்ததோவென்னில்; அந்த லக்ஷணமும் ஸ்பஷ்டம்; "ஆத்மாநம் ஸர்வதா ரக்ஷ புரீஞ்சேமாம் ஸராக்ஷஸாம் | ஸ்வஸ்தி தேஸ்து" என்று ராவணனுக்கும் படைவீட்டுக்கும் நன்மையை யாஶாஸிக்கை யாலே * ஆநுகூல்யஸங்கல்பஞ்சொல்லிற்று; "உக்த்வாது பருஷா வாணீ:" என்று கையிலே தடியிருக்க, பரிஹஸித்தவனைக் கரைய வடித்துப் போராமையாலே * ப்ராதிகூல்யவர்ஜநம் சொல்லி ற்று; "வாஸிநஞ்ச ஹதம் ச்ருத்வா ஸர்வம் ஹ்ருஷ்டவிதழ் ராஜ்யம் ப்ராப்யயோ நஸ்ய" என்று - பேரொதுக்கமாக ராஜ்யந்தரவல்ல ரென்றறுதியிட்டு வருகையாலே * ரக்ஷிஷ்யதீதிவிஶ்வாஸஞ் சொல் லிற்று; "ராகவம் ஶரணங்கத:" என்று சொல்லுகையாலே, * கோப்த்ருத்வவரணஞ்சொல்லிற்று; "பவத்கதம் மே ராஜ்யஞ்சஜீவிதஞ்ச ஸுகாநிசெ" என்று - ஸ்வரக்ஷணபரஸமர்ப்பணம்பண்ணுகையாலே, ஆத்மநிக்ஷேபஞ்சொல்லிற்று; "ப்ராணாஞ்ச ஸஹாநேஷ ஸத்தோ ஸ்யஸயமாகத:" என்று - ஸ்வரத்தில் தளர்த்தியாலும், "ஶீக்ரம் ப்ராதிஶ மாராஜாய யாவதேஷாம் சராத்தநாய" என்று - பெருமாள்பக்கல் போகவொண்ணாதபடி நடுவழியிலே கொல்லநிற் கையாலும், "ஸைந்யம் கார்பண்யவ்யதே" என்கிற கார்பண்யஞ் சொல்லிற்று; ஆகையாலே இந்த லக்ஷணமும் ஸ்பஷ்டம்.

இப்படி ஸ்பஷ்ட லக்ஷணையான ப்ரபத்தியைப்பண்ணி இதுக்கு பலமாக கொள்ளைக்குப் புக்குக் * கூளமெடுத்தவேறுவாதி, நாமிருக்க ஸம்ஸாரங்களையாசைப்படாதே நம்மையே புகந்து வந்த வனுக்கு ஸகலபயநிவ்ருத்தியும் பண்ணுவேன்; இது நமக்கு வ்ரத மென்கிறார் இந்த ஶ்லோகத்தால்.

இப்படி அபயப்ரதாநம்பண்ணுவது ஆருக்கென்னில்; * க. (ஸக்ருதேவப்ரபந்நாய) ஸலக்ஷணப்ரபத்தி பண்ணினவனுக்கு. அதாவது - ஸக்ருதேவப்ரபந்நனாயிருக்கை. ஸக்ருத்தனக்குப்பொரு

* கூளம் - குப்பை

ளென்னென்றால்; "ஆவ்ருத்திரஸக்ருதுபதேசாத்" என்றும் - "ஆப்ரயாணாத்தத்ராபி ஹிதருஷ்டம்" என்றும் - பக்திபோலே ப்ரபத்தியும் ஆவ்ருத்தியுமுடையதென்றிக்கே, "ததேகம் ஸக்ருதுச்சாரணமாத்ரேண" என்றும் - "உபாயோயம் சதுர்த்தஸ்தே ப்ரோக்தஸ் ஸர்வத்ர ஸித்தித:" என்றும் - ப்ரபத்தியும் ஆவ்ருத்தியுமொருகாலேயாயிருக்கை. "ஸக்ருதேவ" என்கிற அவதாரணம் - ப்ரபந்நனே என்றும், ஒருகாலே, இருகால்மட்டில்லை என்றும், அயோகவ்யவச்சேதமோ? அந்யயோகவ்யவச்சேதமோ வென்னில்; ப்ரபந்நனே யென்றபோது, ப்ரபந்நனை யநுவதித்து அவனுக்கு அபயப்ரதானம் பண்ணுவனென்று வாக்யத்துக்கு விதேயமித்தனை போக்கி, ப்ரபந்நனோ அப்ரபந்நனோ வென்று விகல்பமாய் ப்ரபந்நனே என்று விதேயமல்லாமையாலும், "ஸக்ருதுச்சாரணமாத்ரேண" என்றும் - "ஸக்ருதேவ ஹி சாஸ்த்ரார்த்த:" என்றும் - ப்ரபத்தியாகில் ஸக்ருத்கர்த்தவ்யையாய் அஸக்ருத்கர்த்தவ்யை யல்லாமையாலே ஸக்ருதாவ்ருத்தியா யிருப்பதொரு ப்ரபத்தியில் வ்யவச்சேத்ய மில்லாமையாலும் அயோகவ்யவச்சேத மல்லாமையாலும், "அபயம் ததாமி" என்று - அப்ரபந்நனை பக்திநிஷ்டனுக்கும் அபயப்ரதானம் பண்ணினபடியாலே அந்யயோகவ்யவச்சேத மல்லாமையாலும் வ்யாவர்த்யமில்லையென்றிட்டுவ்யர்த்தம். இனி "ஸக்ருதேவ" என்று - இங்கே கூட்டினபோது - "ஸக்ருதேவ ப்ரபந்நாய" என்று - ப்ரபத்திஸாபேக்ஷமாக அபயப்ரதானம் பண்ணுகிறதன்றிக்கே ப்ரபந்நனை நிமித்தமாய் அபயப்ரதானத்திலே தாத்பர்யமாகையாலே ஸக்ருத்தோடே கூட்டினாலும் வ்யர்த்தம். இந்த உபபத்திகளாலே ஸக்ருத்தப்ரயோகமும் வ்யர்த்தம். "ஸக்ருதேவாபயம்ததாமி" என்றிங்கே அந்வயித்தாலோவென்னில்; ஒருசரீரிக்குப் பிறக்கக்கடவ பயங்களெல்லாம் ஒருகாலே ஸஹிதமாய் அவற்றினுடைய நிவ்ருத்தியை ஒருகாலே பண்ணுகிறதல்ல; பூர்வகாலத்தில் பயங்கள் பண்டேயநுபவித்துப் போயிற்றன; ஆகாமிகாலத்தில் பயங்கள் உத்பந்ந மல்லாமையாலே தந்நிவ்ருத்தி இப்போது பண்ணவொண்ணாது. இன்னமும், "ததாமி" என்று வர்த்தமானமாய் வர்த்திஷ்யமல்லாத பயங்கள் உத்பந்நங்களல்

லாமையாலேமேல்வருமவையடைய ஸரவாப்போக்குகிறேனென்கிற வர்த்தமாநத்துக்கும்ஒருகாலேயென்கிற ஸக்ருச்சப்தத்துக்கும் வ்யாஹதியும்வரும். அத்யவஸாயம்பண்ணுகிற இன்றுதொடங்கி ராவணவத பர்யந்தமாகவும் பயங்களுக்கும் பரிஹாரங்களுக்கும் அவதியில்லாமையாலே அநுஷ்டாந விரோதமு மாகையாலே, "ஸக்ருதே" என்றும் - "தவ" என்றும் - ப்ரஸ்துத பதங்களுக்கு வையர்த்யமும்வருமென்னில்; வாராது; ப்ரபந்நனென்றார் பெருமாள், அதுக்கு அநுவதித்தியாக மஹாராஜர், ஸக்ருத்ப்ரயோஜ்யான ப்ரபத்தியை, "ராகவம் ஶரணம் கத:" என்றும் - "பவந்தம் ஶரணம் கத:" என்றும் - "ஸர்வலோக ஶரண்யாய - நிவேதயத" என்றும்-முக்கால்பண்ணி ப்ரபத்திலக்ஷண ஹாநியும் ப்ரபத்த்ருஸ்வரூப ஹாநியும் ப்ரபத்தவ்ய ஸ்வரூபஹாநியும்பண்ணிற்றென்று தூஷணஞ்சொல்ல, "ஸக்ருதேவ ப்ரபந்நாய" அவன் பலகால் பண்ணிற்றிலன்; ஒருகால் பண்ணிற்றனென்கிறார். நாலுமூன்று பண்ணை பண்ணிற்றாக எடுத்த ப்ரமாணங்கள் செய்யும்படி யென்னென்னில்; "ராக்ஷஸோப்யேதி பஶ்யத்வமஸ்மாந்ஹந்தும் நஸம்ஶய:" என்று அபிஶங்கஞ்சொன்ன உங்களைப்பார்த்து, "ஸோஹம் பருஷிதஸ்தேந தாஸவச்சாவமாநித:। த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச ராகவம் ஶரணம் கத:" என்கிறபடி விரோதியாய் வந்தவனல்லேன், அவன்தானே பரிஹவித்துப்போகச்சொல்ல அவனோட்டை ஸம்பந்தங்களையும்விட்டுப்பெருமாளை ஶரணம் புகவந்தேனென்று தன்னருள்பாடு சொன்னான் முற்பட "ஶரணம் கத:" என்கிற நிஷ்டை; உம்முடைய வார்த்தைகளாலே கலங்கினேமோ வென்று ஶங்கித்து நம்மைத் தெளிய விடுகைக்கு, "பவந்தம் ஶரணம் கத:" என்று விண்ணப்பஞ்செய்தபடி; பாதகனாய் வந்தவனல்லன்; உம்மை ஶரணம்புகுவதாக வந்தவனென்று நமக்குப் ‡ பட்டாங்கு சொன்னானிரண்டாம் பண்ணை; "ஆநய" என்று நாமுமழைத்து, "[illegible]" "[illegible]" என்று - நீ ரக்ஷித்தபின்பாயிற்று, "ராத்வா தாவநிழ" என்று ஸந்நிதியிலேயிழிந்து, "ஸர்வலோக ஶரண்யாய - நிவேதயத"

‡ பட்டாங்கு - வாஸ்தவம்.

என்று - நம்காலிலே விழுந்ததாகையாலே, ஒருகாலே யாயிற்று அவன் ஶரணம் புகுந்தது; ஒரு ஸாதநமும் பண்ணிற்றில னென்கிறார். ஆகையாலே, "ஸக்ருதேவ" என்கிற பதம் ஸப்ரயோஜநமாகிறது. அன்றியிலே, * உ. (ஸக்ருதேவ ப்ரபந்நாய) என்று - "அநேகஸஹஸ்ராண்யப்ராப்தாய ஸம்ப்ராப்தாயோ" என்கிறப்போலே, ஸக்ருதேவ நிஶ்சித்து ப்ரபந்நனென்றாய், இப்படி அத்யவஸாயமான ஸாஹஸமாய், "விசார்யமாணே ப்ரயோஜநம்" என்று - ஊர்ஷ்டனோ அநுஷ்டனோ, ஶத்ருவோ அஶத்ருவோ, மித்ரனோ அமித்ரனோ, வத்யனோ அவத்யனோ, ஸ்வீகார்யனோ பஹிஷ்கார்யனோ என்று நாம் பட்டாற்போலே, ஜாதிக்ருய நாதிகளைவிடுவேனோ பற்றுவேனோ, ராவணனை விடுவேனோ பற்றுவேனோ, போகிற விடத்தில் கைக்கொள்ளுவர்களோ தள்ளுவர்களோ, ராஜ்யங்கிடைக்குமோ கிடையாதோ, என்றிப்புடைகளிலே பஹுவிதமாய் விசாரித்து அளப்பது முகப்பதாகையன்றிக்கே * ஸக்ருத்ஸ்வீக்ருத்ய ஸம்நிஶ்சிதம் தாந - போலே ஒருகாலே யறுதியிட்டு வந்தவனென்கிறாராகவுமாம். அன்றியிலே, *௩. ஸஹஸாஶப்தஸ்ய ஸக்ருதர்த்தமாய், ஸஹஸைவ ப்ரபந்நாய என்றாய், அதாவது - "ஸுஜமாஸ ஸமாஹூதே - ந" என்றும் - "ஒல்லை நீபோதாய்" என்றுஞ்சொல்லுகிறபடியே, * நின்றவா நில்லா நெஞ்சிற்பிறந்த வாநைக்ஷ்யம் புரிவதற்கு முன்பே வந்தானென்கை. அன்றியிலே, * ச. (ஸஹஸாப்ரபந்நாய) என்று - ஒன்றையும் நிரூபியாதே ஸாஹஸிகனாய் வந்தான். அதாவது - ராவணன் கோஷ்டியிலே நின்று கடற்கரையிலிருக்கிற பெருமாளை ஶரணம்புக்கால், அவர்பிடித்துக்கொண்டுபோய் விலங்கிலே யிடில் செய்வதென்னென்று ஸயப்படாதே பட்டது படுகிறதென்று அவன் வந்த ஸாஹஸங்காணு மென்கிறாராகவுமாம். இப்படி ஶரணாகத ரக்ஷணம் பண்ணுகிறீராகில் அடியேன் ஶரணாகதியிலே ஸம்ஶயமுண்டோவென்ன; ※ ரு. (ஸ்ஹஸாப்ரபந்நாய) * அன்றீன்றகன்றுக்காக முன்னீன்றகன்றைக்கொம்பிலுங் குளம்பிலும் கொள்ளும் தாயைப்போலே பால்பாய ஶரணாகதனாய் ஸம்யமும்பெறாதவிவனுக்கே யாமத்தனைபோக்கி, ஸ்வஶரணாகதனாய் ராஜ்யதாரமும் பெற்றவுமக்காமோ.

இப்படியாவது அவன்தான் ஶரணாகதனாகிலன்றோ, "ஸுக்ரீவம் ஶரணம் கத:" "ஸர்வலோகஶரண்யாய ராகவாய மஹாத்மநே நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம்" என்றும் - "வத்யதாமேஷ தீவ்ரேண தண்டேந ஸசிவை: ஸஹ" என்றும் - நாங்கள் சொன்ன வார்த்தையைக்கேட்டு வெருவிப்போக நிற்கிறவனன்றோவென்ன; * க. (ஶ்ரவணாதேவ) நாமிப்படி விவக்ஷிதவரான வளவிலும் அவன் ஶ்ரவணனே, போகான்காணுமென்கிறார். ஶ்ரவணனே காணுமென்றருளிச் செய்யாநின்றீர்; இவன் ஸக்திநிஷ்டரைப்போலே அங்கமாகச்சில யத்நாநுஷ்டானம்பண்ணி, "ஶ்ரீய தாம் ஶரணாய மே" என்று நல்வார்த்தை சொல்லுவதும், உசிதவ்யமாகாதென்பதும், தன்மகள் கந்யையையிட்டு நல்வார்த்தை சொல்லுவதாய், அநேகம் வ்யாஸ்ரவணம் பண்ணியன்றோ வந்தது; ஆனபின்பு அவன் ஸக்திநிஷ்டனென்றார் ஸுக்ரீவமஹாராஜர்; பெருமாள், * உ. (ஶ்ரவணாதேவ) அவன் நல்வார்த்தை சொல்லிற்று நமக்காகவல்ல, "விபீஷணஸ்து தர்மாத்மா ந து ராக்ஷஸசேஷ்டித:" என்று - ஶத்ருக்கள் வாக்யத்தாலும், "ப்ராதா ஹி தேஸ்திதோ" என்று - தமயன் விஷயத்திலே, ஸ்திதவாக்யத்தாலும், "ஜ்ஞாநநிஷ்டோ ஹ்ருஷீகேஶ:" என்று - ஶ்ரவணத்யயிகாரியாய்ச் சொன்னாரித்தனை; ஆகையால், இதுகந்யாவிஷயம். "ஸேநயோருபயோர்மத்யே ரதம் ஸ்தாபய" என்று பள்ளரும்பறையரும், பார்ப்பாரும் §பார்க்கருமான விருபடைக்கு நடுவே, தேரைநிறுத்தி ஶ்ரீமச்சலோக முபதேஶித்தபோது, அர்ஜுனனெங்கேகுளித்துக் குலைகுடுமியும் ||தோதவத்தியுமாய்நின்றான்; "இன்னமுறங்குதியோ" என்ன; "நங்கைமீர் போதருகின்றேன்" என்றும்-"தூயோமாய்வந்தோம்துயிலெழுப்பாடுவான்" என்றும் - திருவாய்ப்பாடியில்பெண்கள்நோன்புக்குப் போகிறபோது †அனந்தலிலே கண்ணையுங்கடைவாயையுந்துடைத்து வந்தார்களத்தனைபோக்கி எந்த ‡உவர்க்குழியிலே குளித்து வந்தார்கள்; அப்படியே இவனும், "யோ விஷ்ணும் ஸததம் த்வேஷ்டி தம் வித்யாதந்த்யரேதஸம்" என்று-விஷ்ணுத்வேஷியாய், கர்மவண்ணானை

§ பார்க்கர் - பௌத்தர்கள். || தோதவத்தி - சுத்தவஸ்த்ரம்.
(பா) † அநந்தலிலே ‡ உவர்க்குழி - ஸமுத்ரம்.

ஹதவாந்) பரத்வசிஹ்நங்களை யுடையவர் அபரத்வசிஹ்நங்களையுடைய வுன்னைக் கொன்றார். (நித்யஶ்ரீஸ்த்வாம் ஹதவாந்) நித்யாநபாயிநியான ஶ்ரீயையுடையவர் ஸாபாயிநியான ஶ்ரீயையுடைய உன்னைக் கொன்றார். (அஜய்யஸ்த்வாம் ஹதவாந்) அபராஜிதரானவர் தன் பக்கல் பராஜயமேயான வுன்னைக்கொன்றார். (ஶாஶ்வதஸ்த்வாம் ஹதவாந்) போது செய்யாதவர் போது செய்கிற வுன்னைக் கொன்றார். (த்ருவஸ்த்வாம் ஹதவாந்) ஸ்திரஸ்வபாவராயிருக்கிறவர் அஸ்திரனான வுன்னைக்கொன்றார். (மாநுஷம் வபுராஸ்தாய த்வாம் ஹதவாந்) மாநுஷ்யமுடையவர் மாநுஷ்யமில்லாத வுன்னைக் கொன்றார். (விஷ்ணுஸ்த்வாம் ஹதவாந்) வ்யாபகரானவர் வ்யாப்யைகதேஶனான வுன்னைக்கொன்றார். (ஸத்யபராக்ரமஸ்த்வாம் ஹதவாந்) உண்மையான பராக்ரமசேஷ்டைகளையுடையவர் அஸத்யபராக்ரமசேஷ்டனான வுன்னைக்கொன்றார். (ஸர்வை: பரிவ்ருதோ தேவைஸ்த்வாம் ஹதவாந்) விலக்ஷணராலே சூழப்பட்டவர். ஹேயராலே சூழப்பட்ட வுன்னைக்கொன்றார். (வாநரத்வமுபாகதை: பரிவ்ருதஸ்த்வாம் ஹதவாந்) ராக்ஷஸனாய் ப்ரபலனான வுன்னை க்ஷுத்ரஜந்மங்களைக் கொண்டு கொன்றார். (ஸர்வலோகேஶ்வரஸ்த்வாம் ஹதவாந்) ஸர்வநிர்வாஹகராயிருக்கிறவர் ஏகதேஶநிர்வாஹகனான வுன்னைக் கொன்றார். (ஸாக்ஷாத்த்வாம் ஹதவாந்) நேரே தனக்கொரு குற்றஞ் செய்யாமையாலே வாலியை மறைந்து நின்று கொன்றவர் நீ தீரக்கழிய தனக்குக் குற்றஞ் செய்தபடியாலே நேர்கொடு நேரே நின்று உன்னைக் கொன்றார். (லோகாநாம் ஹிதகாம்யயா த்வாம் ஹதவாந்) லோகஹிதத்துக்காக அஹிதனான வுன்னைக்கொன்றார். (மஹாத்யுதிஸ்த்வாம் ஹதவாந்) பெரியதேஜஸ்ஸையுடையவர் தேஜோஹீநனான வுன்னைக்கொன்றார். எதிரியைப்பெருப்பித்து அவனைக்கொன்றானென்றாலல்லவோ நாயகனுக்குப்பெருமையாவது; பெருமாள் பெருமையும் ராவணனுடைய அவகர்ஷமும் சொல்லப்பெறுமோவென்னில்; இவ்விடத்தில் நாயகனுடைய உத்கர்ஷாபகர்ஷங்களில் தாத்வ

ரு்மில்லை; "ஶாநுஷாணாம்விஷயேவ்யக்தஃகாமம்விணஃ|விநாஶ ஸ்வராமேணஸம்யுமேநாவபத்ய்தே" என்று பெருமாளைச் சிறியராகவும், ராவணனைப்பெரியனாகவும் ஹ்ரித்துப்பெருமாளாலிவ னுக்கு வயங்கூடாதென்று நினைத்திருந்து அவரை யுக்திகளாலே தெளிந்து பெருமாள் பெரியர், ராவணன் ஓராஹஸன் என்றறுதி யிடுகிறாளாகையால் ஓநுவபத்தியுல்லை.

ஆகவிதுதாஶ்லோகியால் சொல்லிற்றாயிற்று, இவருடைய முன் செய்வினை வெளிப்பட்டு "ஸக்ஷாஶாநுஷாமேத்ரண ராமேணயு யிநிஜிதஃ| நஹ்யவத்ரவஸேராஜநு கிவிஷம்ராக்ஷஸஷஹ" என்று ராவணனை உக்ஷஷித்துப் பெருமாளை உபாலம்ஹித்து ஸா வராமெயான ஶோஹஸி ஸநுதமெயாய் அவனுடைய ஸு ரமவரமவமண விஶதிமெஷ்களைத் தெளிந்துபேசி ஷோ த்ஶவத்தாலே ப்ராயஸ்தித்தம்பண்ணி வம்மெயாகிறாள். ௧௪௪.

தாத்பர்யம்.—ஸர்வலோகஜேதாவான ராவணன் பெருமாள்திரு ச்சரங்களால் பட்டுவிழுந்திருக்க, தன்பதியான அந்த ராவணனையும் முன்னே எழுந்தருளியிருக்கிற பெருமாளையும் மந்தோதரி பார்த்து, இவர் இந்த்ராதிகளிலொரு தேவரோ வென்று விசாரித்து அவர்கள் ராவணனால் பலகால் தோற்றோடினவர்களாகையால் இவன் வதத்தி லவர்களாகக்கூடாதாகையால் இவர்ஸர்வவிலக்ஷணரான ஶ்ரியஃபதி, ராவண வதார்த்தமாக தேவர்கள் ப்ரார்த்திக்க ப்ரஹ்மாவின்வரத்து க்கு விரோதம்வாராமல் தன் ஸ்வரூபத்தைமறைத்து மநுஷ்யனாயவ தரித்தார் என்றுதான் நிர்ணயித்து, அவ்வர்த்தத்தை ராவணாதிகளு க்கு முபதேசிக்கிறாள்.

உபதேசிக்கிறபடி யென்னென்னில்; நாம், இவரொருமநுஷ்ய ரென்று எளிதாகநினைக்கும்படி நின்று கரன்முதலான துஷ்டர்களை ஸம்ஹரித்து தர்மத்தை நிலைநிறுத்தி அவ்வவர்க ளபேக்ஷித்தபடி தர் மாதிமோக்ஷாந்தமான புருஷார்த்தங்களையருளின ஸர்வ சக்தரானவி வர், ஸமஸ்த கல்யாணகுண பூர்ணருமாய் ஜகத்ரக்ஷணத்தி லுத்ஸா ஹித்து அதினுபாயங்களை யாராய்ந்து அதற்குவேண்டும் ஸஹாயங் களை ஸம்பாதித்து ஸர்வோத்தரயுக்திகுசலருமாய், ஸர்வாந்தர்யாமி;

மாய், ஸத்யஸங்கல்பருமாய் அப்ராக்ருத திவ்யவிக்ரஹ யுக்தருமாய் இக்குணங்கள் வந்தேறி யன்றிக்கே ஸார்வகாலிகமாக வுடையரு மாய், ஜந்ம ஜராமரணங்கள் முதலான விகாரசூந்யருமாய், கார்ய வர்க்கங்களில் பெரிதான மஹத்தத்வத்துக்கும் அதுக்கும் மேலான அவ்யக்தப்ரக்ருதிகளுக்கும் உத்க்ருஷ்டருமாய், ஸர்வாதாரமுமாய் ஸர்வசரீரியுமாய் ஸகல பலப்ரதருமாய் ஸர்வபோஷகருமாய், ஆச் ரிதரக்ஷணார்த்தமாகஎப்போதும் சங்கசக்ராதிபஞ்சாயுதங்களை யுடை யருமாய், சேதனதோஷங்களைக் காணவொட்டாமல் மறைத்து அவர் களை அங்கீகரிப்பித்தும் அவர்களுக்கு ப்ராப்யையாயுமிருந்து ஒரு க்ஷணமும்பிரியாத ஸ்ரீதேவியையும் அவளுக்காவாஸமாய் அசித்த த்வாபிமாநியான ஸ்ரீவத்ஸ மென்னும் மறுவையும் மார்விலுடையரு மாய், ஸர்வதேசஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஸர்வர்க்கும்ஸர்வ ப்ரகாரத்தாலும் ஜேதாவுமாய், ஸர்வாதிகருமாய், ஸ்திரருமாயிருக்கிற ஸர்வேஶ்வரன்.

ஸமஸ்தவஸ்துக்களிலும் ப்ரவேசித்து அவைகளை வ்யாபித்து இருக்கிற அவர் தான் ப்ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாயிருந்து, தேவர் களாலழிவில்லை யென்று ராவணனுக்கு வரங்கொடுத்த படியாலும் தேவர்களுக்கு முன்புராவணவதார்த்தமாக வரங்கொடுத்தபடியாலும் அவ்வரங்களை ஸத்யமாக்குகைக்காக உருவைமாறுடி ஸமஸ்த கல் யாணகுண பூர்ணராய் சத்ருக்களை யழிக்கைக்காக அதிக்ஷாத்ரமெ ன்று ராவணன் கழித்துவிட்ட மநுஷ்ய சரீரத்தைப்பூண்டு, உன்னை யித்தனைகாலம் ஜயிக்கப்பட்டு அவமானத்தை யடைந்து தேஜோஹீந ராய் ஸஞ்சரிக்கவும் பேசவும் பெறுதேயிருந்து இப்போது வாநரங்க ளாகத் தங்கள் ஸ்ரூபத்தை மறைத்து வந்தவதரித்து பெருமாளைப் பற்றி தேஜஸ்விகளாய் யுத்தத்தில் புகுந்து உன்னை ஜயிக்கயத்நித்து வீரவாதங்களைப்பண்ணி பெருமாளைப் புகழ்ந்துகொண்டு அவருக்கு சத்ருவதத்திலுபாயங்களைக் கற்பித்துக்கொடுத்துக்கொண்டு நிற்கிற தேவர்களால்சூழப்பட்டு, எல்லார்கண்களுக்கும் விஷயராய், தனக்கு ரக்ஷணீயர்களான ஜநங்கள் க்ஷேமத்துக்காகவும். அபராதியை தண் டியாதபோது ராஜாவான தனக்குநேரிடும் பாபம் வாராமைக்காகவும் பாபியான உன்னைத் தண்டித்து உன் பாபங்களைப்போக்கி உனக்கு நன்மையைத் தருகைக்காகவும் பாதாராபஹாரமும் தேவ ராஜ பந்து

த்ரோஹங்களும் பண்ணிநின்ற உன்னை இந்தக் கார்யங்களில் ஸஹகாரிகளாய்ப் போந்த உன் பரிவாரத்துடன் தன் தேஜஸ்ஸினால் கொன்று மஹாதேஜஸ்வியாய் நின்றார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

— —

யுத்தகாண்டம், ௧௧௬ - ம் ஸர்க்கம், ௪௪ - ம் ஸ்லோகம்.

—:0:—

பிராட்டியுடைய க்ஷமாவ்யஞ்ஜகஸ்லோகம்.

—(0)—

பாபாநாம் வா ஸுபாநாம் வா வதார்ஹாணாம் ப்லவங்கம |
கார்யம் கருணமார்யேண ந கஸ்சிந்நாபராத்யதி || ௧௪௫.

அர்த்தம்.—ப்லவங்கம - வாநரமான (ஹநுமானே)! பாபாநாம் வா - பாபிகள் விஷயத்திலும், ஸுபாநாம்வா-புண்யவான்கள் விஷயத்திலும், வதார்ஹாணாம் - வதத்துக்கு யோக்யமானவர்கள் விஷயத்திலும், ஆர்யேண - உத்தமபுருஷனாலே, கருணம் - தயையானது, கார்யம் - பண்ணத்தகுந்தது; கஸ்சித் - ஒருவனும், நாபராத்யதி - அபராதம் பண்ணுகிறதில்லை (என்கிறது) ந - இல்லை.

ஸர்வதாபி ராவணனும்பட்டு பெருமாளும் விஜயிகளானாரென்று பெரிய ப்ரியத்தைப் பிராட்டிக்குத் திருவடி விண்ணப்பஞ்செய்ய, பிராட்டியும் ப்ரீதிப்ரகர்ஷத்தாலே, விம்மல் பொருமலாய் ஸ்தப்தையாயிருக்க, இவனும் விக்கலுக்கு வெம்மாற்றம்போலே "கிந்து விஜயஸேதேவி கிந்த்வம் நாபிபாஷஸே" என்று பெரியப்ரியத்தை விண்ணப்பஞ்செய்தவெனக்கு ஒருமறுமாற்றஞ் சொல்லாதே தேவர் எழுந்தருளியிருந்த விருப்பென்னதானென்று திருவடி விண்ணப்பஞ்செய்ய, பிராட்டியும் உனக்கு ஸத்ருஸமாகத் தரலாவதொன்றில்லாமைகாண் நான் பேசாதிருந்ததென்ன; இவனுமிவ்வளவிலே நம்மபேக்ஷிதத்தை விண்ணப்பஞ்செய்து கொள்வோமென்று பார்த்து தேவரைச்சுற்றும் முற்றும் நலிந்த ராக்ஷஸிகளாகி

ரூர் க்ரூரவெகளாய்த் தீ நாமாணா நாஹவெகளாயிற்று; ராவண னுக்கு முன்னே சொல்லவேண்டுவது இப்பெண்பிள்ளைகளையாயிற்று; அவனுமிவர்களோபாதி கேடனல்லன்; இவர்களிப்போது பாம்புபடமடங்கினாற்போலே இருக்கிறார்களித்தனையாயிற்று; இவர்களைப்ஹுவ்யாகாரமாக ஹிஂஸிக்கப்பாராநின்றேன்; “ஶுஷ்டிஹிஃபாணிஹிஶ்ஶுவா” என்று கையாலே குத்தியும், காலாலே துகைத்தும், நவங்களாலே ஷோதித்தும், பற்களாலே கடித்தும், துண்டித்தும் “ஹிஃஹிஃஸஹெரதிூஹூ” என்று பெருமாள் திருச்சரங்கள் செய்ததெல்லாம் நானே பண்ணப்பாராநின்றேன்; ஶமவீவரஹி களையும், தீக்கும் க்ரூரத்திலே தீக்கமுயலாநின்றேன்; முன்பு வந்தபோது இடமில்லாமல் விட்டுப்போனேனித்தனை; இப்போது எனக்கு எல்லா ப்ரத்யுபகாரங்களும் பண்ணியருளிற்றாகலாம், இத்தனையுந் திருவுள்ளமாகவேணுமென்ன; “வாவா நாஂவா” என்றருளிச்செய்கிறாள்.

வ்யா. (வாவா நாஂவாஸாஹா நாஂவா) இவர்கள் நீ நினைத்திருக்கிறபடியே வாவெகளாகவுமாம், நான் நினைத்திருக்கிறபடியே ஸாஹெகளாகவுமாம்; அதுதானேயன்றே உத்தேஶ்யம்; “ஷோஷோயதீவிதஸ்வஸ்ாக” என்றாற்போலே. அழுக்குடையவனன்றோ குளிக்க ப்ராப்தியுடையான். அவர்கள் வாவெகளாகிலன்றோ நாம் க்ஷமம் கொடுக்கவேண்டுவது. ஸாஹெகளாகில் உன்பால் வேணுமோ? அவர்கள் வாணங்களே கைகொடுக்குமே. கை முதலில்லாதார்க்கன்றோ கை முதலாக வேண்டுவதென்றாள். (வயாஹுாணாஹ) தீணை தீக்கவும் அல்லாதாரைத் தவிரவுஞ் சொல்லுகிற யஶஸ் ஶாஸ்த்ரம் தேவரைத் தோற்றிக்கழித்துப் புகக்கடவதோவென்ன; ஆரேனுமாக ஶரணாகதரை ரக்ஷிக்கக்கடவதென்கிற விஶேஷஶாஸ்த்ரம் உன்னை தோற்றிக்கழித்துப் புகக்கடவதோ வென்கிறாள். (ஷுவஜூ) பின்னையுமவன் பாஂக்திரியவிடாமையாலே, ஹரிஹரி யென்கிறாள். “ஷுவஜூ” என்று நச்சினத்தை நச்சுஞ் ஜாதியானமை கண்டோமென்கிறாள். வஸிஷ்டவாமதேவாதிகள் ஶிக்ஷிக்கும்படியான இக்ஷ்வாகுவஂஶத்தில் பிறந்தாயில்லை; யோகிகளாய் ஜநக

க்ராமத்திலே பிறந்தாயில்லை; காட்டிலே பணையோடு பணைதாவித்திரிகிற ஜாதியிலேயிறே பிறந்தது; அங்ஙனொத்தாருக்கு ஸாரணாமதியோட்டையது தெரியாதென்கிறாள். "வாநரோத்தம" என்றவள் தானேயிறே "ப்லவங்கம" என்கிறாள். ராஜாக்களுமாய் மூலையடியே நடக்கவுரியருமாயிருக்கிற பெருமாளும் எங்கள் முன்னித்தனை கோபித்தறியார்; நீ வாநரஜாதியாயிருந்து இங்ஙனே கோபிக்கக் கடவையோ. (க்ருதம் க்ருதாந்த்ரேண) இவர்கள் பௌருஷம் கிடக்க, இப்போதோடுகிற ஜயநீயஜயெளயைப்பாராய். இவர்களுக்கு ஒரு ரக்ஷகனில்லையே, இப்போதிவ்வளவிலே நாமிரங்கவேணுங்காண். (ஶூரேண) இவையெல்லா மிப்போது நான் கற்பிக்கவேண்டும்படியாவதே உனக்கு. (ஶூரேண) வைராக்யவாக்ரணவணிதனென்கிறது பொய்யோ? அவையுமெல்லாங் கற்றுக் கேட்டிருக்கச் செய்தேயு மிப்போது ராஸமோஷ்டியில் வஶியமானபடி யாகாதே. அந்த மோஷ்டியில் வஶியம்-பழக்கமிறே. நீ இங்ஙனே சொல்லவல்லையாயிற்று, நான் பிறந்தபின் அம்மோஷ்டி இங்ஙன்னிறத்த தாகாதென்று கருத்து. (நகஶ்சிந்நாபராத்யதி) ஸம்ஸாரத்தில் குற்றமில்லாதாரார்? திரைநீக்கிக்கடலாடப்போமோ? நமக்குத்திரையனைக ஹாவித்திருக்கிற பெருமாள்தான் குற்றவாளரல்லரோ? நான்தான் குற்றப்பட்டவளல்லேனோ? நீதான் குற்றவாளனல்லையோ? பெருமாள் குற்றவாளரானபடி யென்னென்னில்; தாம்காடேறப்போந்தார்; அவர்பின்னே மடலூருவாரைப்போலே இளையபெருமாளும் போந்தார்; தம்மோடே வநவாஸஹோமம் பண்ணக்கடவதாக இலையகலப்படுத்திக்கொண்டு நானும் போந்தேன்; என்னைப் பிரிந்து பத்துமாஸமிருந்தார்; தான் வாராவிட்டால் தன்னதோரம்பு இயங்கமாட்டாமையில்லையிறே. இவ்வழி இத்தனை நாள் பிரிந்திருக்க வல்லரானபோதே பெருமாள் பக்கலிலேயல்லவே குற்றம்; வாநரஜாதிக்குக் கடூரமாகப் பேசாதிராதே அதுதன்னைச் சொன்னவென்பக்கலன்றோ குற்றம்; இன்னையகன் சொன்ன காரியஞ்செய்த வடியாளை தண்டிக்கப் பார்த்தவன்று பெரு

மாளருளிச்செய்த க்ஷாமஞ்செய்யப்போந்த வுன்னை முற்பட தண்டித்துக் கொண்டன்றோ ராவணன் சொன்ன க்ஷாமஞ்செய்த விவர்களைத் தண்டிப்பது ; ஆகையாலே நீ யல்லையோ குற்றவாளன். எல்லாப்படியாலும் பெருமாளொரு விஷயத்தை முனிந்தவன்று ஆறவிடுகைக்குநானுண்டு; நானுமவர்வழியோடு போகவேண்டியிருந்தவன்று எனக்கு நீயுண்டென்றிருந்தேன்; நீயுமிங்ஙனேயானால் க்ஷவராயஞ்செய்வார்க்குப் புகலாவாருண்டோ வென்கிறாள். ௧௪௫.

தாத்பர்யம்.—திருவடி, லங்காபுரியில் ராவணவதாநந்தரம் பெருமாள் நியமநத்தைப் பெற்றுப் பிராட்டியை யழைத்து வருவதாக அசோகவநிகையிற் சென்று பிராட்டியை உபத்ரவித்துவரும் ராக்ஷஸிகளைக்கண்டு, இவர்களை சின்னபின்னமாக்கிக்கொன்றுவிடுகிறேன், இதையெனக்கு அநுமதிபண்ணவேணுமென்றுயாசிக்க, அப்பொழுது பிராட்டி, நீர் இவர்களை பாபிஷ்டர்களாக வெண்ணினீர்; ராஜாஜ்ஞையினால் தங்கள் ஜாதிக்குசிதமான கர்மங்களையநுஷ்டித்தபடியால் இவர்களைப் புண்யம் செய்தவர்களாக நினைக்கிறேன். இவர்கள் பாபிகளென்றீராகிலும் புண்யம்செய்தவர்களைப் புண்யமே ரக்ஷிக்குமாகையால் நமக்கு தயநீயர்பாபிகளே. நாமும் இவர்கள் பாபத்தையேயிறேஅபேக்ஷித் திருப்பது. ஸாபராதரான இவர்கள் வதத்துக்கு யோக்யர்களேயாகிலும் துர்பலர்களாகையால் உத்தமபுருஷன் தயவுசெய்து இவர்களை ரக்ஷிப்பதே யுக்தம். சாஸ்த்ரத்தினாழ்பொருளானவிது கிளையோடு கிளைதாவி மேல்மேலே ஸஞ்சரிக்கிற உமக்குத் தெரியாது. ஸாபராதனைத்தண்டியாவிடில் சாஸ்த்ரவிரோதம் வருமே யென்னில், ஸர்வஜ்ஞரான பெருமாள் தன்னை நம்பிவந்த வென்னைப் பத்துமாஸமாய் உபேக்ஷித்தார் ; நான் பாரதந்த்ர்யத்தை விட்டும் இவைகளைச் சொல்லவும் யத்நித்தேன் ; ராஜாஜ்ஞாபாலநம் இவர்களுக்கு தோஷமாகில் நீரும் ராமாஜ்ஞையை யநுஷ்டித்தீர் ; இதரர்கள் அபராதிகளென்பது கைமுதிகந்யாயஸித்தம். நிரபராதியான புருஷனில்லாமையால் தயைக்கும் விஷயமில்லாமல் போய்விடும். ஆகையாலிவர்கள் ரக்ஷணீயரென்று அபயப்ரதாநம் பண்ணினாள்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

பாலகாண்டம், ௬-ம், ஸர்க்கம், ௮-ம் ச்லோகம்.

—————:0:—————

௨௦.—த்ருஷ்டாம் ஸக்ருத் அயோத்யாயாம் நாவித்வாந் ந நாஸ்திக:
ஸர்வே நராச்ச நார்யச்ச தர்மசீலா: ஸுஸம்யதா: ॥ ௧௪௬ ॥

அர்த்தம். அயோத்யாயாம் - அயோத்யாநகரத்தில், அவித்வாந்-பண்டிதனுகாதவன், த்ருஷ்டா-பார்க்க, நஸக்ருத்-யோக்யனல்லன்; நாஸ்திக: -வைதிகமான வர்த்தமில்லை யென்பவனும், த்ருஷ்டா-பார்க்க, நஸக்ருத் - யோக்யனல்லன்; ஸர்வே-ஸமஸ்தமான, நரா:-புருஷர்களும், நார்ய: - ஸ்த்ரீகளும், தர்மசீலா: - தர்மத்தையே ஸ்வபாவமாகவுடையவர்களாயும், ஸுஸம்யதா: - இந்த்ரிய ஜயமுடையவர்களாயு மிருக்கிறார்கள்.

வ்யா. அறுபதினாயிரமாண்டு வந்தியமறுத்து நன்மைகளையுமுண்டாக்கிப்போந்த வஸுந்தரைக்கு மிரண்டு பொருளுண்டாக்கப் போச்சுதில்லை; ஓரவித்வானையாதல் வைதிகமான வர்த்தங்களை இல்லையென்பானொருவ நாஸ்திகனை யாதலுண்டாக்கப் போச்சுதில்லை. அப்படை வீட்டிலுள்ளார் ராஜபுத்ரர்களாரேனுமொருவர் முடிசூடவமையாதோ என்றிருக்குமவர்களல்லர்; பெருமாளே முடிசூடாவிடில் "உபேக்ஷிதா நம் யாஸ்யாமோ வநேவா ராமேண ரஹிதா நாஜுகிஞ்சநம் ஜீவிதம்ஹி ந:" என்று பெருமாள் அபிஷேகம் பண்ணாத படைவீட்டிலிருப்பதில்லை. விழுந்தவிடமே சுடுகாடாகப் போகவமையும். என்றிருப்பர் புருஷர்கள்; ஸ்த்ரீகளும் "ராமேவாநுகமிஷ்யாமோ கதிம்வாவிமதஸ்ய" என்று பெருமாள் வழிமாறிப் போனுரென்று திறக்கவழைத்த ஸ்தனங்கள் ஸர்வம் பிளக்க தள்ளிக்கதவடைத்துக்கொள்ளுவர்கள். (தர்மசீலா:) ராமோ நாந்யஸ்த்ரீயே வா ராமதர்மமென்றிருக்குமவர்களிறே; ஸ்வப்ரயோஜனத்திலே நெஞ்சு செல்லாதவர்களாயிற்று. ௧௪௬.

தாத்பர்யம்.—அயோத்யா பட்டணத்தில் வேத சாஸ்த்ரங்களையறியாதவனையும், தேவதா பரலோகங்களில்லை யென்பானையுமொருவனைக்காணவும் முடியாது. அங்கிருக்கும் ஸ்த்ரீபுருஷர்களெல்லாரும் ஸ்வப்ரயோஜனங்களை விட்டு பரமதர்மமான ராமாநுவ்ருத்தியிலேயே ஆஸக்தியுடையவர்களாயிருக்கிறார்கள்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

———

அயோத்யாகாண்டம் - ௬௭ - ம் ஸர்க்கம் - ௩௪ - ம் ஶ்லோகம்.

——(०)——

௨௯.—யஶ்ச ராமம் ந பஶ்யேத்து யம் ச ராமோ ந பஶ்யதி ।
நிந்தித ஸ்ஸ வஸேல்லோகே ஸ்வாத்மா சைநம் விகர்ஹதே ॥

அர்த்தம்.—யஃ-எவன், ராமம்-ஸ்ரீராமனையும், ந பஶ்யேத்து-காணாதிருப்பனோ; யம் - எவனை, ராமஃ - ஸ்ரீராமனும், ந பஶ்யதி-பாராதிருக்கிறாரோ; ஸஃ - அவன், லோகே - உலகத்தில், நிந்திதஃ-தூஷிக்கப்பட்டவனாய், வஸேத் - வாஸம்பண்ணுவன்; ஸ்வாத்மாபி-தன்னுடைய ஆத்மாவும், ஏநம் - இவனை, விகர்ஹதே - நிந்திக்கிறது.

வ்யா. (யஶ்ச ராமம் ந பஶ்யேத்து) (ராமம்) என்கிறது கண்ணுக்கு வகுத்த விஷயத்தை ; காணாதிருக்கிறான் யாவனொருவன். (யஃ) எத்தனையேனு முயர்ந்தவனாகவுமாம். (து) இது தப்பினாலும். தப்பாதது தப்பினால் வருமது இவ்வளவன்றென்கைக்காக விசேஷிக்கிறது. (யம் ச ராமோ ந பஶ்யதி) எத்தனையேனும் சிறியாரும் இவர் கண்பார்வைக் கிலக்காகாதாரில்லை. (யம்) எத்தனையேனும் சிறியவனென்கிறது. எத்தனையேனும் சிறியாரிறே இவர்கண்ணிற் பார்வைக்கிலக்காவார். "யாருமோர் நிலைமையனென வறிவரியவெம்பெருமான் யாருமோர் நிலைமையனென வறிவெளிய வெம்பெருமான்". ப்ரஹ்மாதிகளுடைய ஜ்ஞாநத்துக்கும் அவிஷயமாயிருக்கும் ; ஓரிடைச்சிக்கும் வேடனுக்கும் கைபுகுந்திருக்கும். எத்தனையேனும் உயர்ந்தவனாகிலும் பெருமாளுடைய ஒருவேளை புறப்பாடு காணானாகில் அவன் பெரியனல்லன்; எத்தனையேனும் சிறியனானவன் பக்கலிலும தப்பாது அவருடைய பார்வை; தப்புகிறான் யாவனொருவன், அவன் அவஸ்துக்களோடும் எண்ணப்படான் ; எண்ணப்படாமையிலே எண்ணப்படும்; எல்லாரும் நிந்தித்து "சீ,சீ" என்னப்படும். இவனை நிந்திப்பார் வஸிஷ்டாதிகள் தொடக்கமானார் நால்வரிருவரோ வென்னில் ; (நிந்திதஸ்ஸ வஸேல்லோகே) (லோகே நிந்திதஃ) இவனை நிந்திக்கைக்குரியரல்லாதாரில்லை. விஷயப்ரவணனானவன், இப்போது பழியாய் மேல் நரகமாயிருக்கச்செய்தே, தான் "நல்லது செய்கிறோம்" என்றிருக்குமிறே; அப்படி தான் "நல்லது செய்கிறோம்" என்றிருக்குமோ வென்னில்; (ஸ்வாத்மா சைநம் விகர்ஹதே) தானும் தன்னை நிந்திக்

துக்கொள்ளும். திருக்கைத்தல மிழந்தவன், "இற்றைப் புறப்பாடு காணப்பெறாதநாம் கருப்பூரமும் எலுமிச்சங்காயும் பெற்றோமாகில் முடிந்து பிழைக்கலாயிற்று" என்றிருக்குமிறே. ௧௪௭.

தாத்பர்யம்.—எவ்வளவு பெரியனாகிலும் ஸ்ரீராமனை ஸேவிக்காதவனும் ஸ்ரீராமன் கடாக்ஷத்துக்கு பாத்ரமாகாதவனும் லோகத்தில் நிந்திக்கப்படுவனே யல்லாமல் தன்னையும்தானே நிந்தித்துக்கொள்ளுவன். ௧௪௭.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அயோத்யாகாண்டம், ௧-ம் ஸர்க்கம், ௧-ம் ஶ்லோகம்.

---

௨௬.—கச்சதா மாதுலகுலம் பரதேந ததாநக:।
சத்ருக்நோ நித்யசத்ருக்நோ நீத: ப்ரீதிபுரஸ்க்ருத:॥ ௧௪௮.

அர்த்தம்.—அநக: - தோஷமில்லாதவராயும், நித்யசத்ருக்ந: - எப்போதும் ஆத்மவிரோதியான இந்த்ரியங்களை ஹிம்ஸிக்கிறவராயும், சத்ருக்ந: - லவணாஸுரன் முதலான விரோதிகளைக் கொன்றவருமான சத்ருக்நாழ்வான், ப்ரீதிபுரஸ்க்ருத: - ப்ரேமத்தினால் முன்னே செய்யப்பட்டவராய் (ப்ரேரேபிக்கப்பட்டவராய்), ததா - அப்போது, மாதுலகுலம் - மாமாவான யுதாஜித்தினுடைய க்ருஹத்தைக்குறித்து, கச்சதா - போகாநிற்கிற, பரதேந - பரதாழ்வானாலே, நீத: - அடைவிப்பிக்கப்பட்டார்.

வ்யா.—(கச்சதா) என்கிற வர்த்தமாநநிர்தேசத்தாலே போகிறவிடத்தில் தனக்கொரு ப்ரயோஜநமுண்டாயாதல், இங்கே மாதாபிதாக்களைக் கேள்விகொள்ளுதல், பூர்வஜரான பெருமாளைக் கேள்விகொள்ளு மிவ்வளவு மின்றிக்கே அவனையொழிய ஜீவிக்கமாட்டாதபடியாலே போனானென்கை. (மாதுலகுலம்) யுதாஜித்தழைத்தது அவனை யாகையாலே போக்கிலுபேக்ஷ்யதையு மவனுக்கு; இவனும் அவனுபேக்ஷ்யனாய்ப் போனானென்கை. (பரதேந) ஸர்வஸ்வத்தையும் துஞ்சி, பெருமாளும் ராஜ்யத்தைப் பொகட்டுப்போய், இளையபெருமாள் "தொடர்ந்து அடிமை செய்யவேணும்" என்றுபோய், சத்ருக்நாழ்வானும் "நின்னை யல்லதறியேன்" என்றிருக்கும் தசையிலும் ராஜ்யத்தை ரக்ஷிக்கக்கடவன்

என்றாயிற்று ஸ்ரீவஸிஷ்டபகவான் திருநாமம் சாத்திற்று; “பரத ஆதிராஜ்யஸ்ய ஹரணாத்” என்றானிறே ஸ்ரீஶதாநீகன். (ததா) இருவரும் ராஜபுத்ரர்களாய் நக்ஷத்ர ஸௌஹார்தமுண்டானால் பிரித்து ஸௌஹ்ருதம் விட்டுப்போக ப்ராப்தமாயிருக்க அவன்போனதுவே ஸௌஹ்ருதமாகப் போனானென்கை. “ஸுஹ்ருதா” என்கிறதிலே ஸ்நேஹவிஷயமன்றோ; “ததா” என்றதென்னென்னில்; அங்கு ஸுகநிவ்ருத்தியைச்சொல்லிற்று; இங்கு அதுக்காஶ்ரயமான ஸௌஹார்தநிவ்ருத்தியைச் சொல்லுகிறது; ஆகையாலே புநருக்திதோஷமில்லை; ஶேஷத்வவிரோதியிறே இரண்டும். (ஸுகவ:) ஸுகமில்லாத்து இவனுக்கேயிறே. ஸுகமாவது - உத்தேஶ்யவிரோதியிறே; இவ்விடத்திலஸுகமாவது ராஜ்யாஸக்தி. இத்தை பாபமென்னப்போமோ வென்னில்; பாபத்தில் புண்யம் நன்றாயிருக்க மோக்ஷவிரோதியாகையாலே புண்யமும் “ஸ்வர்ணராஜாணிவியம் பாபவத்” என்று பாபஶப்தவாச்யமாயிற்றிறே; ஆகையாலே பரதாநுவ்ருத்தியாகிற உத்தேஶ்யத்துக்கு விரோதியாகில் ராமஸௌந்தர்யத்தில் கால்தாழு மதுவும் பாபமாமித்தனையிறே; “ராமே ப்ரமாதம் மா கார்ஷீ:” என்று ராமாநுவ்ருத்திக்கு இடைச்சுவராகச் சொல்லிற்றிறே ராமஸௌந்தர்யத்தை; பரதாநுவ்ருத்திக்கு இடைச்சுவரென்னுமிடம் சொல்லவேண்டாவிறே. (ஶத்ருக்ந:) பிள்ளைகளுடைய ஸந்நிவேஶங்களைப் பார்த்துத் திருநாமம் சாத்துகிற ஸ்ரீவஸிஷ்டபகவான், பெருமாள் கண்டாரையழகாலே துவக்கவல்லராகத் தோற்றுகையாலே “ராமன்” என்றும், இளையபெருமாளுக்குக் கைங்கர்யமே நிரூபகமாகத் தோற்றுகையாலே “லக்ஷ்மணன்” என்றும், திருநாமம் சாத்தினாற்போலே, இவருடைய ஸந்நிவேஶத்தைக் காணவே ஶத்ருக்கள் மண்ணுண்ணும்படி யிருக்கையாலே “ஶத்ருக்நன்” என்று திருநாமம் சாத்தினான். (நித்யஶத்ருக்ந:) பாஹ்யஶத்ருக்களை யன்றிக்கே ஆந்தரஶத்ருக்களான இந்த்ரியங்களை ஜயித்திருக்கு மென்கை. அவ்விந்த்ரிய ஜயத்தினெல்லை எவ்வளவென்னில்; “பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்” என்கிற ராமஸௌந்தர்யத்திலும் துவக்குண்ணா தொழிகை. அதாகிறது - பெருமாளைப் பற்றும்போதும் தன்னுகப்பாலேயாதல், அவருடைய வைலக்ஷண்யத்தாலேயாதலன்றிக்கே தனக்குத்தேஶ்யனான இவனுகந்த விஷயம்

என்று பற்றுகை. (நீதஃ) ராஜாக்கள் போம்போது உடைவாள் மற்றொன்று கொண்டுபோமோபாதி அவன் கொடுபோகப்போனான். ஶரீரத்துக்கு ஶரீராவயவங்களோட்டை ஸம்யோகம் உபயநிஷ்டமாயிருக்குமிறே; அதுபோலன்றிக்கே ஜாதிகுணங்களோபாதி போனான். (ஸ்ரீதிவார்க்ஷ்ரதஃ) “ஜ்யேஷ்டாநுவ்ருத்திகதர்வம்” என்று போனானல்லன்; “ஸுஹ்ரஸ்வர்ஜ்க்ரிஷ்யதி” என்றுபோன இளையபெருமாளைப்போலே போனவிடத்திலே ஸர்வஶேஷவ்ருத்தியும் பண்ணலாமென்று பாரித்துக்கொண்டு ஸ்ரீதிவேரிக்கப்போனான். படைவீட்டி லிருந்தால் பலருண்டாகையாலே விழுக்காட்டோபாதியிறே ஸிஸிப்பது. “நீதஃ” என்கையாலே ஶேஷத்வத்தில் கூவிக்ஷ்தனுனுயிருக்கக்கடவன்; “ஸ்ரீதிவார்க்ஷ்ரதஃ” என்கையாலே ஸர்வதா ஸர்வமான வ்ருத்தியிலே வைதந்ரவ்யயுக்தமான யஜ்ஞங்களுண்டாயிருக்கை; “படியாய்க் கிடந்துன்பவளவாய் காண்பேனே” என்றிறே கூவியூக்ர் வாவைதர். “க நவஃ” நிதர்ஶத்ருஷஃ” என்று வாவநஷ்த்தாலும் ஹோமர்வைதயாலும் அவனையே பற்றினனென்னவுமாம். “கநவஃ, நிதர்ஶத்ருஷஃ” என்றதுக்கு ப்ரயோஜநமென்னென்னில்; “ஸ்ரீஶத்ருக்நாழ்வான் பெருமாளுக்கு நல்லனானபடி, அவனையல்லதறியாத ஸ்ரீபரதாழ்வானையல்லது வேறொன்றறியாதபடியானான்” என்று எம்பெருமானாருளிச் செய்தார். இதுவே ப்ரயோஜநமாகல் சொன்னமிகையெல்லாம் பொறுக்குமிறே. கசஅ.

தாத்பர்யம்.—திருவயோத்யையில் தசரதசக்ரவர்த்தி தன்குமாரர்களுடன் ஸுகமே வஸிக்குங்காலத்தில், கேகயமஹாராஜன் தன்னுடைய தௌஹித்ரனான ஸ்ரீபரதாழ்வானைப் பார்க்கக்கோலி அவரை யழைத்து வரும்படி தன்னுடைய பிள்ளையான யுதாஜித்தை அனுப்ப, அவர் திருவயோத்யைக்குவந்து ஸ்ரீபரதாழ்வானை அழைக்க, ஸ்ரீபரதாழ்வானும் தன்னுடைய மாமாவான யுதாஜித்மஹாராஜருடைய திருமாளிகைக் கெழுந்தருள, அப்போது ஸ்ரீஶத்ருக்நாழ்வான், தன்னை யழைச்காமலிருக்கச் செய்தேயும் ஸ்ரீபரதாழ்வானிடத்திலுண்டான ப்ரீதியினால் அவரைவிட்டு அரைக்ஷணமும் தரிக்கமாட்டாதவராய், ஜிதேந்த்ரியராகையாலே தனக்குத்தேஶ்யமான கைங்கர்யத்துக்கு விரோதிகளான ராமஸௌந்தர்யாதிகளிலும் சாபல்யத்தைவிட்டுபாகவதகைங்கர்யத்தையேபரமபுருஷார்த்தமாகவெண்ணி, ப்ரயாணத்தில் தனக்கொரு கூப்திகம் பாராமல் அவரெழுந்தருளுகிற

போதே அவரை யநுவர்த்தித்து நிழல்போலே அத்யந்தம் பாதந்த்ர ராயெழுந்தருளினார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அயோத்யாகாண்டம், ருந - ம் ஸர்க்கம், ௩௪ - ம் ஶ்லோகம்.

———(:○:)———

ஶ்ரீ.—ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராகவ।
முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்ருதௌ॥௧௪௯.

அர்த்தம்.—ராகவ - ரகுவம்ஶத்தி லவதரித்த ஸ்ரீராமனே! த்வயா - உம்மாலே, ஹீநா - ரஹிதையான, ஸீதா - ஸீதாதேவி, ந - பிழைக்கமாட்டாள்; அஹமபி - நானும், ந ச - பிழைக்கமாட்டேன்; அபிஜீவாவ: - பிழைத்தோமாகில், ஜலாத் - ஜலத்தில் நின்றும், உத்ருதௌ - எடுக்கப்பட்ட, மத்ஸ்யாவிவ - மீன்கள்போலே, முஹூர்த்தம் - க்ஷணகாலமே (ஜீவிப்போம்).

வ்யா. தேவரை யொழிந்தவன்று பிராட்டியு முளளாகாள்; அடியேனு முளனாகேன். தேவரையொழிந்தவன்று முதலிலே ஜீவிக்குமதுதானில்லை. (அபிஜீவாவ:) யதிஜீவாவ:. (முஹூர்த்தம்) ஒரு க்ஷணகாலம். (ஜலாந்மத்ஸ்யாவிவ) ஜலத்தைப் பிரிந்த மத்ஸ்யம் ஜீவிப்பது அந்நீர் நசையறுமளவுமிறே; அப்படியே நில்லென்று சொன்ன வார்த்தை உம்முடைய திருவுள்ளத்திலேயு முண்டென்றறியு மளவுங்காண் நாங்கள் ஜீவிப்பது. ௧௪௯.

தாத்பர்யம்.—ஸீதாபிராட்டியும் அடியேனும் தேவரீரைப் பிரிந்தால் ஜீவிக்கமாட்டோம். ஜீவித்தாலும் ஒருக்ஷணமே ஜீவிப்போம். எப்படியென்றால், மத்ஸ்யத்தை ஜலத்திலிருந்து வெளியிலெடுத்தால் அந்த ஈரமிருக்கும்வரையிலும் ஜீவித்து உலர்ந்தவாறே நசிக்குமாப் போலே, தேவரீரருளின வார்த்தை தேவரீர் திருவுள்ளத்திலோடுகிற தென்று அறியுமளவுமே ஜீவிப்போம்; அது தெரிந்தால் உத்தர க்ஷணமே முடிந்துபோவோம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அயோத்யாகாண்டம், அ௬ - ம் ஸர்க்கம், க - ம் ஶ்லோகம்.

———(○)———

ஶ்ரீ.—தம் மத்தேக்ஷுபயா ஸந்தாபம் ஜாஜ்ஜ்வல்யாந்தம் ஹோமநாத: ।
ஸாதர்யாவித்யோய நம்ஹோ மஹா ந ஸோதா:॥ ௧௫○

அர்த்தம்.— அத - அதுக்குப் பிற்பாடு, கஹநகோசர: - காட்டில் வஸிக்கிற, குஹ: - குஹப்பெருமாள், மஹாத்மந: - மஹாநுபாவரான, லக்ஷ்மணஸ்ய - இளையபெருமாளுடைய, ஸத்பாவம் - நல் நடத்தையை, அப்ரமேயாய - அபரிமித ப்ரபாவத்தையுடைய, பரதாய - பரதாழ்வானையும் பொருட்டு, ஆசசக்ஷே - சொன்னார்.

அவதாரிகை. (ஆசசக்ஷேஸத்பாவம்) இத்யாதி. ஸ்ரீபரதாழ்வான் வாராநின்றானென்று ஸ்ரீகுஹப்பெருமாள் கேட்ட அநந்தரம் இளையபெருமாள் செய்ததையெல்லாம் சொல்லத் தொடங்கினார். "வந்தபோது செய்யும்படி சொல்லுகிறதென்; ஓடம்நின்றதே, கோலிருந்ததே, தானும் தன் பரிகரமும் அக்கரைப்படும்படி காண்கிறேன்" என்று ஸந்நத்தனாயிருந்தான்; அநந்தரம் ஸுமந்த்ரனுள்ளிட்டார் வந்து, "இளையபெருமாள் ஸ்வபாவம்போலே காண் பரதாழ்வானுடைய ஸ்வபாவமிருப்பது, அவனை நீ காணவேணுங்காண்" என்ன, இவனும்போய்க் கண்ட அநந்தரம் "இவனுடைய ஸ்வபாவமிருந்தபடியென்" என்று ஆஶ்சர்யப்பட்டு இவனுக்கு நம்மால் கொடுக்கலாமுபஹாரமென்னென்று பார்த்து, இவனுக்கு ஸத்ருஶமான உபஹாரம் இளையபெருமாள் ஸ்வபாவங்களாமித்தனை என்று அவற்றைச் சொல்லத் தொடங்கினான்.

வ்யா. (ஆசசக்ஷேஸத்பாவம்) ஸத்பாவமாகிறது - ஸத்துக்களுடைய ஆசாரம். "ஸத்வ்யவஸாயாத்மகா:" "ஸாதவ: க்ஷீணதோஷாஸ்து" என்கிறபடியே ஸத்துக்களாவார் க்ஷீணதோஷரிறே. பாவம் ஆசாரம். ஒருவன் குலவான், அபிஜாதன், வித்வான், என்றறிவது அவர்கள் அநுஷ்டானங்கொண்டிறே; அப்படியேயிறே இவனுடைய அநுஷ்டானமும். பெருமாள் கண்வளர்ந்தருளுகைக்குப்பூக்களறுப்பது, படுக்கைபடுப்பது, தாமரையிலையைப் பறித்து தண்ணீரை முகந்து திருவடிகளை விளக்குவது, பின்னையும் தண்ணீரை முகந்து அமுதுசெய்யப்பண்ணுவது, ஶேஷித்தத்தை பிராட்டியை யமுதுசெய்யப்பண்ணுவது, கண்வளர்ந்தருளப்பண்ணி கையும் வில்லுமாய்க்கொண்டு நம்மையுங்கூட வஶித்து நோக்குவதாய் காணுமவருடைய ஆசாரமிருந்தபடி என்று அவர் வ்ருத்தாந்தத்தைச் சொல்லத் தொடங்கினார். (லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:) கடலைக்கையாலே இறைக்கத் தொடங்கினார். (லக்ஷ்மணஸ்ய மஹாத்மநஸ்ஸத்பாவம்

அப்ரமேயாய பரதாய ஆசசக்ஷே) கழியின் பெருமையைக் கடலுக்குச்சொல்லத்தொடங்கினார். (பரதாயாப்ரமேயாயாசசக்ஷே) ஶேஷபூதனானால் "நான்பணி செய்யக்கடவேன்" என்று சொல்லியோ பணிசெய்வது; அதுகிடக்க, "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" சொல்லிற்றெல்லாம் செய்யக்கடவேனென்று ப்ரதிஜ்ஞை பண்ணி "ராஜ்யத்திலேஇரீர்" என்ன, மாட்டேனென்று பின்போகை ஶேஷத்வக்ருத்யமோ? நெருப்பிலே புகச்சொன்னாராகில் அத்தைச் செய்தல், அதிநின்றும்படியான ராஜ்யத்திலிருக்கச் சொன்னாராகில் அத்தைச் செய்தல், பின்போகச் சொன்னாராகில் அத்தைச் செய்தல், இப்படி சொல்லிற்றுச் செய்கை யன்றோ ஶேஷத்வக்ருத்யம். (மஹாஹ:) நெடுநாள் வழிவயித்த பரதனுக்கு ஒருநாள் ஸேவித்த மஹான் சொல்லும்படி யாவதே; இன்னானின்னார்க்குச் சொல்லுகை என்றில்லையாகாதே; கற்றவர்களாமித்தனையாகாதே வேண்டுவது. (ஸஹ நமோ வர:) காட்டில் மரத்திலும் மட்டையிலும் பழகிப்போந்தவிவன் இளையபெருமாள் படிகளைப் பேசிப்போந்தபடி கண்டதே! என்று ஜஷிகொண்டாடுகிறான். அங்ஙனன்றிக்கே, பெருமாளுடைய வ்யதிரேகத்தில் தூற்றிலே தலைமடுத்துக்கொண்டு கிடந்தவன் பரதனைக் கண்டவாறே புறப்பட்டானென்னுதல். ௧௫௦.

தாத்பர்யம்.—சித்ரகூடத்திலெழுந்தருளியிருக்கிற பெருமாளைத் திருவயோத்யைக்கு மீட்கஉத்தேசித்து ஸ்ரீபரதாழ்வானெழுந்தருள, அவ்வரண்ய வாஸியான குஹப்பெருமாள், ஸ்ரீபரதாழ்வானுடைய ராமபக்தி முதலான அமேயமான ப்ரபாவங்களைக் கண்டு ஆச்சர்யப்பட்டு இவருக்கு உபஹாரமாக அபரிமிதவைபவரான இளையபெருமாளுடைய பெருமாள் விஷயமான ப்ரீத்யதிசயத்தையும் அவர்கைங்கர்யத்திலபிநிவேஶத்தையும் இன்னும் இப்படிப்பட்ட ஸதாசாரங்களையும் சொன்னார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அயோத்யாகாண்டம்-௨௩-ம்ஸர்க்கம்-௨௭-ம் ஶ்லோகம்.

௨௭.—ராஜ்யஞ்ச தவ ரக்ஷேயமஹம் வேலேவ ஸாகரம் |
ப்ரதிஜாநாமி தே வீர மா பூவம் வீரலோகபாக் || ௧௫௧.

அர்த்தம்.—ஸாகரம் - ஸமுத்ரத்தை, வேலேவ-கரைபோலே; அஹம் - நான், தவ - தேவரீருடைய, ராஜ்யஞ்ச - ராஜ்யத்தையும்,

ரக்ஷயம் - ரக்ஷிக்கக்கடவேன்; வீர - ஸமர்த்தரானவரே! தே - தேவரீருடைய (எதிரில்), ப்ரதிஜாநாமி - ப்ரதிஜ்ஞை பண்ணுகிறேன். (இப்படி செய்யாவிடில்), நாஸம்வயம் - (வஸ்துவாக) இருக்கமாட்டேன், வீரலோகபாக் - வீரரான தசரதர் அடைந்த லோகத்தை யடையக்கடவேன்.

ஸ்ரீ. (ராஜ்யஞ்ச தவ ரக்ஷயம்) "ரக்ஷ்யஸே குணவக்ஷந" என்கிறபடியே உம்முடைய ரக்ஷணம் பண்ணுகை யன்றிக்கே உம்முடைய ராஜ்யத்தையும் ரக்ஷிக்கக்கடவேன். எனக்கு தாஸ்யமும் ஸ்வபாவமானாலும் உம்மாலென்னை மீறவொண்ணாது காணும். (ஸுஹம்வேலேவஸாகரம்) கடலுக்குக்கரை ஶேஷமாயிருக்கச் செய்தேயும் கரையை அதிக்ரமிக்கமாட்டாதிறே கடல்; அப்படியே, "நீர்பெரியீர்" என்று, உம்மாலென்னை விஞ்சவொண்ணாது காணும். (ப்ரதிஜாநாமி) நானிப்படி ப்ரதிஜ்ஞை பண்ணுகிறேன். (தேவீர) ஒருகோழை முன்னேயோ நான் ப்ரதிஜ்ஞை பண்ணிற்று; ப்ரதிஜ்ஞை பண்ணினால் அத்தைத் தலைக்கட்டித் தரவல்ல ஆண்பிள்ளைத்தனமுடைய உம்முடைய முன்னே யன்றோ? (நாஸம்வயம்) இப்படி செய்திலேனாகில் உம்முடைய ஸந்நிதியில் வதிக்கப்பெறாதொழிகையன்றிக்கே உம்முடைய ராஜ்யத்திலும் வதிக்கப்பெறாதவனாகிறேன். (வீரலோகபாக்) உம்மை முடிசூடி யநுபவிக்கப் பாரித்து அதுபெறாதேபோன சக்ரவர்த்தி புக்க லோகம் புகுகிறேன்.

தாத்பர்யம்.—ஸமுத்ரத்தின் கரை ஸமுத்ரத்தைக் காப்பதுபோல் தேவரீருடைய ஶேஷபூதனான அடியேன் தேவரீரையும் தேவரீருடைய இந்த ராஜ்யத்தையும் காப்பாற்றக்கடவேன். இதை தேவரீர் தலைக்கட்டிவைப்பீரென்று தேவரீர் முன்னில் ப்ரதிஜ்ஞைபண்ணுகிறேன். இப்படி செய்யாவிடில் என்னுடைய ஸ்வரூபமழிந்து தேவரீரைவிட்டு தசரதர்போன லோகத்துக்குப் போகக்கடவேன்; என்று வநவாஸம்போக யத்நித்தகாலத்தில் வநத்துக்கெழுந்தருளக்கூடாதென்ற அபிப்ராயமாக ஸ்ரீகௌஸலையார் முன் பெருமாளைப் பார்த்து இளையபெருமாளருளிச்செய்தார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அயோத்யாகாண்டம், ௧௭-ம் ஸர்க்கம், ௧௪-ம் ஶ்லோகம்.

—(௦)—

உ௦. யே தாந்ராஜ்ஞோ ஸம்ஹ்ருஷ்டா ஸ்வைஷ்டே தே உஸப சேதஸ:|
ஶோகபாரேண சாக்ராந்தா: ஶயநம் ந ஜஹுஸ்ததா|| ௧௫௨.

அர்த்தம்.—ராகவஸ்ய - ஸ்ரீராமனுக்கு, ஸுஹ்ருதঃ - ஸ்நேஹிதர்கள், யேது - எவர்களோ; ஸர்வே - ஸமஸ்தமான, தே - அவர்கள், சோகபாரேண - துக்காதிசயத்தினால், ஆக்ராந்தாঃ - ஆக்ரமிக்கப்பட்டவர்களும், அசேதஸঃ - அறிவில்லாத மனஸ்ஸையுடையவர்களுமாய், சயநம் - படுக்கையை, ததா - அப்போது, நஜஹுঃ - விட்டார்களில்லை.

வ்யா. (யேது) வக்ரவதிர் போக்கையநுபதிப் பண்ணினன், ஸ்ரீகௌஸல்யையார் அநுசாஸநம் பண்ணிவிட்டாள்; அவ்வளவன்றிக்கே பத்தொன்பதாம் ஸாதெஷயாயிற்று தோழன்மார்படி. (ராகவஸ்யஸுஹ்ருதঃ) தாய் தகப்பனுக்கு மறுத்தவையும் வெளியிடும்படி யுட்புக்கவர்களிறே தோழன்மாராகிறார். தங்களைப் பேணாதே அவனுக்கே நன்மையை யெண்ணிப்போந்தவர்கள் படுகுலைப்பட்டார்களென்கிறது. (ஸர்வேதே) ஒரு விஜாதியாக ஸாத்ருவதிபெற்றிருக்குமாப்போலே. (அசேதஸঃ) ஸுஹ்ருத்துக்களாகில் எழுந்திருந்து காலைக்கட்டி மீளாதொழிவா னென்னென்னில்; அறிவுகலந்தால் செய்யுமத்தை நெஞ்சில் வெளிச்செறிப்பில்லாதபோதும் செய்யப்போகாதிறே. அறிவு கெடுகைக்கு ஹேது வென்னென்னில்; (சோகபாரேணாக்ராந்தாঃ) மலையமுக்கினாற்போலே சோகம் அமுக்காநிற்கச் செய்வதென். (சயநம் நஜஹுஸ்ததா) படுக்கையை விட்டெழுந்திருந்தார்களாகில் மீட்டுக்கொண்டு புகுந்த வாசியன்றோ; தாந்தாமே படுக்கையிற் கிடந்து போந்தவர்களன்றே. கடுஉ.

தாத்பர்யம்.—திருவயோத்யையில் பெருமாள் காட்டுக்கெழுந்தருளின வநந்தரம், பெருமாளுக்கு நன்மையை யெண்ணிப்போருகிற தோழன்மார்கள் ராமவிரஹத்தை ஸஹிக்கமாட்டாமல் துக்கத்திலழுக்குண்டு செய்யவேண்டுவதின்னதென்றறியாமல் படுக்கைவிட்டெழுந்திருக்கமாட்டாம லிருந்தார்கள்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ஆரண்யகாண்டம், கசு-ம் ஸர்க்கம், உகூ-ம் ச்லோகம்.

—:0:—

௫௦.—ஸாவஜ்ஞ ந க்ருதஜ்ஞ ந யஜ்ஞ ந வ லக்ஷண ।
கபாட வாம்தேத்யண யத்ராதா நஸம்வ்ருத்த விதா ஸாகடு.

அர்த்தம்.—லக்ஷ்மண - லக்ஷ்மணனே ! ஸாவஜ்ஞ ந - அபிப்ராயத்தை யறிந்தவராயும், க்ருதஜ்ஞ ந - பண்ணவேண்டும் ப்ரகாரத்தைத் தெரிந்து கொண்டவராயும், தர்மஜ்ஞ ந - தர்மஸ்வரூபத்தை யறிந்தவராயும், புத்ரேண - புத் என்கிற நரகத்தில் நின்றும் ரக்ஷிக்கத்தக்கபிள்ளையுமான, த்வயா - உம்மாலே, தர்மாத்மா - உதாரசிலரான, பிதா - தகப்பனரான தசரதர், மே - எனக்கு, நஶோச்யஃ :

போகவில்லை.

வ்யா. (ஸாவஜ்ஞ ந) "க்ரியதாம்" என்று சொல்லுகிறவரிறே இளையபெருமாள்; இப்படி செய்யவல்ல நீர் நம்மைக் கேட்டதென்னென்கிறார். வணக்ஷ்மாத்மையைச்சமைத்த வசனமாம்சொல்லுகிறவாறெதர்மயிறே. (ஸாவஜ்ஞ ந) அல்லாதவை சொன்னாலும் தாமும் பிராட்டியுமாய் வனவாஸமாயிருக்குமிடங்கள் சமைக்கும்படி இளையபெருமாளுக்குப் பெருமாளருளிச் செய்யாரிறே; நெஞ்சாலே நினைக்கு மித்தனையிறே ; இன்னிவைவறிந்து செய்தார். (க்ருதஜ்ஞ ந) அதுவேயன்றிக்கே, செய்து போரும்படி யறிந்து செய்தார். அறுபதினாயிரயாண்டு ஜீவித்த வ்ருத்தராய் நெடுநாள்மலடுநின்று பிள்ளை பெற்றவனைகையாலே இவரென் நினைந் திருக்கிறாரோ என்று நினைவை யாராய்ந்தும், இவர்க்கெத்தாலே என்னகுறைவருகிறதோ வென்று பொருந்துமிடங்கள் பார்த்தும், அவன் செய்து போருமடைவு அறிவராயிற்று. (தர்மஜ்ஞ ந) நினைவறிந்தாலும் செய்துபோருமடைவறிந்தாலும் தானும் ராஜபுத்ரனை பின்பு எனக்குமோரிருப்பிடம் வேண்டாவோ வென்றிருக்கு மவனுக்கு இது செய்யவொண்ணாதிறே; அங்ஙனன்றிக்கே, அத்தலையில் தாஸ்யமே நமக்கு ஸ்வரூபமான பின்பு பின்னை யத்தலைக் குறுப்பாகச் செய்து போருமதே நமக்கு வருத்தது என்று அத்தலைக்காகச் செய்யுமத்தையே தமக்கு கர்த்தவ்யமென்றிருப்பர். (த்வயேதி). தாமுள்ளவன்று தாமுளராய் தாம் போனவன்றைக்கும் உம்மைவைத்துப் போனரேயென்கிறார். (புத்ரேணை) "புத்" என்று ஒரு நரகவிஶேஷமாய் அதில் புகாதபடி நோக்குமென்றுமிற்று புத்ரனென்று பேராகிறது; ஐயருக்கு நம்முடைய ஸந்நிதியன்றிக்கேயொழிகைதனக்கு மேற்பட்டநிரயமில்லையிறே ; அவர்க்கது வாராதபடி நோக்குகிறீர் நீரிறே' (தர்மாத்மா) வ்ருத்தசுஶ்ரூஷணைவாறே, நம்மையரை யொப்பாருண்டோ? அவர் மொருவரே : தாமிருந்தநாள் தாம் வேண்டுவன

வெனக்குச்செய்து தாம் போனவன்று நமக்குவேண்டுவன செய்கைக்கு உம்மைப்பெற்றுத் தண்ணீர்ப்பந்தல் வைத்துப்போவதே. (ஊ) இருவருக்கும் விதாவானமை யொத்திருக்கச்செய்தே "ஊ" என்கிறாராயிற்று; அவர் நமக்குச் செய்யுமவை நீரிருந்து செய்கையாலே நாமவரை இழந்திலோம் ; நீரிழந்தீராகில் த்தனையிறே. கடுரு.

தாத்பர்யம்.—லக்ஷ்மணா! என் மநஸ்ஸிலிருக்கும் அபிப்ராயத்தையும் செய்யவேண்டும் விதத்தையுமறிந்து இந்த கைங்கர்யமே உத்தமதர்மமென்று தெரிந்துகொண்ட நீர் அதிஸுந்தரமான பர்ணசாலையை நிர்மித்துத்தகப்பனார் செய்யவேண்டும் கார்யங்களைச் செய்தீராகையால் ,என் தகப்பனார் போனதினாலெனக்கொரு குறைவுமில்லை என்று பர்ணசாலை கட்டினபிற்பாடு ஸ்ரீராமன் இளையபெருமாளைக் குறித்துச் சொன்னார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

ஆரண்யகாண்டம், ௬௩-ம் ஸர்க்கம், ௧௨-ம் ஶ்லோகம்.

———(௦)———

ஊ௦.—ஈஷிநு யா ஸாஸந் உதாரஶீலா ஶிலாதலே ஸ்ஸமந் உபோவவிஷ்டா | காந்தஸ்மிதா லக்ஷ்மண ஜாதஹாஸா த்வாமாஹ ஸீதா பஹுவாக்யஜாதம் || கடுச.

அர்த்தம்.—லக்ஷ்மண .. லக்ஷ்மணனே ! ஈஷிநு - இந்த, ஶிலாதலே-பாறையின்பேரில், ஸ்ஸமம் - முன்பு, மயாஸாயம் - என்னோடேகூட, உதாரஶீலா - தாராளமான ஸ்வபாவமுடையவளும், காந்தஸ்மிதா - மநோஹரமான புன்சிரிப்பை யுடையவளுமான, ஸீதா - ஸீதாபிராட்டி, உபோவவிஷ்டா-நாற்புறமும் ஸமீபத்தில் உட்கார்ந்தவளாய், ஜாதஹாஸா - உண்டான சிரிப்பை யுடையளாய், த்வாம் - உம்மைக்குறித்து, வாக்யஜாதம் - வசநஸமூஹத்தை, பஹு-அநேகவிதமாய், ஆஹ - சொன்னாள்.

அவதாரிகை. (ஈஷிநு) முன்புதாமும் பிராட்டியும் ஜலக்ரீடாதிகள்பண்ணி ஸரஸமாகப் பரிமாறிற்றோரிடத்திலே பிராட்டியைப்பிரிந்துதாமுமிளையபெருமாளுமாய்த் தேடிக்கொண்டுவாராநிற்கச்செய்தே அவ்விடத்தைக்கண்டு இளையபெருமாளைப் பார்த்து அருளிச்செய்கிறார்.

வ்யா. (ஈஷிநு) இப்படி வெறுந்தரையாயிருக்கிற விடத்திலே தான் அன்று நாமெடுப்பெடுத்தது. (மயாஸாயம்) ஷ்ணய

பாரொளியில் தம்மைத்தாம் சால மதித்திறே யிருப்பது. நாமுங்கூட க்காணவந்த சோழரோபாதியாகக் கடக்க நிற்கும்படி அவனுடைய அளவுடைமையும் விஶ்ரம்பமாகப் பரிமாறினபடியுங் காண். (உதார ஶீலா) படைவீட்டிலிருந்த நாள் மாமனார் மாமியார்க்குக் கூசிப்படி விடுவாரோபாதி அளவுபடவாயிற்று போகம் செல்லுவது; இப்போது அவ்வளவன்றிக்கே ஏகாந்தமாகையாலே தன்னை முற்றூட்டாக ஸமர்ப்பணம் பண்ணிக் கொண்டிருந்தா ளாயிற்று. (ஶீலாதலே ஸமாஸீநா) ஜலக்ரீடை பண்ணுகிற தோரிடத்திலே ஶீதளமாய் இளைத்தவிடத்திலே அதிலே ஏறுவதாகப் பெருமாள் முற்கோலிக்கணிசிக்க, "ஸ்த்ரீஷு நிதாந்தகோமலா:" என்கிறவ திலேயுமொரு ஸம்பாவமுண்டிறே இவளுக்கு; அத்தை இவரு டைய இங்கிதாதிகளைக் கொண்டறிந்து இவரை இளைப்பிக்க வேணு மென்று பார்த்து பெருமாளேறுவதாகக் கணிசித்த துறையை யடை த்துக்கொண் டிருந்தாள். (உபோபவிஷ்டா) அப்படியா யிருக் குமிறே யெங்கும். (காஞ்சநாபா) வெறும்புறத்திலே தானே துவ க்கவல்லவள்; முறுவலைச் சேர்த்தாற்போலே யாயிற்று ஸௌந்தர்யமி ருப்பது; அதுக்குமேலே அப்போது பிறந்த வெற்றியாலே ஜாத ஹர்ஷையானளாயிற்று. (ஸ்வாஸ்ரா) இதுக்கு முன்பு தொடங்கி னவற்றில் தலைக்கட்டாதே மீளுமதில்லையிறே பெருமாள்; இதொன் றும் தலைக்கட்டப் பெற்றதில்லை; அத்தாலே லஜ்ஜித்துக் கவிழ்தலையிட் டார் பெருமாள்; அவரைவிடா, இவரைப்போரப் பொலியச்சொல்லி க்கொண்டாடு மிளையபெருமாள் ஸௌவத்தைப்பார்த்தாள்; "பாரீரோ தம்பியீர்! நீங்கள் நினைத்த தெல்லாம் தலைக்கட்டினி கோளிறே; நீங்கள் வல்லவலிய ஆண்பிள்ளைகள்; நாங்கள் பெண் பெண்டுகள்; நீங் கள்வேட்டைக்கும் வினைக்கும்போய் வநவாஸிக்குமவர்கள்; நாங்கள் வீடுவிட்டுப் புறப்பட்டறியோம்; உங்களுக்கு நினைத்த வகைகளெல் லாம் தலைக்கட்டலாமிறே; உங்கள் தமயனார் வென்றாரிறே" என்று ஸஹாஸௌவமாகக்கொண் டிவ்வார்த்தையருளிச் செய்தாளாயிற்று.

தாத்பர்யம்.—லக்ஷ்மணா! குருஜநங்களான மாமனார் மாமியார் ப்ரதிபந்தகமில்லாத இந்த ஏகாந்தமான விடத்தில் முன்பு ஸீதாதேவி தாராளமாகத்தன்னை எனக்கதீநமாக்கி என்னை ரஸிப்பித்துக்கொண்டு போருகையில், ஒருநாள் ஜலக்ரீடைபண்ணி இளைத்து இந்த கற்பா றையிலேயே இளைப்பாறநான் நினைத்திருக்கையில், என்னுடையமுக

விகாஸாதிகளால் என்னுடைய அபிப்ராயத்தை, யறிந்து என்னைப்பரிஹஸிக்க நினைத்து, எனக்கு முன்னமேதான் அந்தப்பாறைமேலேறி, நான் எந்தவழியாய் ஏறயத்நித்தாலும் அங்கங்கெல்லாம் எனக்கேற அவகாசமில்லாமற் செய்து, அதிஸுந்தரமாயும் புன்சிரிப்பையுமுடைய முகமுடையவளாய், ஓரங்களிலுட்கார்ந்து என்னை ஜயித்து அப்பொழுது பெரியசிரிப்புடன், தம்பியாரே! நீங்கள் புருஷ ஸிம்ஹங்கள், நான் ஸாமர்த்யமில்லாத பெண்பிள்ளை ; நீங்கள் நினைத்தது நினைத்த ப்ரகாரம் நிறைவேற்றுவீர்கள், நானொன்றும் செய்யவறியேன் ; இப்போது உம்முடைய தமயனார் என்னை ஜயித்தாரே அதைப் பார்த்தீரன்றோ ; என்றிப்படி அநேக பரிஹாஸோக்திகளை உம்மோடு சொன்னாளன்றோ என்று ஸீதா தேவியைத் தேடுங்காலத்தில் இளையபெருமாளோடு ஸ்ரீராமன் அருளிச்செய்தார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

கிஷ்கிந்தாகாண்டம், ௨அ-ம் ஸர்க்கம், ௨அ-ம் ஶ்லோகம்.

—(०)—

௨௭.—நாந்ருக்வேதவிநீதஸ்ய நாயஜுர்வேததாரிண:।
நாஸாமவேதவிது⁴ஷ: ஶக்யமேவம் ப்ரபா⁴ஷிதும்॥ ௧௫௫.

அர்த்தம், அந்ருக்வேதவிநீதஸ்ய - ருக்வேதத்தில் சிக்ஷிதனாகாதவனுக்கு, ஏவம் - இப்படி, ப்ரபா⁴ஷிதும் - ஸம்பாஷிக்கைக்கு, நஶக்யம் - ஸாத்யமன்று ; அயஜுர்வேததாரிண: - யஜுர்வேதத்தைத் தரியாதவனுக்கும், ந - ஸாத்யமன்று; அஸாமவேதவிது⁴ஷ:- ஸாமவேதத்தை யறியாதவனுக்கும், ந - ஸாத்யமன்று.

வ்யா. (நாந்ருக்வேதவிநீதஸ்ய) அநந்தோவை வேதா: என்று அபரிமிதமான வேதம் ஶிக்ஷிதனானவனுக்கல்ல திப்படி வார்த்தைசொல்லவொண்ணாது. (நாயஜுர்வேததாரிண:) யஜுர்வேதம் வாயாலே தாரணந்தானே அரிது ; அத்தை யறிந்தவனுக்கல்லது இவ்வார்த்தைசொல்ல வொண்ணாது. (நாஸாமவேதவிது⁴ஷ:) ஸாமவேதம் கானவிஶேஷங்களறியவரிது ; அதறிந்தவனுக் கல்லது இப்படி வார்த்தைசொல்ல முடியாது. (ஶக்யமேவம்ப்ரபா⁴ஷிதும்) இத்தை யெல்லாவற்றையுமபிகரித்தவனுக்கல்லது நம்முன்னே இப்படி வார்த்தைசொல்லலாமோ வென்றாரிறே பெருமாள், ௧௫௫.

தாத்பர்யம்.—ருக்யஜுஸ் ஸாமவேதங்களை ஸுஶிக்ஷிதமாயறியாதவன் இப்படிவார்த்தை சொல்லவறியாள் என்று திருவடி விஷயமாய் இளையபெருமாளைப் பார்த்துப் பெருமாளருளிச்செய்தார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

கிஷ்கிந்தாகாண்டம், ௧-ம் ஸர்க்கம், ௧௧௫-ம் ஶ்லோகம்.

——:o:——

௨௭.—பத்³மஸௌக³ந்தி⁴கவஹம் ஶிவம் ஶோகவிநாஶநம்|
த⁴ந்யா லக்ஷ்மண ஸேவந்தே பம்போபவநமாருதம்|| ௧௫௬.

அர்த்தம்.—லக்ஷ்மண-லக்ஷ்மணனே! பத்³மஸௌக³ந்தி⁴கவஹம் - தாமரஸம் ஆம்பல் இந்த புஷ்பங்களின் பரிமளத்தை அடைவிப்பியாநிற்கிறதாயும், ஶிவம் - பரிசுத்தமாயும், ஶோகவிநாஶநம் - துக்கத்தைப் போக்கடிக்கிறதாயும் இருக்கிற, பம்போபவநமாருதம் - பம்பாஸரஸ்ஸின் தீரத்திலிருக்கிற வநங்களில் நின்றும் வீசுகிற காற்றை, த⁴ந்யா: - புண்யவான்கள், ஸேவந்தே - ப்ரதீக்ஷிக்கிறார்கள்.

வ்யா. (பத்³மஸௌக³ந்தி⁴கவஹம்) கலம்பகஞ் சூடுவாரைப்போலே. (ஶிவம்) இதினத்தனை நன்மையுடையாரொருவருமில்லை. இதுக்கு நன்மையென்னென்னில்; (ஶோகவிநாஶநம்) நம்மை வித்ரவம்பண்ணுது. ஶோகம் மறுவலிடாதபடி பண்ணும்போலே யிராநின்றது. (த⁴ந்யா:) த⁴நமுடையராயிருப்பார் க்ஷாமத்துக்கு அஞ்சார்களிறே. (ஸேவந்தே) அஞ்சாமையே யன்றிக்கே இத்தை த⁴நஹவிக்கைக்கு ஸாத⁴நமான த்³ரவ்யம் தேடாநிற்பர்கள். (பம்போபவநமாருதம்) "ஆகாஶத்திலே நெருப்பு" என்னுமாப்போலே. ௧௫௬.

தாத்பர்யம்.—லக்ஷ்மண! பம்பாதீரத்திலிருக்கும் தோட்டங்களிலிருந்து புறப்பட்டு அங்குள்ள தாமரைமுதலான அநேக புஷ்பங்களின்மேல்விழுந்து அதின் ஸுகந்தங்களைக்கொண்டு குளிர்ந்துவீசுகிற இந்தக்காற்றானது, இப்போது விரஹியான என்னைமுடித்து என்னுடைய துக்கத்தைப் போக்கப்பார்க்கிறது. தன் ப்ரியைகளுடன் கூடினபுண்யவான்கள் இந்தக்காற்றை எதிர்பார்த்துக்கொண்டன்றோ அந்தந்த இடங்களில் வஸிக்கிறார்கள்; என்று மலயமாருத தப்தரான பெருமாளருளிச் செய்தார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

ஸுந்தரகாண்டம், ௩௪-ம் ஸர்க்கம், ௨௩-ம் ஸ்லோகம்.

௨௭.—ஸ்வப்நேபி யத்யஹம் வீரம் ராகவம் ஸஹலக்ஷ்மணம் |
பஶ்யேயம் யதி ஜீவேயம் ஸ்வப்நோபி மம மத்ஸரீ ||

அர்த்தம்.—அஹம் - நான், ஸஹலக்ஷ்மணம் - லக்ஷ்மணனோடு கூடின, வீரம் - ஸமர்த்தரான, ராகவம் - ஸ்ரீராமனை, ஸ்வப்நேபி - ஸ்வப்நத்திலேயாவது, பஶ்யேயம்யதி - பார்ப்பேனேயானால், ஜீவேயம் - பிழைத்திருப்பேன்; ஸ்வப்நோபி - ஸ்வப்நமும், மம - என்னுடைய விஷயத்தில், மத்ஸரீ - பொறாமையுடையதாயிருக்கிறது.

வ்யா. (ஸ்வப்நேபியத்யஹம்வீரம்) ஸ்வப்நத்திலே கண்டாலும் து:க்கநிவர்த்தகராகவல்லராயிற்று. (ராகவம்ஸஹலக்ஷ்மணம்) பிரிகிறபோது இருவரையுங்கூடப் பிரிகையாலே காணுமிடத்திலும் இருவரையுங்கூடக் காணவேணுமென்றிறே ஆசைப்படுவது. அப்போது இருவரும் பிரிகையாலே தங்களில் கூடினார்களோ இல்லையோ என்னும் அதிஶங்கைபண்ணியிருக்குமே. (பஶ்யேயம்யதிஜீவேயம்ஸ்வப்நோபிமமமத்ஸரீ) என்னவல்லே யறிந்து முகங்காட்டாமைக்கு அவரே யன்றிக்கே இதுவும் என்னை நலியவேணுமோ என்றாளிறே.

தாத்பர்யம்.—ஸ்வப்நத்திற் கண்டாலும் என் துக்கங்களைப் போக்கவல்லரான பெருமாளையும் இளையபெருமாளையும் ஸ்வப்நத்தில் பார்த்தாவது ஜீவிக்கலாமென்றால் அதுவும் என்னிடத்தில் மாத்ஸர்யத்தைபண்ணி வாராமலிருக்கிறது; என்று ராக்ஷஸிகள் மத்யத்திலிருப்பவளான பிராட்டி யருளிச்செய்தாள்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

ஸுந்தரகாண்டம்- ௧௬-ம் ஸர்க்கம், ௪-ம் ஸ்லோகம்.

௨௮.—ராமஸ்ய வ்யவஸாயஜ்ஞா லக்ஷ்மணஸ்ய ச தீமத: |
நாத்யர்த்தம் க்ஷுப்யதே தேவீ கங்கேவ ஜலதாகமே || கரு அ.

அர்த்தம்.—ராமஸ்ய - ஸ்ரீராமனுடையவும், தீமத: - புத்திமானான, லக்ஷ்மணஸ்ய - லக்ஷ்மணனுடையவும், வ்யவஸாயஜ்ஞா - உத்யோகத்தை யறிந்தவளான, தேவீ - ஸீதாபிராட்டி, ஜலதாகமே - மழைக்காலத்தில், கங்கேவ - கங்காநதிபோலே, அத்யர்த்தம் - மிகவும், நக்ஷுப்யதே - கலங்குகிறாளில்லை.

ஸ்ரா: (ராக்ஷஸ்யவஶம் க³தா) "ஏதத்³வ்ரதம் மம" என்றும் "ஸமாஶ்ரயண-ஸம்ஸ்ரவே" என்றும் சொல்லுகிறபடியே அறிந்திருக்குமவளாகையாலே யரித்திருந்தாள். ஆஶ்ரிதருடையாரை ஒருநாளும் விடேனென்றும், அவர்களை விடவேண்டிற்றாகில் நானுளேனுமேனென்றுமிறே அவர் சொல்லிவைப்பது. "ஸர்வஸம்ஜீவிதம் ஜஹ்யாம்" என்றிருக்குமவரிறே. (லக்ஷ்மணஸ்ய வயீரத:) அவர் தம்முடைய ஏவலாலே ராமாஶ்ரமத்தின் பின்னே அது ராமனையென்றறியாதேபிடிக்க வொருப்பட்டபோதும் "இது ராமாஶ்ரமம்" என்று சொல்லும்படி அவ்வளவிலும் தெளிந்திருக்கும் இளையபெருமாள் படியையறிந்திருக்கையாலும். (நாத்ய ப்ரக்ஷீணஸ்ய ஏதத³ேவீ) அவர் தலையாலே சுமக்கும்படி வஸ்ஸையாய்ப் போந்தவளாகையாலே க்ஷோபஹேதுக்களுண்டாயிருக்கச் செய்தேயும் க்ஷோபித்தைதயாயிற்றிலள். ஸத்தாநாஶம் பிறக்குமளவாயிருக்கச்செய்தேயும் தரித்திருந்தாள். (மஹோஜவஜலதா மஹி) நிரந்தரமாக வர்ஷியாநின்றவிழாநிற்கச் செய்தேயும் மஹி தெளிந்திருக்குமாப்போலே.௧௫அ.

தாத்பர்யம்.—ஸீதாதேவி ராக்ஷஸிகளினால் பீடிதையாயிருக்கச் செய்தேயும் பெருமாளுடைய ஆஶ்ரிதரக்ஷணவ்ரதத்தையும் அவரை உத்ஸாஹிப்பிக்கும் இளையபெருமாளுடைய வ்ரதத்தையும் அறிந்தவளாகையால், எவ்வளவு மழைபெய்தாலும் கங்காநதி எப்படி கலங்காதோ, அப்படியே கொஞ்சமும் விகாரமின்றியிருந்தாள்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

யுத்தகாண்டம், ரு-ம் ஸர்க்கம், ரு-ம் ஶ்லோகம்.

---

௧௫௯.—நமே து:க²ம் ப்ரியா தூ³ரே நமே து:க²ம் ஹ்ருதேதி வா|
ஏதத³ேவாநுஶோசாமி வயோஸ்யா ஹ்யதிவர்த்ததே. ௧௫௯.

அர்த்தம்.—ப்ரியா - அபிமதையான ஸீதை, தூ³ரே - தூரத்தில் (இருக்கிறாளென்று), மே - எனக்கு, து:க²ம் - வ்யஸநமானது, ந - இல்லை; ஹ்ருதா-(ராவணனால்) அபஹரிக்கப்பட்டாள்; இதி வா-என்றாவது, மே - எனக்கு, து:க²ம் - வ்யஸநமானது, ந - இல்லை; அஸ்யா: - இவளுடைய, வயோ ஹி - வயஸ்ஸன்றோ, அதிவர்த்ததே - கழிகிறது; ஏதத³ேவ - (என்கிற) இத்தைக்குறித்தே, அநுஶோசாமி - து:க்கிக்கிறேன்,

வ்யா. வைதேஹி நம்மைப் பிரிந்து தூரத்திலே வர்த்தியா நின்றாளென்றதுக்கு வெறுக்கிறேனுமல்லேன்; இனி வலிய ரக்ஷ ஸாலே பிரிவுபிறந்தது; இனி யெங்ஙனே நாம் ஸாயிக்கும்படி என் றதுக்கு வெறுக்கிறேனுமல்லேன். அதாகிறது - கடக்கவிருந்தாளா கில் கடலை யணைசெய்து ராவணனை உள்ளே எடுத்துவிட்டுத் தீருகிறது; இனி பிரிவுக்கு ஹேதுபூதனான பையலைக் கிழங்கெடுத்துப் பொகடத்தீருகிறது அக்கார்யம்; நானிதொழிந்த அல்லாதவற்றுக்கு வெருவேன்; இதொன்றுக்குமே நான் ஶோகிப்பது. அதேதென்னில்; (வயோஸ்யா ஹ்யதிவர்த்ததே) இவைபோலேகாணும், என்னம்பால் மீளவிடலாவதொன்றன்றே? அணைக்குக் கிழக்குப்பட்ட நீரை மீட்கப்போகாதிறே. ௧௫௬

தாத்பர்யம்.—ஸீதை வெகு தூரதேசத்தி லிருக்கிறாளென்றுவது, அவளைக்கொண்டுபோன ராவணன் பலவானாகையால் அவனை யெவ்விதத்தில் ஜயிப்போமென்றுவது நான் சிந்திக்கவில்லை; ஆகிலும, அநுபவயோக்யமான இந்த யௌவநம் வ்யர்த்தமாய்ப் போய்விடுகிறதே; இதுமறித்தும் வாராதே என்று இதுக்கே நான் சிந்திக்கிறேன் என்று ஸமுத்ரதீரத்தில் காற்று ஸுகமாக வீச அப்பொழுது ஸீதையை நினைத்துப் பெருமாளருளிச் செய்கிறார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

உத்தரஸ்ரீராமாயணம், ௪௦ - ம் ஸர்க்கம், ௧௬ - ம் ஶ்லோகம்.

———(:o:)———

௪௭.—ஸ்நேஹோ மே பரமோ ராஜந் த்வயி நித்யம் ப்ரதிஷ்டித:|
பக்திஶ்ச நியதா வீர பாவோ நாந்யத்ர கச்சதி|| ௧௬௦.

அர்த்தம்.—ராஜந் - ஸ்வாமியே! மே - எனக்கு, பரம: - உத்க்ருஷ்டமான், ஸ்நேஹ: - ப்ரீதியானது, த்வயி - தேவரிடத்தில், நித்யம்-எப்போதும், ப்ரதிஷ்டித:-ஸ்திரப்படுத்தப்பட்டது, பக்திஶ்ச-பக்தியும், நியதா - நித்யமாகச் செய்யப்பட்டது; வீர - சூரனானவரே! பாவ: - அபிப்ராயமானது, அந்யத்ர - வேறிடத்தில், ந கச்சதி - போகிறதில்லை.

வ்யா. (ஸ்நேஹோமேபரம:) "என்றனளவன்றால் யானுடை-யவன்பு". (ராஜநுக்ஷயி) இதுதானும் என்னால் வந்ததன்று, *அதுவு மவனதின்னருளே. (நித்யம் வ்யதிஷ்டத:) இன்றன்றாகில் மற்றொருபோது கொடுபோகிறோமென்ன; அங்ஙன் செய்யுமதன்று, யதி-யைப்பற்றி வருகிறதாகையாலே; "நின்னலாலிலேன்காண்" என்னுமாப்போலே. (பக்திஶ்ச நியதா) ஸ்நேஹமாவதென்; பக்தியாவதென்னென்னில்; பெருமாளை யொழியச் செல்லாமை பிறந்து வ்யதிரேகத்தில்முடிந்த வஶ்யதைநிலை ஸ்நேஹம்; பக்தியாவது-"நில்" என்ன "கூடாஷ" என்னும்படியாய் முறையறிந்து பற்றின இளையபெருமாள் நிலை. (வீர) தன்னைத் தோற்பித்த துறை. உம்முடைய வீரங்கொண்டு புறம்பே வென்றீரென்று இங்கு வெல்ல முடியாது. தானும் வீரனாகையாலே தோற்பித்த துறையைப் பிடித்துப் பேசுகிறார். (பாவோ நாந்யத்ர கச்சதி) என்னை மீட்டீராகிலும் என்னுடைய நெஞ்சை மீட்கப்போகாது. "அந்யத்ர" என்கிறது "மற்றொராளு முண்டென்பார்" என்னுமாப்போலே கொடுபோக நினைத்த தேஶத்தின்பேருங்கூடத் தனக்கு அஸஹ்யமாயிருக்கிறபடி. ௧௬௦.

தாத்பர்யம்.—பட்டாபிஷேகமான வநந்தரம் அவ்வவர்கள் கோரின அபீஷ்டங்களை அவ்வவர்களுக்குத் தந்து உமக்கென்ன வேணுமென்று திருவடியைப் பெருமாள் கேட்க, திருவடி, ஸ்வாமீ! தேவரீரைவிட்டுப் பிரிந்தால் நிற்கப்போகாத ப்ரீதியும், ஸ்வரூபாநுரூபமாக ப்ராப்தமான கைங்கர்யங் கொள்ளுகைக்குண்டான அபிநிவேசமும் தேவரீருடைய இந்த ராமாவதாரத்தையே எப்போதும் பற்றியிருக்கும். தேவரீருடைய ஸாமர்த்யத்தினால் என்னை மோக்ஷத்துக்குக் கொண்டுபோகத் திருவுள்ளம் பற்றினாலும் என்னுடைய மநஸ்ஸு இதைவிட்டு வேறெங்கும் செல்லமாட்டாது என்றுசொன்னார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.



தனிஶ்லோகம் முற்றிற்று.

